ஸ்ரீமதேராமாநுஜாய நம :

# ஆத்ம ரக்ஷாம்ருத ரஹஸ்யம்





இயற்றி வெளியிட்டவர் :

**லங்குபல்லி சின்னசாமி நாயுடு**
ஸ்ரீராமா ரைஸ்மில், லக்ஷ்மிபுரம் அண்டு P.O.
திருநின்றவூர் R. S.,
ஸ்ரீ பெரும்பூதூர் தாலுக்கா, செங்கல்பட்டு ஜில்லா.

ஸ்ரீ:





ஸ்ரீமதேராமாநுஜாய நம:



# ஆத்ம ரக்ஷாம்ருத ரஹஸ்யம்

இந்த நூல் பகவத் கீதை, பிரம்ம சூத்திரம், பாகவதம், பன்னிரண்டு ஆழ்வாராதிக ளியற்றிய பாசுரங்கள், பல உப நிஷதங்கள், பல பெரியோர்களியற்றிய நூல்கள் ஆகியவற்றை ஆராய்ச்சி செய்து வியாக்யானங்களுடன் எழுதப்பட்டுள்ளது. மேலும் இத்துடன் பாசுர நடையில் நூற்றி அறுபத்து ஒன்று இறைவன் துதிப்பாடல்களையும் இயற்றி வெளியிட்டவர்:

**லங்குபல்லி சின்னசாமி நாயுடு**
ஸ்ரீராமா ரைஸ்மில், லக்ஷ்மிபுரம் அண்டு P.O,
திருநின்றவூர் R. S.,
ஸ்ரீ பெரும்பூதூர் தாலுக்கா, செங்கல்பட்டு ஜில்லா.

கலி—5085 ருத்ரோத்காரி ௵, ஆடி மாதம்
(கி. பி. 1983 ஜுன் மாதம்)

---

அச்சிட்டோர்: நாவல் ஆர்ட் பிரிண்டர்ஸ்
சென்னை-600 014.

357

# பாராட்டுரை

**டாக்டர் அ. நாகலிங்கம், எம். ஏ. பிஎச். டி.**
தமிழ்த் துணைப் பேராசிரியர்
தருமமூர்த்தி இராவ்பகதூர்
கலவல கண்ணன் செட்டி இந்துக் கல்லூரி,
பட்டாபிராம், சென்னை - 600072.

தமிழ் அன்னையால் எனக்கு அறிமுகமானவர் அன்பர் திரு. ல. சின்னசாமி. முதுமைக் கோலத்தில் இவரிடம் நான் கண்டவை நூல்களைப் படிக்க வேண்டும் என்ற ஆர்வமும் எழுத வேண்டும் என்ற வேட்கையும்தான். உழவுக் குடியில் பிறந்த இவர், இளமையில் பெற்ற அறிவைப் பன்னூளாகத் தாய்மொழியாம் தெலுங்கு நூல்களையும், தமிழில் நாலாயிரப் பிரபந்தம் முதலியவற்றையும், சமஸ்கிருதத்தில் உள்ள வேத, உபநிடதங்களையும் படித்துத் தம் அறிவை வளர்த்துக் கொண்டவர்; புராணச் சொற்பொழிவாளர்கள் தம் பேச்சின் இடையே பெய்து விடும் தவறான கருத்துகள் சிலவற்றைப் போக்க வேண்டும் என்ற பெரு நோக்கம் கொண்டவர். தம்முடைய மும்மொழி அறிவும் மக்களுக்குப் பயன்பட வேண்டும் என்ற வேட்கையில், முதுமையில் நூல்பணியை மேற்கொண்டுள்ளார். இதற்கு முன்னர் ஸ்ரீ ஆண்டாள் திருக்கல்யாணம் என்பதை எழுதியுள்ளார்.

இப்பொழுது, இவருடைய முயற்சியில் வெளிவரும் புதிய நூல் ஆத்ம ரக்ஷாம்ருத ரஹஸ்யம். இந்நூல் வைணவ சமய—தத்துவக் கருத்து விளக்கங்களைப் பெற்றுள்ளது. தமிழ் விளக்கத்திற்கு இணையாகக் காணப்படும் உபநிடத சுலோகங்களையும் தெலுங்கு அறிஞர்களின் பாடல்களையும் தமிழ் எழுத்தில் ஆங்காங்கே சேர்த்துள்ளார். இதனால், தமிழர்கள் சமஸ்கிருத, தெலுங்குமொழி அறிவையும் பெற ஏதுவாகிறது; அறிஞர்கள் ஒப்பாய்வு செய்யவும் துணை செய்கிறது.

இந்நூலின் பிற்பகுதியில், நூலாசிரியர் தம் மனஉந்துதலால் கண்ணபிரான்மீது பாடிய பாடல்கள் (161) அமைந்துள்ளன.

இப்பாடல்களில் கவிதை ஓட்டமும், கருத்தும், ஆழ்வார் பாடல்களின் செல்வாக்கும் காணப்படுகின்றன, இவற்றைப் படிப்போர் இவர் பெற்ற இறை இன்பத்தைப் பெறுவர்.

முதுமையில் மக்கள்மீது கொண்ட பேரன்பால் தமிழ் அன்பால் இந்நூலை எழுதியுள்ள இறை அன்புத் தோழர் திரு. ல. சின்னசாமி அவர்களை மனமாரப் பாராட்டுகிறேன். இறை அருளால் இவர் மேலும் நூல்கள் பலவற்றை எழுதி, இந்திய மொழிகளின் வளர்ச்சிக்கும் அறிவுப்பரப்பிற்கும் சமயப் பண்பாட்டிற்கும் உறுதுணை செய்வாராக!

சென்னை-600072,
19-5-1983

அ. நாகலிங்கம்

# அணிந்துரை

எண்டிசையும் புகழ்ந்தேத்திக் கண்டு களிக்கும் வண்ணம் எழிலுடன் விளங்குவது தொண்டைவள நன்னாடாகும். இந்தத் திருநாட்டில் தெய்வ மணங்கமழும் திருத்தலங்கள் பலப்பல உண்டு. இத்திருத்தலங்கள் பலவற்றுள்ளும் என்றென்றும் நின்று நிலவும் ஏற்றம் பெற்று இலங்குவது திருநின்றவூர். இறைவனை உள்ளக் கோவிலில் வைத்து இடையருது வணங்கிய பூசலாரும், வந்தவர்க்கு வாரிவாரி வழங்கிய கொடைவள்ளல் காளத்தி யப்பரும், இந்த நகரில்தான் அவதரித்தனர். எம்பெருமான் இருதயாலீசனும், பக்தர்க்கு அனுதினமும் அருள்பாலிக்கும் பக்தவத்சலப் பெருமாளும் இத்திருத்தலத்தில்தான் கோயில் கொண்டுள்ளனர். பலவினை அகற்றும் சிவசக்தி ஆலயமும், அலக் கண் துடைத்து அருள்பாலிக்கும் இலக்குமி விநாயகர் திருக் கோயிலும், நீலமயில்மீது நின்றருள் புரியும் பாலமுருகன் சந்நிதியும் இந்நகரப் பகுதியில் எழிலுடன் விளங்குகின்றன.

''தொண்டை நன்னாடு சான்றோருடைத்து'' என்பது ஆன்றோர் திருவாக்காகும். இதற்கிணங்க இறைவன் திருவருளால் இப்பகுதி யில் கல்வியில் சிறந்த பேரறிஞர்களும், கணக்கற்ற பக்தர்களும், கவிவாணர்களும், சொல்லாற்றல் மிகுந்த சொற்பொழிவாளர் களும் வளமுடன் வாழ்ந்து வருகின்றனர். பக்தி நூல்கள் பல வற்றை எழுதும் நூலாசிரியர்களுக்கும் இங்கே குறைவில்லை. பரம் பரையாக நத்தமேட்டில் வாழ்ந்து வந்த மதிப்பிற்குரிய ஐயா, லங்குபல்ல சின்னசாமி நாயுடுகாரு அவர்கள் மேலே குறிப்பிட்ட உயர்நலம் வாய்ந்த பேரறிஞர்களில் ஒருவராகவும், பண்புகள் அனைத்தும் ஒருங்கு திரண்ட ஒப்பற்ற உருவமாகவும், இப்பொழுது இப்பகுதியில் வாழ்ந்து வருகின்றார்கள். அவர்கள் அனுதினமும் அரங்கனை வழிபடும் அன்புள்ளம் கொண்டவர்கள்; மறந்தும் புறந் தொழாத மாண்பினைப் பெற்றவர்கள். அவர்களது ஆராய்ச்சி யாலும், அறிவாலும், விடாமுயற்சியாலும் ஆத்ம ரக்ஷாமிர்தம் என்னும் இந்த அற்புதமான நூல் வெளியிடப்படுகின்றது.

நான்கு வேதங்கள், 108-உபநிடதங்கள், இதிகாசங்கள் புராணங்கள், பாகவதம், கீதை. நாலாயிரதிவ்யப் பிரபந்தம்' முதலிய பல்வேறு நூல்களை ஆராய்ந்து, கடைந்தெடுத்த நவமணிகள் போன்ற உயர்ந்த கருத்துக்களை யெல்லாம் ஒருங்கு திரட்டி, இந்த நூலின் மூலமாக ஐயா அவர்கள் அனைத்து மக்களுக்கும் உதவி புரிந்திருக்கிறார்கள். இந்த நூலினைக் கண்ணுறும் அன்பர்கள் இதை நன்கு கற்று, மனதில் பசுமரத் தாணிபோல் பதிய வைத்து, வாழ்க்கையிலும் பின்பற்றி வருவார் களேயானல், பாவமனைத்தும் நீங்கிப் பரமன் அருளுக்குப் பாத்திரமாவார்கள் என்பதில் ஐயமில்லை.

ஐயா நாயுடுகாரு அவர்களுக்கு நீடிய ஆயுளையும், நிறைந்த நற்பேறுகளையும் அளித்து, மேலும் மேலும் பல நல்ல நூல்களை இயற்ற அருள்புரியுமாறு மண்ணனைத்தும் புரக்கும் கண்ணபிரானை வணங்கி வழிபட்டு வேண்டிக்கொள்கிறேன்.

## வாழ்த்து

### நேரிசை வெண்பா

சாத்திரத்தின் சாரமெலாம் சங்கமிக்கும் ஓர்நூலாய்
ஆத்மரட்சா மிர்தம் அளித்திட்டான்—மாத்தமிழால்
மன்னுயிர்கள் கற்று மகிழ்ந்திடுக வாழியவே!
சின்னசாமிப் பெயரோன் சீர்.

புலவர், நல்லாசிரியர், பி. சுப்பையன்
திருநின்றவூர்,
18-12-82

ஸ்ரீ

# ஸ்ரீ கோபால கிருஷ்ணாய நம:

பெருமை வாய்ந்த பாரததேசத்தில் நம்முடைய ஸநாதன மதம் சைவ வழிபாடுகளிலும் தேவதா விச்வாஸத்தையும் அடிப் படையாக கொண்ட ஸாத்வீக மதம். இப்பேர்ப்பட்ட பெருமை களுக்குகாரணமாய் அமைந்துள்ள நம் மத நூல்களான வேதங்கள், உபநிஷத்துக்கள், புராணங்களே காரணமாகும். நம்முடைய எல்லா ஆன்மீக உயர்வைக் காட்டும் அரிய விஷயங்களைக் கொண்டுள்ள மேலே கண்ட நம் மத நூல்களை நம்முடைய பூர்வாசாரியார்கள் அவ்வப்போது இந்த மண்ணில் தோன்றி ஞானதானங்களை செய்து மக்களை சீர்திருத்தியுள்ளார்கள், வேத, உபநிஷத், புராணங்களில் உள்ள உயர்வான போதனைகள் எக்காலத்திற்கும் வழிகாட்டியாக இன்றுவரை நிலைத்திருப்பதுடன், வருங்காலத்துக்கும் தீப ஸ்தம்பத்திற்கொப்பாகப் பிரகாசத்துடன்விளங்கி வருவதிலும் நம் மதம் இன்று வரை அழியாமல் இருந்து வருவதே இதற்கு கண் கண்ட சாக்ஷியாகும்.

இப்பேர்ப்பட்ட பெரிய க்ரந்தங்களிலுள்ள ஞான விஷயங்களை எல்லோரும் எளிதில் தெரிந்து கொள்வது மனிதனின் சிற்றறிவில் மிக துர்லபமானது அவைகளை ஒவ்வொரு சமயங்களில் தொகுத்து பரிசீலனை செய்து ஜனங்களுக்குக் கொடுப்பதும் ஒரு தெய்வ வழி பாட்டுக்கு சமமாகுவதுடன், ஒரு மதத் தொண்டாகும்.

இந்த முயற்சியில் ஸ்ரீமான் லங்குபல்லி சின்னசாமி நாயுடு அவர்கள் ஈடுபட்டிருப்பது அவர் பகவான் பேரில் கொண்டுள்ள பக்தியின் காரணமாகும். பெருமுயற்சியுடன், உபநிஷத்வாக்யங் கள், ஆழ்வார்களின் பாசுரங்கள் இவைகளை நன்றாக உணர்ந்து, அதன் கருத்துக்களை தெளிவாகத் தெரிந்து கொண்டும் ஆத்ம ரக்ஷாம்ருத ரஹஸ்யம் என்ற நூலை ஜனங்களுக்கு பகவத் கைங்கர்ய மாகச் செய்துள்ளார்கள். பக்தியையே முதன்மையாகக்கொண்டு, அத்வைதம், விசிஷ்டாத்வைதம், துவைதம் போன்ற நம் தர்ம சித்தாந்தங்களின்ஸாரத்தையும், வினு விடைரூபமாகத் தெளிவாக எழுதியுள்ள பகவானின் லீலைகளை 161 பாசுரங்களாக எளிய

நடையில் எல்லோரும் அனுபவிக்கும்படியாக கவிதா ரூபமாகவும் செய்துள்ளார். தெலுங்கு தேசத்தில் பரம பக்தரான போதனு அவர்களின் பாகவதத்தை உள்ளபடி தமிழ் பாஷையில் தெலுங்கு பத்யங்களை தந்து உதவி அதன் கருத்துகளையும் கொடுத்துள்ளார். இதனால் ஸ்ரீபோதனு அவர்களின் பக்தி பரவசமான மனநிலையையும் அவருடைய கவிதைகளின் ருசியையும் நாம் அனுபவிக்க ஒரு வாய்ப்பை ஏற்படுத்தியுள்ளார். மிகுந்த ப்ரயாசையுள்ள இந்த காலத்தில் இப்பேர்ப்பட்ட மதசம்பந்தமான க்ரந்தங்களை ஆராய்ந்து அவைகளை வெளியிடுவது நினைத்துப் பார்க்கமுடியாத விஷயமாய் விட்டது. அப்பெருமுயற்சியில் அவரை ஈடுபடச்செய்து அவருடைய ஞானத்தினுல் ரசனை செய்யப்பட்ட கவிதைகளையும் அனுபவிக்க நமக்கு அளிக்கப்பட்ட ஒரு சந்தர்ப்பம் ஒரு ஸாதாரண விஷயமல்ல. அதை யாவரும் பயன்படுத்திக் கொண்டு பகவானின் க்ருபைக்கு பாத்திரர்களாக வேண்டுமென்பதுடன், இந்த நூலை பொதுஜனங்களுக்கு உபயோகமாகும்படி அளித்த ஸ்ரீமான் நாயுடு அவர்களுக்கு பகவான் எல்லா அபிஷ்டங்களையும் அனுக்ரஹிக்கவேண்டுவதுடன், இதை பயன்படுத்திகொள்ளும் அன்பர்களுக்கும் எல்லா மங்களங்களையும் பகவான் கொடுக்க பிரார்த்தனை.

K. ராமராவ்



ஸ்ரீமான் எம். ஏ. எத்திராஜுலு நாயுடு

எவர்சில்வர் வியாபாரம், மதருஸ்-7. பகவத் பாகவத கைங்கர்யங்களில் ஊக்கமுடையவர். சோளிங்கபுரத்தில் தேவராஜ கல்யாணமண்டபமும், நந்தவனமும், கட்டி பரிபாலிக்கிறார். கண்ணபுரத்தில், தமது மனைவியாரின் ஞாபகார்த்தமாக திருமங்கையாழ்வார் வாசல் என்று வளைவு கட்டியிருக்கிறார். திருவாளர் ல. சின்னசாமி நாயுடு அவர்கள் இயற்றிய இந்த ஆத்ம ரக்ஷாம்ருத ரஹஸ்யம். என்னும் அரிய நூலை வெளியிட ரூபாய் ஐயாயிரம் நன்கொடையாகத் தந்துள்ள பெருமைமிக்க இவ் வள்ளலாரின் தொண்டு பெரிதும் பாராட்டுக்குரியது.



ஸ்ரீமதி எம். ஏ. இ. பாக்கியலட்சுமி அம்மாள்

ஜனனம் 1919 தை மாதம் 18ஆம் தேதி., இறைவனடி சேர்ந்தது ஏப்பிரல் 15, 1968. கம்மவார் குலத்தின் மணி விளக்கு. பாகவதர்களிடம் ஆராத பக்தி வாய்ந்தவர். ஏழையர்க்கு இரங்கும் மனப்பான்மை பெற்றவர், சோளிங்கபுரம் அக்காரக் கனியிடம் பெருகிய பக்தி வாய்ந்தவர். இவரது ஞாபகச் சின்னமாக இந்த ஆத்ம ரக்ஷாம்ருத ரஹஸ்யம் வெளியிடப்பட்டது.

அஹிம்ஸா பரமோதர்ம



# விண்ணப்பம்

அடியேன் இந்த நூலைத் தனியாக ஏற்படுத்தி எழுதப்பிரயத் தனம் செய்யவில்லை. ஏனென்றால், ப்ரஸ்தானத்ரயம் என்னும் நூல்கள் (ப்ரஹ்ம ஸூத்திரம். பகவத் கீதை. உபநிஷதங்கள்.) இன்னும் பல நூல்கள், சாஸ்திரங்கள் முதலியவற்றை விசாரம் செய்ய அநேக வேதாந்த ஸாராம்ருதமான புராணங்களின் கருத் துக்கள் இருக்கின்றன. முன்னமே பெரியோர்களாகிய ஞானிகள் விசாலமான் மோக்ஷ மார்க்கம் செல்லுவதற்கு, வழிகாட்டியுள் ளார்கள். அவர்களுக்கு எதிரில் அடியேன் நூதனமாக செய்வது சூரியனுக்கு எதிரில் விளக்குப் போலவும், அநுமந்தனுக்கு எதிரில் தவளை குதிப்பது போலவும் இருக்குமெனக் கருதினேன். பிறகு வேதாந்த மார்க்கங்கள் சொல்லும் கருத்துக்கள் இருக்க. அவை களைவிட மேலான கருத்துக்களை நூதனமாகவும், சொந்தமான உபமானங்கள் மூலமாகவும் எழுத நான் கருதவில்லை. ஆனால், பழைய கருத்துகளை ஏன் எழுத வேண்டுமெனக் கருதுவீராகில், மஹரிஷிகளால் சொல்லப்பட்ட திவ்யநூல்களிலிருக்கும். ஸாராம் ருதங்களை பானம் செய்வதற்கு யோகிகளும் பரிபக்குவம் அடைய வில்லை என்பது என் கருத்து. இப்போது நமது தேசத்தில் ஒரு காலத்தில். ஆழ்வாராதிகள். ஆண்டாள் முதலானோர்கள் மோக்ஷ மார்க்கத்தை ஞாபகம் படுத்தி விட்டுப் போனார்கள். பிறகு, கோபன்ன (ரர்மதாஸ்) த்யாகன்ன (தியாகராஜஐயர்) பக்த போதன முதலானோர்கள். பரத்தை நாடும் பாடல்களாகப் பாடித் தந்தார்கள். இவர்களுக்கு முந்தி ராமாநுஜர் அரும்பாடு பட்டு மோக்ஷத்துக்குக்குப் போகும் மார்க்கமான திருமந்த்ரம் தேடித்தந்தார். ராமகிருஷ்ணர், விவேகானந்தர். முதலானோர் கள் உலகத்தில் ஞானமார்க்கத்தைப் புகுத்தினார்கள். இப்போது நமது தேசத்தில் ப்ரஹ்மநிஷ்டர்களும்: காருண்யதயா மூர்த்தி களும் தீவ்ர விரக்திவைராக்ய ஞானிகளும், ஜனிக்காத தோஷத் தினால், தற்போது மனிதர்கள் ஞானமற்று, துராச்சாரம். துர்வுர்த்திகள், பகவத்தூஷணம்—அதிக்ரமிப்பதால் அடியேன், வருத்தமடைந்தபோது இந்த நூல் பகவதஸங்கல்பம் உத்தரேகத் தால் இயற்றப்பட்டதாகும். இதற்குப் பல உதாரணங்கள்

கூறுகிறேன். ஒரு பாதை விசாலமாக இருப்பினும், சிலகாலம் மனித நடமாட்டம் இல்லாமல் போனல், அந்தப் பாதையில் புல்பூண்டு, கண்டக விருக்ஷாதிகள் ஆக்ரமணம் செய்துவிடும். பிறகு அந்தப் பாதை யாரோ ஒருவரால் பரிசுத்தமாகிறதல்லவா? மற்ருேர் உதாரணம் கூறுகிறேன். மண்ணெண்ணெய் காற்றின் உதவியால், விளக்கானது ப்ரகாசிக்கின்றது. காற்று குறைகின்ற போது காற்று அடிக்கவேணுமல்லவா? அதேபோல் பக்தி, ஞானம், தர்மாதர்மங்கள் மறந்து, துராச்சாரம். தலை எடுத்து பெருங் குழப்பத்தை உண்டு பண்ணுவதால் மக்களிடம் தற்போது ஞான உத்தாரணம் ஆகவேணும் என்று எண்ணி பெரியோர்களுக்கு அளவற்ற வந்தனோபசாரம் செய்து இந்நூலை இயற்றியுள்ளேன்.

"லோகா ஸமஸ்தா ஸுகிநோ பவந்து."

**லங்கு பல்லி சின்னசாமிநாயுடு**
ஶ்ரீராம ரைஸ்மில்
லக்ஷ்மிபுரம்
திருநின்றவூர் R. S.

# நூன்முகம்

வேதம் என்பது வடமொழிப்பதம் வித்தென்னும் தாதுவி லிருந்து பிறந்தது. இதற்கு ''வேத்ய நிதி வேத'' என்று அறிவிக் கின்றமையால்—வேதம் என்னும் பெயரைப் பெற்றது. இப்பதத் திற்கு அமரத்தில், வேதம், சுருதி, ஆம்நாயம் என்னும் மூன்று பதங்களும் ஒரே பொருளைக் குறிப்பதாகச் சொல்லப்பட்டிருக் கிறது. இவற்றுள், வேதம் என்பதற்கு நிஷ்பத்தி கூறுங்கால் ''விதந்திய நேநதர்மாதர்மா வித்வேத'' என்றதினுல் இதன் சஹாயத்தினுல் தர்மாதர்மங்களை அறிகிருர்கள். ஆகையால், வேதமாயிற்றென்றும் சுரூயத இதிசுருதி:''—என்றதனுல் கேட்கப் பட்டுவதனுல் என்ருல்—பரமேசுவரரிடமிருந்து நேராக கேட்கப் பட்ட படியால். சுருதி ஆயிற்றென்றும், சுரோத்ரேந்திரியத்தால் 'சப்தரூபமாக அறியப்படுகிறபடியால் ''சுருதி:'' ஆயிற்றென்றும்; 'ஆம்நாய தே பாரம்பர்யே ணேத்யாம் நாய:' என்ருல், பரம் பரையாய் அப்யசிக்கப்படுகின்றமையால்; தகப்பன் மகனுக்கும் மகன் பேரனுக்கும் இன்னும் இவ்விதமாகவே சந்ததிதோறும், சந்தை சொல்லி நிலைத்தபடியால்; ''ஆம்நாயம்'' என்ற பெயரைப் பெற்றதென்றும் பெரியோர்கள் சொல்லியிருக்கின்ருர்கள்.

இந்த வேதத்தை ஆதியில் இறைவனே இயற்றியதாக இன்றளவும் சிலர் எண்ணியிருக்கிருர்கள். எப்படி எனில் ஆதியில் இறைவனே ஆதிமனுஷனுகிய பிரம்மாவுக்கு நேராக உபதேசித்த தாகவும், அந்தப்பிரம்மாவானவர் அந்தக் காலத்திலிருந்த சில உத்தம ரிஷிகளுக்கும் தபோநிதிகளுக்கும் முனிவர்களுக்கும். உபதேசித்து வந்ததாகவும்; அவர்களுக்கு தம்தம் சிடர்களுக்கு வரிசைக் கிரமமாகப் போதித்து வந்தபோது சங்கனென்னும் ஓர் அசுரன் அந்த வேதத்தை திருடிக் கொண்டு போய் மறைத்து விட்டதாகவும் அதை மறுபடியும் மச்சரூபப் பெயரையுடைய பரமேஸ்வரர் மீட்டுக் கொடுத்து வைத்துப் பாதுகாக்கும்படி கட்டளையிட்டதாகவும்; ஆகவே, அன்று முதல் இந்த வேதத் திற்கு ரகஸ்ய சாதனம் என்னும் மறை என்ற பெயரும் வழங்கப் பெற்றதாகவும்; அத்தியயனம் செய்து ஆதரிக்க அநர்ஹாளான மூடர்வசம் அகப்படாதபடி. சுருதி, நாமக ஸ்ரூபமாக்கி சில மஹான்களுடைய ஹ்ருதயம் என்னும் மஹாரஹஸ்யமான பெட்டி யில் மறைத்து வைக்கப்பட்டும், அவர்களால் அவர் சந்ததிகளில் சாதுக்களானசிலருக்குமாத்திரம்சந்தை சொல்லிபாதுகாக்கப்பட்ட

தாகவும், சொல்லுகிறுர்கள். இப்படி இந்த வேதம் இறைவனு லேயே ஆதியில் போதிக்கப்பட்ட தென்பவர்களுக்கு சிரௌதிகள் என்று பெயர்.

சிலர் வேதத்தில் கண்ட சங்கதிகள் பலகாலங்களில் பலமஹான் களால் இயற்றபட்டவைகளாகும் அதற்கு உதாரணமாக விஸ்வா மித்திரர் ரிக்வேதம் 3வதுகாண்டத்திலுள்ள கீதங்களுக்குக் கர்த்தா ரவாகவும்: பாரத்துவாஜர், ரிக்வேதம் 6வது கண்டத்தின் சேர் மான கீதங்களுக்குக் கர்த்தாவாகவும், வசிஷ்டர் ஷ 7வது கண்டத்நின் கீதங்களுக்கு கர்த்தாவாகவும்; கீதசம்மதன் ஷ 2வது கண்டத்திலடங்கிய கீதங்களுக்கு கர்த்தாவாகவும் வாமதேவர் ஷ 4வது கண்டத்தின் கீதங்களுக்கு கர்த்தாவாகவும்; புதர் அத்திரியன் மற்ற சந்ததிகள் 5வது கண்டத்தின் கீதங்களுக்கு கர்த்தாவாகவும்; இருக்கிற தன்றியில்; அகஸ்தியர் காசியபர், ஆங்கிரசர், ஜமதக்னி, பராசரர், கௌதமர், ப்ரஹஸ்பதி, நாரதர், கண்ணுவர், மேதாதிதி, மதுசந்தனர், சுனசேபன்; குஸ்ஸன், சலியன், விரகங்கர், திர்தசயன் முதலானவர்கள் ஷவேதத்தின் மற்றகாண்டங்களின் கீதங்களுக்கு கர்த்தர்களாக இருப்பதாகவும் கூறப்படுகிறது. இவர்கள் யாவரும் மானவஜாதியர்களாகையாலும், இவர்களால் இயற்றப்பட்ட வேதவாக்யங்களாலேயே இறைவன் பெருமை வியக்தமாக விளங்கமாட்டாதாகையாலும்; இவர்களிலும் வல்லவர்களேயும் மற்றும் அநந்த அற்புதமான சராசரங்களையும் தாங்கிக் கொண் டிருக்கிற இந்த பிரபஞ்சமே இறைவருடைய பெருமையைப் பல மடங்கு பிரபலமாகக் காட்டுவதால், இந்தப் பிரபஞ்சமே வேத மென்றும் சொல்லுபவர்களுக்குப் பிரபஞ்சவேதிகள் என்று பெயர்.

இப்படி இந்த வேதத்தின் உற்பத்தியைப் பற்றிப் பலவிதமாக அபிப்ராயப்பட்டாலும் இதில் அடங்கியிருக்கும் பொருள்கள் மாத்திரம் இந்த பூவுலகில் பிரபலமாகவிருக்கும் எல்லா தேசத்த வர்களும் எல்லா காலத்தவர்களும் எல்லா ஜாதியாரும் எல்லா மாதஸ்தர்களும் ஒப்புக்கொள்ளத்தக்கனவாகும். இந்த வேதங் கள் புராதனமும் பெருமையும் பெற்றனவாகும். இகபரசுகத்துக்கு இன்றிமையாத தர்மானுஷ்டானங்களேப் பற்றியும், தத்வஞானத் தைப் பற்றியும், ஈசுவரோபாசனேயைப் பற்றியும், ஈசுவரனே அடைந்து ஆனந்தமடையும் வழியைப்பற்றியும் தெள்ளத் தெளியத் தெரிவிக்கும் சிறந்த சாதனமென்று சகல கால சகலதேச புத்திமான்களும் வேதத்தை அங்கிகரிக்கிறுர்கள்.

இந்த வேதத்தில் ப்ராம்மணம் என்னும் பாடல்களுக்குப் பத்தியங்கள் என்று பொருள். ப்ராம்மணங்களை வாசிப்பவர்கள், பிராம்மணர்கள் என்பார்கள். எந்த வகுப்பினர்களாக இருந்த போதிலும், பிராம்மணங்கள் வாசிப்பவர்கள் பிராம்மணர்களா வார்கள். (ப்ராம்மணம் என்பது ஸம்ஸ்கிருதபாஷை.)

சூத்திரங்கள் என்றால் சுருக்கமானவைகள் என்று பொருள் ருக்வேதம் என்பது=துதித்தல் ஸ்தோத்திரம் என்னும் துதிப் பொருளாம்.

யஜுர்வேதம் ஸம்ஸ்கிருதபாஷையில் யஜ் என்னும் பதத்திற்கு =யாகம், பலி என்பது பொருளாகும். இந்த யஜுர் வேதத்தில் சொல்லியிருக்கும் அஸ்வமேத புருஷ மேதாதியாகங்களில் உண்மை யாகவே குதிரைகளையும் புருஷர்களையும் பலிகொடுத்திருப்பதாகச் சிலர் எண்ணுகிறார்கள். அந்தோ! அது தப்பெண்ணம். அஸ்வமேத யாகத்தில் 609 மிருகங்களையும் பசுபக்ஷியாதிஜந்துக்களையும் 21 யாகஸ்தம்பங்களில் கட்டியும், வீட்டுக்குரிய சாதுவான மிருகங்களை கற்றூண்களுக்கு மத்தியில் கட்டியும், யாக ஸ்தோத்திரங்களைச் செப்புவார்கள். அதன் பிறகு அப்ராணிகளுக்கு எவ்விதவருத்தமும் இல்லாதபடி அவிழ்த்து விடும்படி விதிகள்இருக்கின்றன. புருஷமேத யாகத்தில் பற்பல குலஸ்தரான 185 புருஷரை 11 யாகஸ்தம் பங்களில் கட்டி ஒட்டலங்காரமான நாராயணபலி கீதங்களைப்பாடி முடிந்தபின் அப்புருஷர்களுக்கு எவ்விதமான வருத்தமும் கொடா மல் அவிழ்த்து விடும்படி விதிகளிருக்கின்றன. ஆகவே இந்த யாகங்களெல்லாம் கேவலம் ஒட்டலங்காரமேயொழிய யதார்த்த மான பலிகளல்லவென்று வியாக்யானங்களால் ஸ்பஷ்டமாகின்றது. அன்றியும் யாகத்தில் உண்மையாகவே பலி இடுகிறவைகளை உண்ணவேண்டுமென்ற விதி இருப்பது பிரத்யக்ஷம். புருஷர்களை யாக வஸ்துக்களாகக் கொண்டு சடங்குகளைச் செய்வோர், அந்த யாக புருஷருடைய மாம்சத்தையும் உண்ணவேண்டுமென்றல்லவா ஏற்படுகிறது. இதை யாரேனும் ஒப்புவார்களா? அதே வேதத்தில் மனுஷ மாமிசத்தை யுண்ணக் கூடாதென்று விதி இருப்பது பிரத் யக்ஷம். இந்த யாக பலிகள் எல்லாம் ஒட்டலங்காரமேயாம்.

ஆத்மரக்ஷாம்ருத ரஹஸ்ய மென்னும் இந்நூலானது மானிட வர்க்கமே போற்றத் தக்க சிறப்பினை உடையதாகும். தன்னிடத்தி லிருக்கும் தர்மா தர்மங்களை அறியக்கூடிய ஆத்மாவை இன்ன தென்று அறிவது மஹான்களுக்கு அரிதாகும்,

"ஏகைக மக்ஷரம் ப்ரோக்தம் மஹாபாதக நாஸநம்"

என்று பகவானை முழுமனதுடன் ஒருதர முரைத்தாலும் ஆயிரம் திருநாமங்கள் சொல்லுவதற்குச் சமமாகும். நமது பாரதநாட்டின் மக்கள் ஆத்மானுபவமாகிற அமுதத்தைச் சுலபமாகப் பருகுவதற் காக பேரருளாளனுகிய எம்பெருமான் வரப்ரசாதத்தினுலும் பெரியோர்கள் ஆசிர்வாதத்தினுலும் அடியேனுக்கு இந்த ஆத்ம ரக்ஷாம்ருத ரகஸ்யம் என்னும் நூல் இயற்றும் பாக்யம் கிடைத்தது. அடியேன் உள்ளத்தில் பல கருத்துக்கள் உதித்து அவைகளின் துணைக்கொண்டு உண்மை வாக்யங்களை ஆராய்ச்சி செய்தும், பாகவதம் விஷ்ணு புராணம், கீதாவாக்யம், உபநிஷத்வாக்யம், ஆழ்வாராதிகளியற்றிய பாசுரங்கள், நீதிவாக்யங்கள் முதலிய வற்றை ஆராய்ச்சி செய்தும் இந்நூலை எழுதியுள்ளேன்.

பக்த போதனு எழுதிய தெலுங்கு பாகவதம் பகவான் அருள் பெற்று மஹோன்னத ரஸபாகங்களுடன், அவதார புருஷர்களைப் பற்றி. அவர் இயற்றிய நூலாகும். இதிலுள்ள ரஸபாகத்தை இதுவரையில் தெலுங்கு மக்களே அனுபவித்து வந்தார்கள். அன்று முதல் இன்றுவரையில் தெலுங்கு பாகவதத்தை தமிழ்லிபி யில் எழுதி தமிழ் மக்கள் இதிலுள்ள பத்யங்களை அனுபவிக்கும்படி இது வரையில் தமிழில் எழுத யாருமே முன்வரவில்லை. எனவே இன்று எம்பெருமான் அருளால் பக்த போதனு ப்ரஹலாதனுன சுவைப்பற்றி இயற்றிய தெலுங்கு பத்யங்களான அதிஸ்ருங்கார ரஸோக்தியான வாக்யங்களை தமிழ் மக்கள் அனுபவிக்க வேண்டுமெனக் கருதி அடியேன் மிக ஆர்வமுடன், சுலபமான உரைநடையிட்டு எழுதும்படியும் பேரருளாளன் என் நாவினுல் நவிலும்படியும் எனக்கு உணர்வேற்றினுன். ஆகவே இந்நூலில் புகுத்திய பத்யங்கள் தமிழ் மக்களுக்கு மிகவும் கடின மாகத் தோன்றினுல் தெலுங்கு பேசும் வித்வான்களிடம் சென்று இரண்டொரு நாள் பழகினுல் தெலுங்கு வாக்யசப்தங்களை நன்ருக வாசிக்கமுடியுமென்று கருதுகிறேன். தமிழ்மக்களுக்காகவே இந்த நூலாசிரியனுகிய நான் மிகவும் சிரமப்பட்டு எழுதியுள்ளேன்.

நமது பாரத நாட்டில் பொது நூல் என்று பகருவதற்குப் பலபுராணங்கள் உண்டு. முக்தி மார்க்கத்தைப்புகட்டும் சாஸ்திரங் கள் யாவற்றிலும் மேலானவைகள். எனவே ஆத்மரக்ஷாம்ருத ரஹஸ்யம் என்னும் இந்நூலானது வாழ்க்கையின் குறிக்கோள் முக்தி என்பதை நன்கு தெளிவுறுத்துகிறது.

வாழ்க்கையின் குறி முக்தி ஆகும். அதற்கு உற்றநெறிகளாகிய யோகம், கர்மம், பக்தி, ஞானம் ஆகிய மூன்று யோகங்களும் முறையே இந்த நூலில் இடம் பெற்றுள்ளன. ஒரு பக்ஷிக்கு இரண்டு சிறகுகளும், ஒருவாலும் இருந்தால்'பறவை, ஆகாயத்தில் பறக்கும் அதே போல், ஜீவன் பரத்தை அடைவதற்கு, ஞானமும், பக்தியும், சிறகுகளாக அமைகின்றன. கர்மயோகமானது சமப் படுத்தும் வாலாகிறது. எல்லா சாதனங்களும் இம்மூன்றினுள். அடங்கி இருக்கின்றன. பரத்தை எண்ணியெண்ணி இகத்தை மறந்துவிடும்படி புகட்டும் நூல்களும் உண்டு. இகத்தில் கருத்து அனைத்தையும் வைத்து, மேலாம் நிலையாகிய பரத்தைப் புறக் கணிக்கும்படி போதிக்கும் புல்லிய நூல்களும் உண்டு. ஆனால், ஆத்மரக்ஷாம்ருத ரகஸ்ய நூலானது, இகம், பரம் இரண்டுக்கும் உரிய இடத்தை முறையாக வகுத்து வழங்குகிறது. வாழ்க்கையை நன்கு நடத்துபவன் பரத்துக்கு உரியவனாகிறான். இகத்துக்கும் நன்கு பயன்படுகிறான். உலகு மக்கள் போற்றும்படி வாழ்பவனா கிறான்.

மன அமைப்பில், செயல். உணர்வு அறிவு என்று மூன்றுபகுதி கள் உண்டு. மனோதத்வ ஆராய்ச்சியாளர்கள் அவைகளை அறிவின் கொள்கை என்று பகர்வர். உள்ளத்தில் இச்சாசக்தி, ஞான சக்தி, கிரியாசக்தி, என்று மூன்றுவித சக்திகளும் மனதில் மிளிரவேண்டும். உயிர்கள் அனைத்துக்கு மிடையில் ஒற்றுமை கண்டானபிறகு அவைகள் எப்பொருளால் ஆக்கப் பெற்றவை என்று ஆராய்ச்சி பண்ண வேண்டும்.

நமது பாரத நாட்டில் அத்வைதம், விசிஷ்டாத்வைதம், துவைதம் ஆகிய மூன்று மதவாதிகள் இருந்தார்கள். அவரவர்கள் மனப்பான்மை வேறு வேறு விதங்களாக இருந்தன. அத்வைத மதத்தைச் சேர்ந்தவர்களான மக்கள் எல்லாருக்கும் ஒரே வித மான நம்பிக்கை இருப்பதாகச் சொல்ல முடியாது. துவைத மதஸ்தர்களிலும் உட்பிரிவுகள் ஏராளமாக இருந்தன.

அத்வைத மதஸ்தர்கள் எது அத்வைதம் என்பதை விதவித மாக விளக்குவார்கள். அதே பாங்கில்தான் வசிஷ்டாத்வைதமும் அமைந்துள்ளது. விசிஷ்டாத்வைதம் என்னும். எல்லைக்குள் இருப்

பவர்களுக்குள்ளும்வேற்றுமைகளைக்காணலாம். ஒவ்வொரு மதவாதியினிடமும் வெவ்வேறு வேற்றுமைகளைக்காணலாம். ஒரு காலத்தில் மூன்று மதவாதிகளும் பாஷ்யம் எழுத முன் வந்தார்கள். அவர்கள் மூவரும் அவரவர் மதத்துக்கு ப்ரதிநிதியாகவும் இருந்தார்கள். நமது தத்வங்களைப்பற்றி பாஷ்யங்கள் எழுதும் போது ஒருவரை ஒருவர் தாக்கி எழுதியுள்ளனர். தத்வத்தை ஆராய்ச்சி செய்கின்ற போது முறையாகத்தாக்கிப்பேசுவதுபொருந்தும் எனலாம். வரம்பு மீறிப் பேசுவது யாருக்கும் பொருந்தாது. ஆனுல், அச்செயலில் சில பாஷ்யக்காரர்கள் வரம்பு கடந்து போயிருக்கின்றனர்.

வேதமென்பது உலக வாழ்க்கையைப் பற்றிப் பேசுவது ஆகும். சுவர்க்கம் முதலியவை மறுமை என்று பேசுவது வேதம். இந்திரியங்களுக்கும் மனதுக்கும் அப்பாலுள்ள பரத்தைப்பற்றி பேசுவது வேதாந்தம் என்பதாகும்.

இனி, துவைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் ஆகிய மூன்று மதங்களின் உட்கருத்துக்களையும் சுருக்கமாகத் தெரிந்து கொள்ள வேண்டும். 'பரம்' என்பது பேராற்றலும் பேரறிவும் படைத்துள்ளது. பூலோகத்தில் பந்த பாசங்களில் கட்டுண்டு கிடக்கும் ஜீவர்கள் கணக்கற்ற பிறவிகள் எடுக்கின்றனர். பிறவிகளின் வாயிலாக மேலான நிலைக்குப் போவதும் உண்டு. அவைகளில் மேல்நிலைக்குப் போவதும், கீழ்நிலைக்கு இறங்குவதும் உண்டு. புண்யம் மேல்நிலைக்கு எடுத்துச் செல்லும். பாபம் கீழ்நிலைக்குப் போகச் செய்யும், பகவானைச்சார்ந்திருந்து உலகு வாழ்க்கையில் விடுதலை அடைவது முக்தி. ஆனுல் அனைத்து உயிர்களும் முக்தி அடையவேண்டும் என்பது முக்கியமாகும். மூன்று மதவாதிகளின் கருத்துக்களையும் நாம் அறியவேண்டும். முக்திஅடைவதற்கும். பலபிறவிகள். எடுப்பதற்கும். தன்னைத்தானே பாழ்ப்படுத்துவதற்கும், குற்றங்களுக்கும், நற்றங்களுக்கும் மனிதன் ஒருவனே மூலகாரணமாகின்றுன். அறிவுடையவர்கள் செய்யும் அதர்மச் செயல்களால் கர்மத்துக்கேற்ற, பிறவிகள் கிடைக்கின்றன. மனிதனைத்தவிர தர்மா தர்மம் அறியாத உயிரினங்களுக்குப் பாபம் புண்ணியம் பற்றிக் கவலை இல்லை. மனிதனே பாப புண்ணியம் அனைத்துக்கும் உரியவன் ஆவான்.

## துவைத மதத்தின் கொள்கை

துவைதம் என்பதன் கருத்து ஜகத்-ஜீவன் பரம் மூன்று அனாதி ஆனவைகள் அவைகளுக்கு முடிவும் இல்லை. துவக்கம் இல்லை

என்பதாகும். பரம் பொருள் ஜகத்தையும் ஜீவர்களையும் ஆளு கின்ருர். ஆனல் ஜகத்தும் ஜீவனும் யாண்டும் பரத்துக்கு வேறு ஆனவைகள். ஜீவனுவது அவருடைய கருணையால் ஜகத்திலிருந்து விடுதலையடைந்து அவருக்குத் தொண்டனுய் ஆட்படுவது முக்தி முக்தியிலும் பரம் வேறு. ஜீவன் வேறு. என்பார்கள்.

## விசிஷ்டாத்வைதக் கொள்கை

விசிஷ்டாத்வைதம் என்பது ஒரு விசேஷத்தோடு கூடிய அத்வைதம். கடவுள் ஒருவர்தான் இருக்கிருர். அவருக்கு உடலாயிருப்பது ஜகத். அந்த உடலில் கணக்கற்ற உயிர்த்தத்வங்களாயிருப்பதுஜீவன். சூரியனிடத்திலிருந்துகிரணங்கள்எண்ணிக்கையில் அடங்காமல் தோன்றி வருவது போன்று. ஜீவர்கள் பரமாத்மாவின் கிரணங்கள் ஆகின்றன. பரமாத்மாவைப் பூரணனென்றும் அதில் தன்னை ஓர் அம்சம் என்றும் ஜீவன். சுவானுபவத்தில் அறிந்து கொள்ளுதல் முக்தி என்பதாகும். அதற்கு ஜீவன் தன்னைப் பரமாத்மாவிடத்துப்பிரபத்தி பண்ண வேண்டும். பிரபத்தி என்பதும் சரணுகதி என்பதும், அடைக்கலம் என்பதும் ஒரே கருத்தைக்குறிக்கும் சொற்களாகும். அவர் அருளால் ஜீவன் தன்னை அவருடைய ஓர் அவயவம் என்று அறிந்திருப்பது முக்தி என்பதாகும்,

## அத்வைதத்தின் கொள்கை

அத்வைதம் என்பது இரண்டற்றது எனப் பொருள்படுகிறது. ஜகத். ஜீவன் என்று சொல்லப்படுபவை வேறு பரம் வேறு அல்ல; உள்ளது ஒரே பொருள். அகண்டசத், சித், ஆனந்தம், தன்னை ஜகத் ஆகவும் ஜீவனுகவும் காட்டிக் கொள்கிறவல்லமை அதனிடத்து உண்டு. அந்த வல்லமைக்கு அதன் மாயாசக்தி என்று பெயர். பிரம்மமும் பிரமத்தினுடைய சக்தியும் இரண்டல்ல; அத்வைதம் என்பதற்கு இரண்டல்ல என்பது பொருள். ஜீவனிடத்திலுள்ள அஞ்ஞானத்தால் ஜகத் என்றும். ஜீவனென்றும் பேதம் அவனுக்கு தோன்றுகிறது. பிரம்மஞானத்தில் பிரம்மம் ஒன்றே யாண்டும் உள்ளது. நதி கடலில் லயமாவது போன்று ஞானமடைந்த ஜீவன் பரத்தில் கலக்கிருன். இது அத்வைதம் புகட்டும் முக்தி என்பதாகும். இதை இன்னும் நன்ருகத் தெளிவுப்படுத்துமிடத்து. கடலில் தோன்றி கடலில் நிலை பெற்றிருக்கும் அலையானது, தனது நாம ரூபத்தை அழித்து விடும் பொழுது பழையபடி கடலாகி

விடுகிறது. அப்படி முக்திநிலையில் ஜீவன் பரத்தில் ஒன்றுபடுகிறான் எனக் கூறுவர்.

இது அத்வைத நிலையை நன்கு விளக்குகிறது. மனிதனுக்கு சொப்பனமில்லாத அயர்ந்த உறக்கம் வருகிறது. அதில் ப்ரக்ஞை ஒன்றைத்தவிர பாக்கி எல்லாம் போய்விடுகின்றன. எல்லா அவஸ்தைகளுக்கும் பொதுவாகிய பிரக்ஞை யொன்றே அங்கு மிச்சம். அது அத்வைத நிலையாகும். இந்த மூன்று நிலைகளும் அக் ஞானத்தில் இருப்பது போன்று ஞானத்திலும் வந்து அமையக் கூடியவைகள். இவைகளில் எது பெரியது? எது சிறியது? எது சாத்யம்? எது அசாத்தியம்? என்று, மதவாதிகள் விரிவாக வும் விதவிதமாகவும் பேசிவருகிறார்கள்.

சாஸ்திரம் எல்லாருக்கும் பொதுவானது. அது எந்த மொழியில் இருப்பினும் பொருள் ஒன்றாகும் மூன்று மதவாதிகளும் பேசும் கருத்துக்கள் வேறு வேறாக இருப்பினும், கடவுளைப் புறக்கணிக்க வில்லை ·அவர்கள் கடவுளிடம் பக்தியில் சிறந்தவர்களாக இருந்தார் கள்.இவர்களில் இராமாநுஜர் விரிவான வ்யாக்கியானங்கள் எழுதி யவர் ஆவார். ஆகவே பாஷ்யக்காரர் என்று பேர் பெற்றார். எம் பெருமானார் என்றும் அவருக்கு ஒரு பெயருண்டு

ஒரு மனிதன் நன்மை அடைவதும் தீமை அடைவதும் ஒவ் வொருடைய செயல்களைப்பொறுத்ததாகும். மனிதன்வினைகளை நல் வினையாகச் செய்வதும் உண்டு. பாபச்செயலில் விழுவதும் உண்டு. விழுந்திருப்பவனிடம். கள்ளர் வருவதில்லை உறங்குபவனிடம் கள்ளர் வருவதுண்டு. அதே போல் மனிதன் தேஹேந்திரயங்களை விழிப்புடன் தன்வசம் செய்து பழகவேண்டும். தன்னிடம்இருக்கும் ஆத்மாவை இன்னதென்று அறிந்து தன்னைத் துன்பத்திலிருந்து மீட்பது தன் பொறுப்பாகும் என்று மனிதன் அறிவது நலம்.

உத்தரேதாத் மனாத்மானம் நாத்மானமவஸாதயேத்
ஆத்மை வஹ்யாத்மனோ பந்து ராத்மைவ ரிபுராத்மன:

தன்னைத் தன்னாலே உயர்த்திக் கொள்க. தன்னை இழிவுறுத் லாகாது. ஏனெனில், தானே தனக்கு நண்பன்; தானே தனக்குப் பகைவன்.

பிறப்பு இறப்பு என்னும் பெருங்கடலில் மூழ்கிப் போகாது தன்னைத்தானே மேல் நிலைக்குக் கொண்டு வரவேண்டும். மனிதன் அடைந்துள்ளசிறுமைக்கும் பெருமைக்கும் தானே பொறுப்பாளன். வேறு யாரும் அதற்குப் பொறுப்பாளர் அல்லர். பகைவன் தன்னைக் கெடுத்து விட்டான் என்று ஒருவன் குறைகூறுவதுண்டு. அப்படிக் கெடுப்பது ஒரு நாளும் பகைவன் அல்லன். பகைவனாகத் தோன்று பவனையே தனது சாதனத்துக் குற்ற துணையாக யோகி ஒருவன் எடுத்துக் கொள்ளமுடியும். அறியாமையினால் அல்லது சரியான வாழ்க்கை வாழாமையினால் மனிதன் தன்னையே கெடுத்துக் கொள் கிறான்.

இத்தகைய சாதனம் செய்வதற்கு. யோகி எப்படி இருக்க வேண்டும்?

யோகீ யுஞ்ஜீத ஸததமாத்மானம் ரஹஸிஸ்தித:
ஏகாகி யத சித்தாத்மா நிராசிரபரிக்ரஹ

—கீதை

யோகி யாருக்கும் தென்படாது தனியனாய் இருந்து கொண்டிருப்பான். எப்போதும் யோகசாதகன் எங்கே இருக்கிறான் என்பது வேறு யாருக்கும் தெரியலாகாது. கடவுளைத் தவிர தனக்குத் துணையாக வேறு யாரும் இல்லையென்று யோகி யுணர வேண்டும். இதற்காகத்தான் அவன் இரகசியனா கவும், தனியனாகவும் இருக்க வேண்டும் என்று இயம்பப்படுகிறது. உண்ணாவிரதம் இருக்கும்போதுதான் உணவு பற்றிய எண்ணம் அதிகம் வரும். அங்ஙனம் ஏகாந்தவாசத்தில்தான் அடங்காத மனது அதிகம் கூத்தாடும்: அப்படி மனதை அலைந்து திரியவிடலா காது. ஆனால், அதற்குஒருஉபாயம் உண்டு. உடலைக்கொண்டுமுறை யாக வேலை செய்யத் தெரிந்திருப்பது போன்று மனதிற்கு அலையும் படியான வேலையும் கொடாது அமைதியாக இருக்கும் படி மனதை அடக்கி வைக்கவும் தெரிந்திருக்க வேண்டும். அவன் தனக்காக எந்தப் பொருளையும் தேடக்கூடாது. இதுவே யோகியின் கொள்கையாகும்.

# முகவுரை

இப்பூவுகில் பிரபலமாக இருக்கும் பெரிய மதங்கள் ஒவ்வொன்றுக்கும் உரிய வேதம் அல்லது சமயக்கிரந்தம் இருத்தல், பிரத்யக்ஷம். அவைகளில் பெரும்பான்மையானவை கல்வியும் நாகரீகமும் விருத்தியாகும் இக்காலத்தில், அந்தந்த மதஸ்தர்களுடைய பாஷைகளிலும் வேறு பாஷைகளிலும் அச்சிடப்பட்டிருப்பதால், அந்தந்தமதஸ்தர்கள் அவைகளைப் பெற்றும் கற்றும் கேட்டும் தம் தம் மதசித்தாந்தங்களின் உண்மையையறிந்தும் அநுஷ்டித்தும் வருவதன்றியில்; ஏனையோரும் அம்மத நூல்களை அறிந்துய்யும்படி பகிரங்கப்படுத்தியும் அவைகளைத் தழுவி வரும்படி செய்து வருதல் பிரத்யக்ஷம்.

இப்படி பூலோகத்தில் பிரபலமாக இருக்கும் எல்லாப் பெரிய மதங்களிலும் புராதனமானதும் சிறந்ததுமான மதங்களில் ஒன்ருகிய, பிராசீன, மதமென்னும் நமது இந்து மதமும் புராதனப் பெருமை பெற்றதாகும். வேதம் ஸம்ஸ்கிருத பாஷையில் இருத்தல் பிரத்தியக்ஷம். அந்த ஸம்ஸ்கிருத பாஷைக்கு ஆதி முதல் நாளது வரையில் அதற்கென்று தனியான எழுத்துகள் ஏற்பட்ட காலம் முதல் நாகரி; கிரந்தம், தெலுங்கு, மஹாராஷ்டிரம் முதலான எழுத்துகளில் எழுதி வெளியாக்கக் கூடியதாக இருக்கினும்; மஹாபரிசுத்தமும் ரஹஸிய முமானதாக எண்ணிய இந்துமத வேதத்தை அனைவரும் படிக்கும்படி வெளியிடுதல் பாவமென்று பாமரத்வத்தால் சிலர் பயந்தும்: வேத அத்தியைனம் செய்யாமலும் கைவிட்டார்கள். வேதத்திலிருக்கும் தத்துவங்களும் சிலர் அஸ்வமேத யாகங்களில் பிராம்மணர்கள் செய்த அசஹ்ய காரியங்களும் வெளியாகி விடுமென்றும், சிலர் தம்மைப் போலவே அனைவரும் வேதத்தைப் படித்தால் தமது மஹிமைக்குக் கெடுதி வருமென்றும் துரபிமானங் கொண்டும் மூடி மறைத்து வைத்தார்கள். ஆயினும், மதாபிமானம் தேசாபிமானமுள்ள சிலர், பாமரருடைய பிதற்றலுக்குப் பயப்படாமலும், தம்மைப்போலவே ஏனையோரும் ஞானமடைய தேவநாகரி, கிரந்தம், மஹான்களானவர்கள் சில பாஷைகளில் வேதத்தின் சில பாகங்களை முக்கியமாக உபநிஷத்துக்களை அச்சிட்டு வைத்திருக்கிருர்கள். அவைகள் அந்தந்த பாஷைகள் தெரிந்தவர்களுக்கு உபயோகப்பட்டு வருவதன்றியில் ஐரோப்பாக்கண்டத்துக்கும் போய்; அங்கு இத்தாலி பிரான்சு ஜெர்மனி ஆங்கிலேயம் முதலான பாஷைகளில் மொழி

பெயர்த்தும் பதிப்பிக்கப்பட்டும் வருகின்றன. அவைகளின் பெருமையை ஐரோப்பா அமெரிக்காக் கண்டத்தார்களும் கண்டு ஆநந்தமடைந்து வருகிறார்கள்.

இப்படி இந்து தேச வேதத்தின் பெருமை தூரமான தேசங் களுக்கே துதிக்கப்பட்டு வரும் போது இந்த இந்துதேசத்தின் தென் பாகத்தில் வசித்து வரும் தமிழ் வாலிபர்களுக்கு அவர்கள் அநுஷ் டித்து வரும் இந்து மதத்தின் பெருமையைத் தக்கபடி மொழி பெயர்த்துப் பதிப்பித்த ஆதிவேதம் 'இல்லாதது பெரும் குறை வன்றோ?

இக்குறைவை நீக்கக் கருதியே இடைக்கிடையே சில புத்தி மான்கள் மத்யகாலங்களில் வேதாந்த உபநிஷத்துக்களின் சில பாகங்களை மொழி பெயர்த்து அச்சிட்டிருந்தாலும், அவைகள் பெரும்பான்மையும் அத்வைத விசிஷ்டாதுவைத சித்தாந்தங்களைச் சார்ந்தவைகளாகவும் வைதிக விஷயங்களில் உயர்தர ஞான மடைந்த சிலருக்கன்றி (ப்ராமணர்கள் தவிர) ப்ராமணர்கள் அல்லாதார், விவேகமுள்ள வாலிபர் முதலான சாதாரண ஜனங் களுக்கு, லேசமாத்திரம் கூட பயன்படாமலிருக்கின்றன. நமது இந்து மதத்தில் இதை விட வஞ்சகபுத்தி வேறில்லை. ஆகவேதான் மதமாற்றங்கள் தலை எடுக்கின்றன. அந்நியர்கள், நம்மிடம் கூறு வதை விளக்கிக் கூறுவேன். கடவுளின் தீர்த்தம் கொடுப்பதில் வஞ்சகம். கடவுளின் பிரசாதம் கொடுப்பதில் வஞ்சனை. வேதம் கற்பதில் வஞ்சனை, வேதங்களை நமக்குக் கற்பிப்பதில் வஞ்சனை. இது போன்ற வஞ்சனைகள் பலவற்றை நமது புகழத்தக்க இந்து மதத்தில் நமக்குச் செய்கிறார்கள். எங்கள் மதங்களில் வஞ்சனை இல்லை. எல்லோரும் ஒன்றென்று சொல்லி ஏமாற்றி மதமாற்றம் செய்கிறார்கள். ஆகையால், சகோதரர்களே! நமது இந்து மதம் புராதனமானது. கடவுளை அழகு பொருந்திய உருவங்களை ஒரு வியாஜமாக வைத்து பூஜித்த மதம். நமது இந்து 'மதம் போன்ற வேறொரு மதம் எந்த தேசத்திலுமில்லை. பெருமை வாய்ந்த மதத்தைக் கைவிட்டவன் பெற்ற தாயை மறந்தவனாவான். இந்துக்கள் தரத்தின்மேம்பாட்டைகாட்டுவதற்கே அடியேன் இரவு பகலாக உறக்கமின்றி பல வேதங்களையும், உபநிஷத்துக்களையும், கீதோபதேசத்தையும் ஆழ்வாராதிகள் இயற்றிய பாசுரங்களையும். ஆராய்ச்சி செய்தும் சில தெலுங்கு பத்யங்களை தமிழில் மொழி பெயர்த்தும், இடை இடையே பதிப்பித்து வந்தாலும்; அதைச் செயல்படுத்துவதற்கு தக்கபடி போஷிப்பாரின்றிப் பழுதாகின்றன.

பிறகு இந்துமதப்பெரியோர்கள். நமது வேதங்களையும் உபநிஷிதங்களையும். தமிழில் மொழி பெயர்த்து அச்சிட்டு வெளியாக்கத் துணிந்தார்கள். அப்படியும் தமிழர் துணியாத காரணம் தமிழ் பாஷையானது ஸம்ஸ்கிருத பாஷையிலிருந்து உற்பத்தியான தெலுங்கு பாஷை முதலான பாஷைகளைப் போலல்லாமல் இது தனியாக சுதந்திர பாஷையாக இருக்கிறது இதில் இலவ்கிக வைதீக விஷயங்களுக்கு இன்றியமையாத இலக்கிய இலக்கணநூல்களும். வாகடஜோதி ஷாதி நூல்களும் ஏராளமாக இருப்பதன்றியில்; திருவாசகம், தேவாரம், திருவாய்மொழி, முதலான சிறந்த பக்திரசாதி கிரந்தங்களும் ஏராளமாக இருப்பதனாலும், இவைகளின் கருத்தெல்லாம் இந்துமத வேதத்தின் சாராம்சமாக இருப்பதனாலும் இவ்வளவு சுலபமான பாஷையில் இருக்கும் கிரந்தங்களை விட்டு கஷ்டமான பாஷையாகிய ஸம்ஸ்கிருத பாஷையிலிருக்கும் ப்ராசீனமென்னும் இந்து வேதம் முழுதையும் மொழி பெயர்த்து அச்சிடுவது அவசியமில்லை என்று கைவிட்டார்கள் போலும். என்று கருதலாம்.

ஆயினும் காலவித்யாசத்தினால். இக்காலத்துத் தமிழ் வாலிபர்களில் சிலர் தம்முன்னோரியற்றிய அருமையான தமிழ் இலக்கிய இலக்கண பக்தி ஞான வேதாந்த நூல்களை உபேக்ஷை செய்து நாஸ்திகராகி நிம்மதியாகக் காலம் கழித்து வருகிறார்கள். சிலர் கிறிஸ்து முதலான மதஸ்தர்கள் தம்தம் மதகிரந்தங்களை செய்துஅழகாக அச்சிட்டுஅவைகளின் பெருமையைப் பற்றிபகிரங்கமாகப் பிரசங்கம், போதிக்கும் போது மதிமயங்கி அந்த மதங்களில் பிரவேசிக்கிறார்கள். அதனால், தம் பெற்றோர் உற்றோருக்கு மனஸ்தாபங்களும், மாச்சரியங்களும், சண்டை சச்சரவுகளுமுண்டாகி கோர்ட்டுக் கச்சேரிகளுக்குப் போய் வியாஜியங்கள் செய்தும் வருத்தப்பட நேர்கிறது. தமிழ் வாலிபர்களில் சிலர். கிருஸ்து முதலான மதஸ்தர்களுடைய உபதேசங்களைக் கேட்கும் போது, அவ்விதமான உபதேசங்களே நமது தேவாரம், திருவாய்மொழி கிரந்தங்களிலிருக்கக்கண்டு அவர்களுக்குக் காட்டினால்; கிருஸ்து முதலான மதஸ்தர் ஓ இத்தேவார திருவாசக திருவாய்மொழிகள் நவீனமான நூல்களென்றும். அவைகளில் ஒன்று சிவமதத்தைக் கண்டிக்கின்றது. மற்றொன்று விஷ்ணு மதத்தைக் கண்டிக்கின்றது. ஆகையால் அவைகள் இந்துக்களுடைய ஆதிவேதமல்லவென்றும் புதிதாகத் தமிழர்களுக்கு வழிகாட்டும் வேதமே

கிடையாதென்றும் சொல்லும் போது, தமிழ் வாலிபர்கள் கேட்டு மதிமயங்குகின்ருர்கள். அதற்கு திருஷ்டாந்தமாக அன்று ஒரு நாள் எனது குமாரன், C. இராமமூர்த்தி என்னும் வாலிபன் கிருஸ்து மதஸ்தர்கள். வீதிவீதியாக மதப்பிரச்சாரம் செய்கிருர்கள். நமது மதத்தைப் பற்றிப் பேசுவதற்கு நமக்கு அநேக கிரந்தங்களிருந்தும் இக்காலத்தில் வாலிபர்கள் அன்னிய மத மதப் பிரசாரத்தைக் கேட்டு ஆனந்திக்கிருர்கள். உள்சுவர் விட்டு புறம் பூசுவ துபோல் அன்னியர் பிரசாரத்தை மேன்மையாகச் சொல்லுகிருர்கள். 'அதனுல் மதமாற்றம் ஏற்படுகிறது. நமது மதத்தில் அநேக கிரந்தங்களிருக்கின்றனவல்லவா? அவைகளில் ஒன்றைப் புதுப்பித்தால் நன்ருக இருக்குமென சொன்னுன். ஆகவே, ஆத்மரக்ஷாம்ருத ரகஸ்யம் மென்னும் தலைப்பிட்டு ஆத்மா உஜிவிப்பதற்காகவும் நமது பிராசீனமத முன்னேற்றத்திற்காகவும் எழுதப்பட்டதாகும். அவன் கேள்வி பொருத்தமாகவும் இருந்தது. ஆகவே அவனுக்கும் அவனைப் போன்ற வாலிபருக்கும் திருப்தியாகவும், உதவியாகவும் இருக்கும் பொருட்டு; ப்ராசீனமான நமது வேதத்தில் முக்யமான உபநிஷத்துக்களை ஆராய்ச்சி செய்து பொருளுடன் பதிப்பிக்க எண்ணினேன். சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல் என்னும் விதியைத் தழுவி பிரபஞ்ச சிருஷ்டி விநோதத்தைப் பற்றியும் ஜீவாத்மாவின் விலக்ஷணத்தைப்பற்றியும், பரமாத்மாவையடையும் உபாஸனைபற்றியும் இந்து மததருமாநுஷ்டானங்களைப் பற்றியும் பல உபநிஷதங்களில் சொல்லியிருந்த சங்கதிகளைத் தொகுத்தும் இதை முதற்புத்தகமாக வெளியிடுகிறேன். மநுமுதலான தருமசாஸ்திரம். பகவத்கீதை பாகவதாதி புராணங்கள், பாரத ராமாயணுதி கிரந்தங்களிலிருக்கும்போது சக்தியங்களைத் திரட்டி பல பாஷைகளில் மொழி பெயர்க்கபட்டிருந்த ப்ராசீன வேதத்தின் சில உத்க்ருஷ்டமான உபநிஷத்துக்களையும், அவைகளுக்கு மஹரிஷிகள் செய்த வியாக்யானங்களையும், அவைகளின் கருத்துகளையும் சேர்த்து ஆத்மரக்ஷாம்ருத ரஹஸ்ய மென்னும் தலைப்பினுல் இந்நூலை இயற்றியுள்ளேன். இதைப் படித்துப் பார்க்கும் தமிழ் வித்வான்கள், இதன் உத்தேசத்தை ஆத்மா உஜ்ஜீவனம் என்று அங்கீகாரம் செய்வார்கள் என்று நம்புகிறேன். சத்யவேதங்கள் அடங்கிய புத்தகங்களை கிருஸ்துவர்கள் பைபில் என்று சொல்லுவார்கள்.

## பைபில் என்பதைப்பற்றி விளக்கம் (பொருள்)

பைபில் என்பது இங்கிலீஷ் பதம். இப்பதத்திற்கு மூலம் பிபிலியா அல்லது பைபிலியா என்னும் லத்தீன் மொழி ஆகும். இந்த பைபிலியா என்னும் பதம் புத்தகங்கள் எனப் பொருள் தரும். பன்மைபாலாய் பிபிலியா என்னும் கிரேக்கு மொழியிலிருந்து பிரிந்ததும் இதன் ஒருமை பாலாகிய பிபிலியோன் என்னுங் கிரேக்கு மொழியிலிருந்து உற்சவித்தது இந்த பிபோலியோன் என்னும் மொழியோ, புப்ரோஸ் என்னும் ஒருவகை மரத்தின் பட்டை என்னும் சொல்லிலிருந்து ஜனித்தது. ஆகவே பப்புரோஸ் என்னும் மொழியினின்று, பப்புருஸ் என்னும் லத்தின் மொழியும். இப்புருஸ் என்னும் மொழியினின்று பப்பியே என்ற பிரஞ்சு. மொழியும், பேபர் என்ற ஆங்கிலேய மொழியும் பிறந்தன. இந்தப் பப்பியே அல்லது பேபர் என்ற பதத்திற்கு தமிழில் கடிதம் அல்லது கடுதாசி என்று பொருளாகின்றது. பைபில் என்ற பதத்திற்கு கிருஸ்து வேதமென்று பொருள் கொண்டது பொருந்தாது. கிருஸ்து வேதங்களிலுள்ள சங்கதிகள் பலவருஷங்களாக வாய் மொழி போதகமாயிருந்தது, பிறகு எழுத்துக்கள் ஏற்பட்ட பிறகு அவைகளை முதல் முதல் மரப்பட்டைகளில் எழுதி பாடம் செய்யப் பட்டது. பிறகு அந்த மரப்பட்டைகளையே நாளாவட்டத்தில் மெலிசும் மேன்மையுமாகச் செய்தனர். அவைகளே பேப்பர் கடித மென்னும் பெயரைப் பெற்றன, அம்மரப்பட்டையே பிறகு புத்தகமென்று வழங்கி வரப்பட்டு கடைசியாக புத்தகங்களில் விசேஷ புத்தகமாகிய வேதத்துக்கு வழங்கப்பட்டதனுல் பைபில் என்கிற பெயரைப் பெற்றது. இப்பெயரை இப்போது வழக்கத்தில் வேத புத்தகத்துக்கு பொதுப் பெயராக வழங்கி வருகிருர்கள். ஆகவே பைபில் என்னும் பதம் கிருஸ்து மதஸ்தர்களுடைய வேதத் துக்கு மாத்திரம் உரியதாகாமல், குரானுக்கு—மகமதியர் பைபில் என்றும், பார்சிகள். ஐந்தவஸ்து—ஐந்து பைபில் என்றும், புத்த ருடைய திருபதாகத்துக்கு—புத்த பைபில் என்றும் சொல்லி வருவது சாதாரணமாக இருப்பதால், ஆதியில் எழுத்துகளில்லா மல் கேவலம் ஒவியருபமாகிய ஸம்ஸ்கிருத பாஷையிலிருந்த இந்து வேதத்தின் சாரசங்கிரஹத்தை இப்போது எழுத்துக் குறிகளால் கடிதத்தில் பதிப்பித்து புத்தகருபமாக வெளியில் விடுவதால் இதற்கு பைபில் என்று பெயரிடப்பட்டது. இப்பதப்ரயோகத்தை பற்றிஆக்ஷேபிக்கும்தமிழ்ப்பண்டிதர்கள் ஆங்கிலேய பாஷையையும்



ஸ்ரீமான் லங்குபல்லி சின்னசாமி நாயுடு
இந்நூலாசிரியர் எழுதியுள்ள நூல்கள்
ஸ்ரீ ஆண்டாள் திருக்கல்யாணம்
ஆத்மரக்ஷாம்ருத ரஹஸ்யம்
ஸ்ரீ கண்ணன் துதிப்பாடல்கள்
அஹிம்ஸ பரமோ தர்மம் (அச்சில்)

இப்போது பல மதஸ்தர்களுடைய வேதங்களை அந்தந்த மத மைபில் என்று ஐரோப்பிய இந்திய பண்டிதர்கள் பெயரிட்டுப் பதிப்பித்திருக்கிற கிரந்தங்களையும் பார்வையிட்டால் திருப்தியை யடைவார்கள் என்று நம்புகிறேன்.

## பிராஹ்மணர் என்று கூறுவது ஏன்? விளக்கம்

பிராஹ்மணங்கள் என்றால் ஸம்ஸ்கிரத்பாஷையில், பத்தியங் கள் வாசிக்கிறவர்கள் என்று பொருள். பிராஹ்மணங்களை வாசிக் கின்றவர் பிராஹ்மணர்கள் என்று சொல்லுவார்கள். அதேபோல் ஒவ்வொரு தொழில் செய்பவர்களையும் அத்தொழிலின் பெயர்களை இட்டுக் கூறுவார்கள்.

## மனிதர்கள் எல்லோரும் வேதங்கள் படிக்கவும் அத்தியனம் செய்யவும் உரிமை உண்டு என்ற விளக்கம்

பிராம்மணரல்லாதவர்கள் இப்படிப்பட்ட வேதாதி உபநிஷ தங்களை அச்சிடவும் வெளியிடவும் கூடுமோ என்று எண்ணுகிறார் கள். இந்தச் சந்தேகம் ஆதி முதல் நாளது வரையில் அநுஷ்டிக் கப்பட்டு வந்தனவா என்பதைப்பற்றி இந்துமத வேத உபநிஷத்துக் களை ஆராய்வோம்.

## பல ரிஷிகளிடத்தில் பேதமின்றி வேதங்களையும் உபதேசங்களையும் பெற்ற விளக்கம்

ப்ருஹதாரணியம் 2வது அத்யாயம் 1-வது பிராம்மணத்தில் "கார்கியர் என்ற பிராம்மணன் அஜாதசத்துரு என்ற அரசனை ஆசாரியனாகக் கொண்டு பிரம்மவித்தையை அப்யசித்ததாகவும் சாந்தோக்கிய உபநிஷத்து 5-வது அத்தியாயத்தில் சுவேதகேது ஆருணேயர் ஜயபாலி அரசனிடம் பிரஹ்ம்மவித்தையும் அப்யசித்த தாகவும் மேற்படி உபநிஷத்து 4-வது அத்தியாயத்தில் ஜான்சுருதி என்ற சூத்திரன் சக்குவியர் என்ற பிராம்மணரிடம்பிரமவித்தையை அபயசித்ததாகவும்;- ஐதிரிய பிராம்மணம் 5-வது சஞ்சிகையில் கவு ஷன் என்றவேடன் வேதாப்யாஸம் செய்ததுடன்ரிஷியுமாகியாகாதி கிருத்தியங்களில் பிராம்மணரோடு கலந்து மகிமை பெற்றதாகவும், ஜனகமகரிஷியிடம் சுகர் உபதேசம் பெற்றுக் கொண்டதாகவும் கூறப்படுகிறது. சதபத பிராம்மணம் தர்ச பூரணமாச பிரகரணத் தில் பிராம்மண க்ஷத்திரியர்கள் எல்லா மந்திரங்களையும் வேதவாக் யங்களையும் உச்சரிக்க வேண்டுமென்று கூறுவது பிரத்தியக்ஷம்.

அன்றியும் ப்ராம்மணம் என்றால் ஸம்ஸ்கிரத பாஷையில் பத்தியங்கள் என்று பொருள்படும். ப்ராம்மணங்களை வாசித்தவர்கள். ப்ராம்மணர்கள் என்று அழைக்கப்பட்டார்கள். ஆகவே ஒவ்வொருவரும் செய்யும் தொழிலைக் கொண்டு அவர்களை இன்னான் என்று பெயரிட்டுஅழைத்து வந்தார்கள். ஆகையால்; "நகுலேநஜாத்யாவ க்ரியாபிர்ப்ராஹ்மணோ பவேத் என்று பாரதத்தில் வைசம்பாயனர் கூறுவதைப் பார்க்கவும். ஜாதியினால் ப்ராஹ்மணனாக மாட்டான். கார்யத்தினால் ப்ராம்மணனாவான்.

### ப்ராஹ்மணன் தனியாகப் பிறக்கவில்லை ஒவ்வொரு மனிதனும் பிராஹ்மணனாகலாம்

என்று வைசம்பாயனர் மஹாபாரத்தில் கூறும் விளக்கம்.

சூத்ரோப் ராஹ்மணதாமேதி ப்ராஹ்மண ஸ்சைதி
ஸூத்ரதாம்.
ஸத்ரியாஜ் ஜாதமே வந்து வித்யாத் வைஸயாத் தன்தவச
—பாரதம்

சூத்திரன் பிராம்மணனாவான். பிராம்மணன் சூத்திரனாவான். க்ஷத்திரிய வைசிய சண்டாள ஜாதியில் பிறந்தவர்களும் இப்படியே ஆவார்கள். சண்டாளனும் ப்ராம்மணனாய் ஆகலாமென்று எல்லா சுருதி ஸ்மிருதிகளிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

### ஜாதியினால் விசேஷமொன்றும் இல்லை.

நவிஸே ஷோஸ்தி வர்ணானும் ஸர்வப்ராஹ்ம மிதம் ஜகத்
ப்ராஹ்மணா பூர்வஸ்ருஷ்டம் ஹிகர்மபிர் வர்ணதாம் கதம்.

என்று ஸ்ரீ மஹாபாரதம் சாந்தி பர்வம் 188வது அத்யாயத்தில் ஜாதியினால்ஒன்றுமில்லை. ஆதியில் இந்தஜகத்தெல்லாம்பிரம்மமாகவே இருந்ததென்று சொல்லியிருக்கிறது. கர்மத்தினால் ஜாதிபேத முண்டாயிற்றென்று சொல்லப்பட்டிருக்கின்றது. கிருதயுகத்தில் ஜாதிபேதமில்லையென்று வாயுபுராணம் எட்டாவதுஅத்தியாத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. எப்படிபட்டவனாயிருந்த போதிலும் நல்ல நடவடிக்கையினால் பிராமணனாவான். பிராமணனாயிருந்து நல்ல நடவடிக்கையில்லாவிட்டால் அவன் பிராமணனாகமாட்டான் சூத்திரனாய்ப் பிறந்து நல்ல நடவடிக்கையுடன் இருப்பானாகில். அவன் பிராமணனேயாவான்; இதற்கு சில வாக்யங்கள் புராணத்திலிருந்து இங்கு திருஷ்டாந்தமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன

வேதங்களை எல்லா வகுப்பினரும் ஆதியில் அறிந்து இருந்தால் ஒரு குறிப்பிட்ட வகுப்பினர் தான் படிக்கவேணுமென்று கூறுவது வஞ்சகச் செயலாகும் என்று கருதுகிறேன்.

தோழர்களே! வேதங்கள் இயற்றிய போது பங்கெடுத்துக் கொண்டவர்களில் சூதபுராணிகரும் ஒருவர் ஆவார். தவிர மஹான்களில், கண்ணப்பர், நந்தனர், நாயன்மார்கள், திருப்பாணாழ்வார், திருமங்கை யாழ்வார், குலசேகராழ்வார் திருமழிசை யாழ்வார் முதலானோர்களும் ஞானம் பெற்றூர்கள். அந்த ஞானத்தை நமது பாரத நாட்டில் பலப்படுத்தினல் ப்ரகிருதத்தி லுள்ள. சூத்திரர்களில் பலர் பெருமையைப் பெறுவார்களன்றோ? மேலும்,

## இந்து மக்கள் இந்து வேதம் வாசிக்க பேதமா? வெளிநாட்டவர்களுக்கு அச்சிட்டுக் கொடுக்கலாமா? என்பதைப்பற்றி விளக்கிக் கூறுவது.

நமது இந்து வேதத்தின் அநேக பாகங்களையும் உபநிஷத்து களையும் பார்சீ, பிரஞ்சு, ஜெர்மனி, இங்கிலீஷ் முதலான பாஷைக் காரர்கள். படிக்கும்படி ஏனைய நாட்டார் தம் தம் பாஷைகளில் பதிப்பித்து வெளியிடும்போது இந்த இந்து தேசத்திலேயே பிறந்தும் இந்து சமூகஹத்திலேயே வளர்ந்தும், இந்த இந்துமத சமய சாரங்களையே அநுஷ்டித்து இந்த இந்துமத வேஷபாஷாதிகளை ஸ்வரூப சின்னங்களாகக் கொண்டும், இந்த இந்துமத பெருமையை அனைவரும் அநுஷ்டித்து, இந்த இந்து தேசத்தை அலங்கரிக்க வேண்டுமென்ற தேசாபிமான மதாபிமான ஆவல் கொண்டும் நான் இதை அச்சிடவும் வெளியிடவும் துணிந்தேன். பாமரமக் களின் பிதற்றலுக்கு அஞ்சாது இதனை வெளியிடச் செய்த பகவானுக்கு நன்றி செலுத்துகிறேன். இவ்வித துரபிமானங் கொண்டவர்கள், என்னல் பதிப்பிக்கப்பட்ட ஆத்மரக்ஷாம்ருதரகஸ்யம் ஸ்ரீ ஆண்டாள் திருக்கல்யாணம் இயற்றியுள்ளேன். இத்துடன் 160 இறைவன் துதிப் பாடல்களும் எழுதியுள்ளேன். அதில் அடங்கிய வேதாந்த வாக்யங்கள் ஆகியவைகள் வாசித்துப் பார்த்தால், துரபிமானம் கொண்டவர்களுக்கு சமாதானம் கிடைக்கும். கடைசியாக இந்த புத்தகத்தின் மூலவாக்கியங்கள் புராதனமும் கஷ்டமுமான சம்ஸ்கிருத பாஷையைச், சேர்ந்ததாகும் இவற்றின் பொழிப்புரை விஷே உரை ஆகியவை, தமிழ் பாஷையில் அமைந் துள்ளன. தெலுங்கு பத்தியங்களுக்குத் தமிழ் உரை எழுதப்பட்

டுள்ளது, இம்மூன்று பாஷைகளிலும் விசேஷஞானம் பெறுதவன் நான் பண்டு முதல் இன்று வரையில் நமது வேதம் வீட்டிலும் வெளியிலும் பேத புத்தியுடைய ப்ரகிருதிகள் தவிர மற்றவர்கள் படிப்பதும் கற்பதும் தோஷமென்று சொல்லும் பிதற்றலுக்குத் தயங்காமல் ("நகுலேநஜாத்யாவ ப்ரியாபிப்ராம் மனுேபவேத") என்ற முன்னேர்கள் கொடுத்த ஆதாரங்களைக் கொண்டு, இந்நூலை இயற்றுவதற்குத் துணிந்தேன், பல ஆதாரங்களைக் கொண்டு அம்பலமேறத் துணிந்தேன். நமது நாட்டில் எத்தனை ஞானிகளிருந்தும் வேதம் எல்லாருக்கும் பொது என்னும் பல ஆதாரங்களை பார்த்தும் வேத பாராயணம் பேத புத்திப்ரருதிகளுக்கு தான் என்று எப்படி ஒத்துக் கொண்டார்களென்பதைப் பற்றி எனக்கு ஓர் ஆவேசம் ஏற்பட்டது. ஆகவே இந்நூலில் பெரியோர்கள்குறை குற்றங்கள் கண்டு இன்னவைகளைச் சேர்க்க வேணும் என்று சொன்னல் இரண்டாம் பதிப்பில் சேர்க்கிறேன். பஞ்சவடியில் தனித்திருந்த பிராட்டியைஇராவணன் மாயையினுல்இலங்கைக்குக் கொண்டு போய் அசோகவனத்தில் சிறைவைத்தான். பின்பு இராம பிரானுல் தூது விடப்பட்ட சிறிய திருவடி, தாயாரைத் தேடிக் கொண்டு இலங்கைக்கு சென்றபோது இலங்கையின் அமைப்பும் அழகும், அந்தப்புரமும் வீதிகளின் அலங்காரமும் கண்டான். அங்கு வசிக்கும் மக்களின் குணங்களையும் கண்டான். ஒரு அசோக மரத்தின் கீழ் அநேக அரக்கிகளையும் ஏகாஷி கோர அரக்கர்களையும் கொண்டு காவலில் வைத்திருக்கும் தாயாரைக் கண்டான். திரிசடை என்னும் மங்கையையும் அவளுடைய நுண்ணிய அறிவையும் அவள் தாயாரின் துயரத்தைப் போக்குபவளாயிருந்ததையும் கண்டான். விபீஷணன் தசக்ரீவனின்,அநுஜோப்ராதாஎன்பதையும் நற்குணமுடையவனென்பதையும் அறிந்தான்.

## தாயார் இராம தூதனென்று நம்புவதற்கு இராம பிரான் கூறிய அடையாளமும் கையில் கொடுத்த கணையாழியையும் காட்டுதல்

பாசுரம்

நெறிந்த கருங்குழல் மடவாய் நின்னடியேன்விண்ணப்பம்
செறிந்தமணிமுடிச்சனகன் சிலையிறுத்து நினைக்கொணர்ந்த
தறிந்து அரசுகளை கட்ட அருந்தவத்தோனிடை விலங்க
செறிந்நசிலைகொடுதவத்தைச் சிதைத்ததுமோரடையாளம்.

## உரை

கருத்த கூந்தலுடைய தாயே, உமது அடியவனான என்னுடைய விண்ணப்பம் கேட்டருள வேணும். சிலை அறுத்து உம்மைத் திருமணம் செய்து கொண்டதும் ஓர் அடையாளம். (சிலை என்பது = வில். சிவதநுசு என்றால் = வில்லு பத்தை என்று பொருள். சிவ = பத்தை. தநுசு = வில். வில்லுபத்தை (ருத்ரதநுசு என்பது சரியான பொருளாகாது) (சிவகரம் என்றால் = கையில்வில் பத்தையுடையனென்று பொருள்) மல்லிகைப் பூவினால் தொடுக்கப்பட்ட மாலையினால் நீர் இராமபிரானைக் கட்டியதும் ஓர் அடையாளம். கைகேயிக்கு தன் கணவனான தசரதன் கொடுத்த மூன்று வரங்களை மறுக்க முடியாமல் உயர் குலத்திற் பிறந்த குமாரனே! காட்டிலே பதினான்கு வருடம் வஸிக்கும்படி போவாய்; என்று தசரதன் சொல்லியதோர் அடையாளம்.

கங்கைக் கரையில் குகனோடு தோழமை கொண்டது ஓர் அடையாளம். சித்திர கூடத்தில் பரதாழ்வான் இராமபிரானை அயோத்திக்கு அழைத்துக் செல்ல சரணாகதி அடைந்தது ஓர் அடையாளம். சித்திரக் கூடத்தில் சிறு காக்கை உனது முலையைக் குத்த இராமபிரான் காகத்தின் மீது கோபங் கொண்டு அதன் ஓர் கண்ணை அறுத்தது ஓர் அடையாளம் சூர்பனகையினால் தூண்டப்பட்டு உம்மைக் கவர்ந்து செல்லக்கருதிய இராவணனது கட்டளையினால் அவனுக்கு மாமன் முறையான மாரீசன் என்ற ராக்ஷஸன் மாயையினால் பொன் மானுருவங்கொண்டு தண்டகாரணியத்தில் பஞ்சவடியிலே உனக்கு எதிரில் சென்று உலாவுகையில், இளைய பெருமாள் இது மாயமானென்று சொல்ல, நீர் கேட்கவில்லை. உமது வேண்டுகோளின்படி, அதனைப் பிடிப்பதற்கு இராமபிரான் நெடுந்தூரம் தொடர்ந்து சென்றும், பின்னும் ஓட்டம் காட்டிய அதனை மாயமானென்றறிந்து அம்பெய்தி வீழ்த்தினார். அம்மாரீசன் இறக்கும் போது ஹா! ஸீதா! ஹா! லக்ஷ்மணா! ஹா!! என்று இராமபிரான் கதறுவது போலக் கூப்பிட்டான். அதனைக் கேட்டதும் நீர் இராமபிரானுக்கே ஆபத்து வந்துவிட்டதென்று பலவாறு இளையபெருமான்மீது கடுஞ்சொற்களைச் சொல்ல அவர் உடனே உம்மைத் தனியாக விட்டுச் சென்றதும் ஓர் அடையாளம்.

பெருமாள் உம்மை தேடிக் கொண்டு வரும் போது வழியில் சுக்ரீவமஹாராஜனோடு தோழமை பூண்டார். அவ்விருவரும் ஒற்றுமையாக ஒவ்வொரு திக்குக்கும் வானரங்களை அனுப்பும் போது

சுக்ரீவமஹாராஜன் என்னிடத்தில் விசேஷ அபிமானம் வைத்திருப்பதை அறிந்து இவனுலே நமது காரியம் கைக்கூடும். என்று என்னிடத்தில் இராமபிரான் விசேஷ கடாக்ஷம் செய்தருளி இவ்வடையாளங்களைச் சொல்லி அனுப்பியதால் நான் இவ்வடையாளங்களைக்கூறினேன்என்றான். தன்துராமாங்கிதமான மோதிரத்தையும் காட்டினுன். உடனே ஸீதை ஆஞ்சநேயருக்கு சிரஞ்சீவியாக இருக்கக் கடவாய் என்று கூறி, தாயார் லங்கையிலிருப்பதாக சுவாமியிடம் சொல்லும்படி விடை கொடுத்தனுப்பினுள். உடனே ஆஞ்சநேயர் ஆகாய மார்க்கமாகக் கிளம்பி சமுத்திரம்தாண்டி இராமபிரானிடம் வந்து, கரங்களைசிரமேற் கொண்டு ஸீதையைக் கண்டேன் கண்டேன் கண்டேன் என்று கூவினுன். உடனே இராமபிரான் லங்கையில் மக்கள் எவ்வித குணங்கள் படைத்தவர்கள் என்பதை எனக்கு விளக்கவேண்டும் எனக் கேட்ட போது வாயுபுத்திரன் கூறுகிருன்: இராமரிடம்.

## இராமரிடம் அனுமான் இலங்கையைப் பற்றியும், அங்கு வசிக்கும் மக்களின் செயல் பற்றியும் கூறுவது.

'ஓ' இராமசந்திரப் பிரபு! இலங்கையில் ஒவ்வொரு இல்லத்திலும் வேதபாராயணம் நடக்கிறது, தேவதா பூஜைகள் நடக்கின்றன. சதா வேதகோஷங்கள் நடக்கும் லங்காப்பட்டண வீதிகள்தோறும் தோரணங்கள் மிக அழகுடன் விளங்குகின்றன. அரசன் சொன்ன படி குடிகள் நடந்து வருகிருர்கள் என்று கூறினுன். அப்போது இராமபிரானுக்கு ஒரு சந்தேகம் ஏற்பட்டது, பக்தர்களை எப்படி ஜெயிக்க முடியும் என்று தனது கையிலிருக்கும் கோதண்டத்தைக் கீழே வீசி எறிந்து விட்டார். இதென்ன ஆச்சர்யம்! கார்யம் பங்கமாகி விடுமோ என்று பயந்து சுக்ரீவ மகாராஜா, ஆஞ்சநேயனை திரும்பிப் பார்த்தார். சுக்ரீவமகாராஜாவின் நோக்கத்தை அறிந்து 'ஓ இராமசந்திரபிரபு லங்கையிலுள்ள மக்கள் அனைவரும் ஜீவகாருண்ய மற்றவர்கள். மாம்சபக்ஷர்கள். ஹிம்சைச் செய்பவர்கள் என்ருன். உடனே இராமப்பிரபு கீழே இருந்து கோதண்டத்தைக் கையில் எடுத்துக் கொண்டு இனி நொடிப் பொழுதில் லங்கைமக்களையும், அரசனையும் ஒழிப்பேன் என்று கூறினுர். இலங்கையில் ஒவ்வொரு இல்லத்திலும் வேதபாராயணமும். தேவதாமந்திரங்களும் நடக்கிறது என்று சொன்ன போது கோதண்டத்தைக் கீழே எறிந்து விட்டார். ஜீவகாருண்ய மற்றவர்கள். மாம்சபக்ஷர்கள் என்று விளக்கினபோது கோதண்

டத்தைக் கையில் எடுத்துக் கொண்டார். ஆகையினாலே நமது இந்து மக்கள் புராதனமான வேதங்களையும் தேவதா மந்தரங் களையும் அனைத்து மக்களும் ஓதுவார்களேயானால் நமது நாட்டை அந்நியர்களால் ஜெயிக்க முடியாது என்று புரிகிறது. அண்ணல் காந்திமகான் அஹிம்ஸா தர்மத்தை நடத்திக் காட்டினார். அன்னி யரிடமிருந்த நாட்டை நமக்கு அவர் வாங்கித்தந்தது சான்றாகும். அப்படிப்பட்ட மகானை மறந்து விட்டார்கள். வேதபாராயணம் செய்வதில் ஒருவருக்கு ஒருவர் பேதம்சொல்லி நமதுநாட்டின் பெரு மையைக் குறைத்து விட்டார்கள். நமது நாடு தேவ நாடு ஆகும். இப்போது அரக்கர் நாடாக மாறிவருகிறது. மக்கள் வேதங்கள் வாசிப்பதனாலேயும், தேவதா மந்திரங்கள் சொல்வதனாலேயும் இல் வாழ்க்கை நடத்த முடியாது என்று கருதுவது அறியாத் தன்மை யாகும். செயலுக்குக் காரணம் ஸர்வேந்திரியங்களாகும். வேத பாராயணமும், மந்திரங்களும் மனதுக்கும், வாக்குக்கும் வசப்பட் டனவாகும் என்று அறியவும். வேதவாக்கியம். தேவதாமந்திரங் களின் பெருமையை காட்டுவதற்காகவே இந்த உபமானம் எழுதப் பட்டது. பாமர மக்கள் வஞ்சக வார்த்தைகளைக் கேட்டு நமது ப்ரா சீன ஸம்ஸ்கிருதத்தில் எழுதிய வேதங்களை கைவிடாதீர்கள் என்று நமது மக்களை வேண்டுகிறேன். ஸம்ஸ்கிருதபாஷை எல்லாபாஷை களையும் விட மிக சுலபமாக இருக்கும் என்பது என்னுடைய கருத்து.

இப்படிக்கு

**கம்மவார் குலம் லங்குபல்லி சின்னசாமி நாயுடு**

ஸ்ரீராமா ரைஸ் மில்

லக்ஷிமிபுரம், திருநின்றவூர், R. S.

ஸ்ரீபெரும்பூதூர் தாலுக்கா

செங்கல்பட்டுஜில்லா.

# ஆத்ம ரக்ஷாம்ருத ரஹஸ்யம்

ஸ்ரீ மநோராமாநுஜாய நம:



யந்யஸ்ரீ கருணார்ணவஸ்ய கருணாலேஸேந பாலோத்ருவ:
ஸ்வேஷ்டம் ப்ராப்ய நமார்யதாம. நமகாத்ரஜ்ஞோ
ऽப்ய விந்தச்ரியன்
யாதாமுக்தி மஜாமிலாதி பதிதா: ஸைலோऽபி பூஜ்யோऽ
பவத்
தம்ஸ்ரீமாதவ மாஸ்ரிதேஷ்டதமஹம் நித்யம் சரண்யம்பஜே

கருணாமூர்த்தியான எந்த மஹானுடைய க்ருபாகடாக்ஷத்தினால் சிறுவனான த்ருவன் தனது எண்ணம் பூர்ணமடைந்து மஹோன்னதஸ்தானம் அடைந்தானோ. எவனுடைய தயையினால் குசேலன் மிக ஒப்பற்ற செல்வம் பெற்றானோ. எவனுடைய கடாக்ஷத்தினால் அஜாமீளன் முதலான பெரியோகள் ஸத்கதி அடைந்தார்களோ! எவனுடைய க்ருபையினால் கோவர்த்தனகிரி பூஜிக்க பெற்றதோ, ஆஸ்ரிதர்களான பக்தர்களின் அபீஷ்டங்களை பூர்த்தி செய்யும் சரணாகதவத்ஸலனான அந்த பரமாத்மாவை நான் நிரந்தரமாக சேவிக்க கடமைப் பட்டவனாக இருக்கிறேன்.

## ஆசார்ய லக்ஷணம்

ஆசார்யோ வேதஸம்பன்னோ விஷ்ணுபக்தோ விமத்ஸர:
யோக யஜ்ஞோ யோகநிஷ்டஸ்ச ஸதா
யோகாத்மக ஸ்ஸுசி:

ஆசாரியன் வேதஸம்பன்னனாகவும் பரம பக்தனாகவும் விவாத மற்றவனாகவும் யோகம் அறிந்தவநாகவும் யோக நிஷ்டத்தில் இருப்பவனாகவும் ஸதா யோகாத்ம சொரூபனாகவும் உள்ளும் புறமும் நிர்மலமானவனாகவும் இருக்க வேண்டும்.

## சிஷ்யலக்ஷணம்

உபதேஸ க்ரமோ ராம, வ்யவஸ்தா மாத்ரபாலனம்
ஜ்ஞாநஸ்ய காரணம் சுத்தா, சிஷ்ய ப்ரஜ்ஞைவ கேவலா

ஓ ஸ்ரீராமா உபதேசம் பெற்றதால் ஞானம் வருவதில்லை. ஞானசித்திக்காக சிஷ்யனை பராமரிப்பது முக்ய காரணமாக இருப்பது. ஆகவே, சிஷ்யனுக்கு விஷயவைராக்யம் மகத்தான ஜ்ஞானமிருக்க வேண்டும், என்று, வாசிஷ்ட இராமாயணம் சொல்லுகிறது பெரியோர்களிடத்தில் பணிவு பெருதவன் தேஹேந்திரயாதிகளை அடக்க இயலாது. சாது சஜ்ஜனர்களிடம் பழகாதவன் புவி வாழ்க்கை கடந்து செல்ல முடியாது. எவன் இந்த சரீரத்தினுலே ஜ்ஞானம் பெறமுயலாதவன் பரத்தை நாட முடியாது

## யோக தத்வோபநிஷத் பிரமாணம்

''விஷ்ணுர்நாம மஹாயோகீ மஹாபூதோ மஹாதபா:
தத்வமார்க்கே யதாதீபோ த்ருஸ்யதே புருஷோத்தம:

புருஷோத்தமனுன மஹாவிஷ்ணு, மஹாயோகியாயும், சகல பூதங்களுக்கும்ஆதாரமாயும், விசேஷ தபஸ்யாயும், தத்வமார்க்கங்களுக்கெல்லாம் தீபம்போல் பிரகாசித்துக் கொண்டிருக்கிருர்.

''ஜன்மம்ருத்யு ஜரா வியாதிநாஸநம் ம்ருத்யு தாரகம்
நாநா மார்கைஸ்து துஷ்ப்ராபம் கைவல்யம் பரமம்பதம்''

பக்தி ஞானயோக மார்க்கங்களினுல், ஜீவர்கள் மாயையிலிருந்து விடுபட்டு, கிழத்தனம் வியாதிகள் பிறப்பு இறப்புகளில்லாமல் முக்தியை அடைவதே பரமபதமென்னும் கைவல்யமேயாம்.

''யுக்தி யுக்தமுபா தேயம், வசனம் பாலகாதபி
அன்யத்ருணமிவ தியாஜ்ய மப்யுக்தம் ப்தம ஜன்மனு''

சிறுவன் பகர்ந்தாலும் அந்த வாக்யம் யுக்தமாயிருந்தால் அதை சிரமேற்கொள்ளவேண்டும்; யுக்தமில்லாத வார்த்தைகள் பிரம்மதேவனே சொன்னுலும் கூட த்ருணமாக கருதி ஏற்காமல் விட்டு விடவேண்டும் என்று வசிஷ்ட மாமுனி உபதேசம் கூறப்பட்டது. ஆகையினுலே இக்காலத்துராஜயோகிகள் சிலர் நிக்ருஷ்டமான துராசாரங்கள் செய்தாலும் நான் பரிசுத்தமானவன், எனது அனுபவம் என்று கூறுவது பொய்யானவைகள் எனவும்,

# சரீரத்திரயம்

1. ஸ்தூலம், சூக்ஷமம் காரணம் என்று சரீரம் மூன்ருகும்.
1. ஸ்தூல சரீரம் சிரம் நேத்ரங்கள் நாசி வாய், கரம் கால்கள் முதலாகிய அவயங்களுடன் கூடிய இம்மாமிச சரீரங்களை கைகளினுல் பிடிப்பதற்குக் கடினமாயும் மிருதுவாயும் பார்வைக்கு நீளமாயும் குட்டையாயும் பெருத்தும் சிறுத்தும் தோன்றுவதால், இதற்கு ஸ்தூல சரீரம் என்று சொல்லப்படும்.

2. சூட்சும சரீரம் ஞானேந்திரியங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5. பிராணங்கள், 5. மனம், புத்தி 2 ஆகிய இந்தப் பதிநேழு அவயவங்களுடன் கூடினதே சூக்ஷுமசரீரம்: அல்லது ''லிங்க சரீரம் என்று சொல்லப்படும். இந்த சூட்சும சரீரம், கண்களுக்கு தோன்ருமலும் கைகளாற் பிடிப்பதற்குச் சாத்யப்படாமலும் இந்த ஸ்தூல சரீரத்தின் உள்ளிருப்பது.

3. காரண சரீரம்:—இது ஸ்தூல சூக்ஷும சரீரங்கட்கு விதையாயிருந்து. உற்பத்தியொடுக்கத்தை விளைவித்துத் துன்பத்தையே சுகம் எனக் கருதச் செய்கின்ற அஜ்ஞானமே ''காரண'' சரீரமெனப்படும்.

ஸ்தூல சரீரம். ''ஸீர்யதே இதி ஸரீரஹ'' ஜீர்ணித்துப் போவதால் சரீரமென்றும், ''தஹ்யதே இதிதேஹ:'' தகிக்கப்படுவதால் தேகமென்றும் சொல்லப்படும். இத்தேகம் அன்னமில்லாவிடில் ஜீர்ணித்துப் போகும். வியாதியினுலும், கிழத்தனத்தினுலும், ஜீர்ணித்துபோகும். அங்ஙனம் ஜீர்ணித்த பின்பு அதாவது, பிராணன் போய்விட்ட பின்பு இத்தேகம் மசாணத்தில் அக்னியினுல் சுடப்பட்டு மண்ணுய்ப் போகும். சூக்ஷமசரீரம் விருத்தியாய்க் கொண்டே வரும், எப்படி என்ருல், ராகத்து வேஷ காமக்கராதங்கள் தினே தினே விசேஷித்து வளர்கின்றமையால் இந்த சூக்ஷமசரீரம் விருத்தியை யடைந்து வளர்கின்றது. நாளுக்கு நாள் காமக்ரோதாதிகள் குறைவுப்பட்டால் ஜன்மங்கள் குறைவுப்பட்டு நாளுக்கு நாள் சூக்ஷுமசரீரம் ஜீர்ணித்துப் போகும் ஆதலால், இந்த ராகத்துவேஷாதிகள் சூட்சும சரீரத்தின் விகாரங்களாகும். காரணசரீரம் எங்ஙனம் விருத்தியடையும்? அஜ்ஞானத்தினுல் நான் எனது என்னும் அபிமானம் நாளுக்கு நாள் விசேஷிப்பதால் காரண சரீரம் நாளாவட்டத்தில் ஒடுங்கி ஜீர்ணித்துவிடும். சூட்சும காரண சரீரங்கள் இரண்டும் பெரியோர்கள் (ஞானிகள்) கடாக்ஷத்தினுலும் ஞானக்னியினுலும் ரூபமில்லாமல் நசித்துப் போய்விடும் இவ்விரண்டும் நசித்தவுடன் மோக்ஷம் சித்திக்கும்.

## ஸ்தூலசரீரம்போல் சூட்சுமசரீரம் ஏன் காணப்படுவதில்லை?

மாம்சமயமாகிய இந்த ஸ்தூலசரீரத்திற்கு நித்திரை, மரணம் மூர்ச்சை முதலானவைகள் சம்பவிக்கும் சமயங்களில், இச்சரீரத்திலுள்ள நேத்ரங்கள் செவிகள் முதலாகிய அவயவங்கள் யாவும் இருந்த போதிலும் அந்த நேத்திரங்கள் பார்ப்பதில்லை, செவிகள் கேட்பதில்லை. இவ்விதமே ஒவ்வொரு இந்திரியமும் அதனதன் கார்யங்களைச் செய்வதில்லை. ஆதலால், இந்தஸ்தூல சரீரம் கேவலம் மாம்சபிண்டமாகிய மட்பாண்டமாக இருப்பதால் இதுவே சகலகார்யங்களையுஞ் செய்வதாகச் சொல்லலாகாது. இந்த ஸ்தூலசரீரத்திற்குள் சூக்ஷ்மசரீரம் கண்களுக்கு (காணப் படாத) சரீரம் ஒன்றிருந்து சமஸ்த கார்யங்களையுஞ் செய்து கொண்டிருக்கின்ற என்பது நிச்சயமாகும். ஆகவே ஸ்தூலதேகத் தில், கண்கள், நாசி, வாய், செவிகள், தேககர்மம், என்னும் பஞ்சேந்திர்யங்களுடன்கூட, மனம் புத்தி சித்தம் அஹங்காரமென் னும் அந்தக்கரணங்கள் கூடி இருப்பதனுல் அவைகள் ஒவ்வொன் றும் தம் தம் காரியங்களைச் செய்து கொண்டிருக்கின்றன. அஃதெப்படி எனில், நாம் சில வஸ்துக்களைக் காண்கின்ருேம். வஸ்துவைக்காணுவது கண்ணென்னும் அவயவமல்ல. கண்களுக் கும் மூளைக்கும் மத்தியலுள்ள நரம்பின் வழியாய் ஓடிக்கொண் டிருக்கும் இந்திர்யமே, வஸ்துவை பார்க்க மிகவும் உபயோக மானது, கண்ணென்னும் அவயவமானது, காணும் தொழிலுள்ள இந்திரியத்திற்கு ஒரு கருவி, கண்ணினுடைய இந்திரியம் இல்லா விடில் ஒருவனுக்கு நூறு கண்கள் இருந்தபோதிலும், பிரயோஜனப் படமாட்டாது. கண்ணென்னுங் கருவியும் கண்ணுக்கும், மூளைக்கும் சேர்ந்திருக்கும் நரம்பு, இவைகளிரண்டும் இருந்த போதிலும், மனம், இவைகளுடன் கலக்காவிட்டால் எந்த வஸ்துவையும் காண முடியாது. ஒருவஸ்துவைப் பார்க்கவேண்டுமானுல் முதல் கண் ணென்னுங் கருவி, கண்ணுக்கும் மூளைக்கும் சேர்ந்திருக்கும் நரம்பு. மனம் ஆக இம்மூன்றும் வேண்டும். மனதானது, வேருேர் கருவி யின் மூலமாய் வேருேர் வேலையில் இருந்துவிட்டால். கண்ணிந் திரியமும், கருவியும் சேர்ந்து காணுந்தொழிலை செய்யமாட்டாது. ஆகையால், ஒரு விஷயத்தை உணரவேண்டுமானுல், அவ்வுணர்ச்சிக் குக் கருவிகள், இந்திரியங்கள், மனம் ஆகிய இம்மூன்றும் அவசியம் வேண்டும். சப்தத்தைக் கேட்பதற்குச் செவி என்னுங் கருவியும் செவி இந்திர்யமும், மனமும் ஆக இம்மூன்றும் வேண்டும்

இவ்வாறே மற்ற எல்லா இந்திரியங்களும் ஆகுமென்று தெரிந்து கொள்ளவேண்டும். வஸ்துக்களைக் காணும்போது மனதானது, கண் இந்திரிய மூலமாய் வெளியில் சென்று அவ்வஸ்துக்களை பார்த்து, கண்களை மூடிக்கொண்டு நினைக்கும்போது அவ்வஸ்துக் களை மனம் மறுபடியும் உள்ளிந்திரியங்களுடன் கலந்து வேலை செய்கின்றது. வஸ்துக்களை வெளியே கவனிக்கும்போது, கருவி களின் உதவியும் வேண்டும். இந்திரியங்களின் ஒத்தாசையில்லாமல், மனதினால் ஒன்றும் செய்யமுடியாது, ஒருவஸ்துவின் அடையாளம் அல்லது குறியில்லாமல் மனதானது ஒன்றையும் நினைக்க மாட்டாது, அவ்வடையாளங்களை மனதிற்குக் கொண்டு வருவது இந்திரியங்களேயாம். இதன் விவரங்களை எல்லாம் ஸ்ரீகிருஷ்ணார் ஜுன ஸம்வாதருபமாய் எழுதிய ஸ்ரீபகவத் கீதையில் காணலாம். விரிவாய்க் காணலாம். ஸ்தூல சூக்ஷ்ம சரீரமிரண்டும் கார்யரூப மாயிருக்கின்றன. எவ்வாறெனில்

புகை வருவதனால் அக்கினியைக் காணுவிடினும் காரணமாகிய அக்கினியிலிருந்தே அதன் காரணமாகிய புகை காணப்படுகின்றது. என்று நிச்சயிப்பது போல், காரிய வடிவமாகிய சூக்ஷ்ம சரீரம். உண்டாவதற்குக் காரணம் ஒன்றுண்டென்று நிச்சயிக்கலாம் அதுவே அஞ்ஞானமாகிய காரண சரீரம். அதனாலேயே, ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்கட்கு காரணமாயிருந்து ஜனன மரணாதிதாபத்ர யங்களை உண்டாக்குகின்றன, எப்படி யெனில்.

தூக்கத்தில் கனவு காணும் போது பிராணன் வெளியில் போவதில்லை; மனம்புத்தி சித்தம்அகங்காரமென்னும் அந்தகரணங் கள் வெளியில் போகின்றன. அவைகள் போன போதிலும், கண் களுக்குக் காணப்படும் ஸ்தூல சரீரம் பிணமாக மாட்டாது பிராணன் போய்விட்டால் சரீரம் பிணமாய்விடும். பிராணனுக்கு அறியும் சக்தியுண்டு. அதனால், அந்தக்கரணம் வெளிவிவகாரங் களில் திரிவதை, பிராணன் (ஆத்மா) சாக்ஷியாயிருந்து, அந்தக் கரணங்கள், இரவு தூக்கத்தில், கண்டவைகளை எல்லாம் சொல்லு கின்றது. ஆதலால், சூக்ஷ்ம சரீரத்துக்குச் சத்தாயிருப்பது பிராணன் போய் விட்டால் சரீரத்தை தகனம் செய்துவிடுவார் கள் தூங்கப்பட்டவனை தகனம் செய்ய மாட்டார்கள். என்றால் ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களுக்குச் சத்தாயிருப்பது பிராணன். எது வரையில் பிராணன் சரீரத்தில் இருக்கின்றதோ. அதுவரையில் சகல மனோ இந்திரிய கூட்டங்களும் இருக்கும். பிராணன் போய்

விட்டால் எல்லாம் போய்விடும். சகலமனே இந்திர்யங்களுக்கு அரசனுயிருப்பது பிராணன். இப்ராணன் போகும் வரையில் அந்தக்கரேணந்திரியங்களுக்குச் சத்வக்குணகார்யங்கள் இருப்பதனுல், அவைகளுக்கு ஞான சக்தி உண்டு. பிராணனுக்கு ரஜோகுண கார்யங்கள் இருப்பதனுல், அதற்குக் கிரியாசக்தி உண்டு. அதன் பலத்தினுல், பிராணன் போகும்போது லிங்கசரீரமென்று சொல்லப்படும் சூக்ஷ்ம சரீரம், ஸ்தூல சரீரத்தை விட்டுப் போய் விடும். பிராணபலத்தினுல், இந்திரியங்களும் அந்தக் 'கரணங்களும் இருக்கின்றனவென்று யோக சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. அன்றியும் பிராணவாயுவை நிறுத்தாவிட்டால் மனே வாயுவு நிற்கமாட்டாது. ஆதலால் மனேஓட்டத்தை நிறுத்தத்தக்க ராஜயோகத்தை இதில் சொல்லியதுபோல், ஜபம் செய்து வர வேண்டும். அன்றியும், மனேவாயுவை ஓடவிடாமல் செய்விக்கும் யோகாப்யாசத்தையும் செய்து வரவேண்டுமென்றும் இந் நூலில் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலால்

''அஜ்ஞானதவிவேக : அவிவேகாதபிமாந:,
ராகாதய: ராகாதயம் கர்மாணி கர்மணு ஸரீர பரிக்ரஹ:''

என்றிருப்பதால் அஜ்ஞானத்தினுல் அவிவேகமும் அவிவேகத்தினுல் (நான்) எனது, என்னும் அபிமானமும், அந்த அபிமானத்தினுல் காமகுரோதாதிகளும் காம குரோதாதிகளால் அநேக கர்மங்களைச் செய்து, அக்கர்மவசத்தால் ஜீவாத்மா அநேக ஜனன மரணங்களை அடைந்து கொண்டே இருக்கும். அதனுல், அக்காரண சரீரம் முற்றிலும் நசிக்காவிடில் முக்தி இல்லை, யென்பதுதிண்ணம். இந்த காரண சரீரமே சஞ்சித மென்று அறிய வேண்டும். இனி பஞ்சகோசங்களைச் சொல்லுகின்றேன் கேளுங்கள்.

''ஆத்மாநாத்ம ஸ்தூல ஸூக்ஷ்ம காரண ஸரீரத்ரய
விலக்ஷண:
பஞ்ச கோஸா வயதிரிக்த : அவஸ்த்தாத்ரய ஸாக்ஷி
ஸச்சிதானந்தரூப:''

பரமாத்மா பஞ்ச கோச விலக்ஷண னென்று சுருதிகள் முறையிடுகின்றன. பஞ்ச கோசங்களை அறியாமுன் அவைகளுக்கு விலக்ஷணனன பரமாத்மாவை அறியலாகாது. ஆதலால் முதல் பஞ்ச கோசத்தை விசாரிக்கலாம்.

அது அந்நமயம் பிராணமயம் மநோமயம், விஞ்ஞான மயம், ஆநந்த மயமெனக் கோசங்கள் ஐந்து வகைப்படும்.

"ஸ்வசரீரே ஸ்வயம் ஜோதி:"

என்று உபநிஷத்துகள் கூறுவதுபோல் இந்த சரீரத்தில் ஸ்வயம் ஜோதியான பரமாத்மா நிவஸித்துக் கொண்டு இருக்கின்றான். அந்தப் பரமாத்மா திருவீதி வலம் வருவதற்கு இந்த தேகத்தை வியாஜமாக வைத்து ஒரு ரதமாக உபயோகிக்கின்றது. திருவீதி வலம் வருவதற்கு முன்னமே ரதத்தை பரிசுத்தமாக அலங்கரித்து ஸர்வாங்க சுந்தரமாகத் தயாரிப்பது போல், ஜீவன் பாஹ்யாந்தரமான சகலேந்திர்யங்களையும் பரிசுத்தமான அநுஷ்டானங்களில் புகுத்தி பரப்ரஹ்மத்தின் நிவாஸத்திற்குத் தகுதியாகும்படி செய்ய வேண்டும். இப்போது சரீரேந்திர்யங்களைப்பற்றி அறிந்து கொண்டோம். இனி அந்தக்கரண சுத்தியைப்பற்றி அறிய வேண்டும்.

தோழர்களே! ஒரு பாத்திரத்தை வெளிப்புறம் மாத்திரம் நன்றாகத் துலக்கி, உள்ளே அழுக்கை விடுவதனால், அந்தப் பாத்திரத்தை சமையலுக்கு உபயோகிக்க மாட்டோம். அதேபோல் சரீரேந்திர்யங்களைப் பரிசுத்தம் செய்வதுபோல் அந்தக்கரணசுத்தியையும் மிகப் பரிசுத்தமாகச் செய்ய வேண்டும். அந்தக்கரணசுத்தி என்பது மனோ நிர்மலத்வம் இருதய பவித்ரம். அநேக ஜன்மங்களாகப் பாபத்தினாலேயே கட்டுண்டு மனது பகவானை அடைய மாட்டாமலிருக்கிறது.

அசுத்தமான இடத்தில் பெரியோர்களும் அல்லது அநுஷ்டானமுள்ள மற்றவர்களும் இருப்பதற்கு விரும்புவார்களா? "ஆகமாதம்து தேவானும்" என்று தேவர்களை அணுகுவதற்கு முன்னமே "கமநார்த் தந்து ராக்ஷஸாம்". என்று ராக்ஷஸர்களைக் கடந்து செல்லும் மார்க்கங்களைச் சொல்ல வேண்டியிருக்கிறது. அதேபோல் மார்வமென்னும் கோயிலில் பரமாத்மாவுக்கு ஒய்வு உண்டாவதற்கு அநேக ஜன்மங்களாக அங்கு இருந்து வந்த காமாதி ராக்ஷஸர்களை முன்னதாகத் துரத்த வேண்டும். அவ்விதப் பணி செய்யாவிடில் சரீரேந்திர்யங்கள் பகவத் விஷயமாக மாறுவதற்கு சாத்யமாகாது.

"ஸதாபோக பாஜாம் ஸுதூரே வஸந்தம்
ஸதாயோக பாஜா மதூரே விபாந்தம்"

என்று ஸ்ரீ ராமசந்திரமூர்த்தியின் ஸ்தோத்தரத்தில் உள்ளது. போகத்தில் கட்டுண்டு உலக விஷயேந்திர ஜாலங்களின் பின் ஒடு

பவர்களிடமிருந்து ஸ்ரீராமசந்திரப்ரபு வெகுதூரமாகச் செல்லு வார். ஆகையால், தேஹமென்னும் ஆலயம் பரமாத்மாவுக்கு இருப்பிடமாவதற்காக வேண்டி மிகப் பவித்ரமாகவும் பாபரஹித மாகவும் இருக்க வேண்டும். அப்படி இருந்தால் இந்த உடலுக்கு ஆயுள் ப்ரமாணமுண்டு.

## சரீரத்தின் எல்லைபற்றிக் கூறுவது

இதுவே இந்த சரீரத்தின் எல்லை என்று சொல்லுவார்கள் இந்தச் சரீரம் என்னும் எல்லையைவிட்டு மற்றோர் சரீர எல்லைக்குக் கடக்கும்போது, அதை மரண காலம் என்றும் களேபரம் என்றும் கூறுவார்கள். அப்பேர்ப்பட்ட அனர்த்த காலம் வரும்போது தேஹேந்திர்யாதிகள் ஒன்றுகிலும் உதவி செய்வதில்லை. எதுவும், மிச்சமாவதுமில்லை. இந்த சரீரம் உற்பத்தி காலத்திலிருந்து, மரண காலம் வரையில், நன்மை. தீமை. என்னும் இரண்டு செயல்களில் ஈடுபட்டு வருகிறது. ஜீவாத்மா தேஹேந்திர் யாதிகளோடு எதில் பழகியதோ, அதற்கேற்ற சரீரத்தில் புகுந்து, நன்மையோ அல்லது தீமையோ அனுபவிக்கின்றது.

''நகர்த்ருத்வக் நகர்மாணி லோகஸ்ய ஸ்ருஜதிப்ரபு:
நகர்மபலஸம் யோகம் ஸ்வபாவஸ்து ப்ரவர்த்தே ‖ '

என்று பரமாத்மா உலகத்திற்கு கர்த்ருத்வம் உண்டு பண்ணுவது மில்லை. கர்மங்களை உண்டு பண்ணுவதுமில்லை. கர்ம பலத்தோடு சேர்த்து வைப்பதுமில்லை. உண்டு பண்ணுவதுமில்லை. ப்ரக்ருதியின் செயல் ஆத்மாவின் செயல் போன்று தென்படுவது அஞ்ஞானத் தாலாகும். ஆகையால், அஞ்ஞானத்தில் இருக்கும் ஜீவாத்மா, தன்னைக் கர்த்தாவென்று எண்ணுகிறன். கர்மத்தை தன்னுடைய தென்று எண்ணுகிறவன். கர்மபலனை ஏற்றுக் கொள்பவனுகிறன். இவை யாவும் ப்ரக்ருதியின் செயல்களே யொழிய ஆத்மாவின் செயல்களல்ல.

''நாதத்தே கஸ்யசித் பாபம் நசைவ ஸுக்ருதம்விபு: |
அக்ஞானே னவ்ருதம் ஞானம் தேன முஹ்யந்தி
ஜந்தவ: ‖ ''

யாருடைய பாப புண்ணியத்தையும் பரமாத்மா பொருள் படுத்து வதில்லை. ஞானம் அக்ஞானத்தால் மூடப்பட்டிருக்கின்றது. ஆதலால், உயிர்கள் மயக்கமடைகின்றன.

எங்கும் நிறைந்துள்ள ஆகாசத்தின் மீது ஏனைய நான்கு பூதங்களும் நிலை பெற்றிருக்கின்றன. மண்ணில், நீரில், காற்றில் காணும் கேடுகளெல்லாம் ஆகாசத்தைக் கெடுப்பதில்லை. அவைகளிலுள்ள நன்மைகள் ஆகாசத்தை அலங்கரிப்பதுமில்லை. அதேபோல் ப்ரக்ருதியின் கண் உள்ள நன்மை தீமைகளைப் பரமாத்மா ஏற்றுக் கொள்வதில்லை. பொருட்படுத்துவதும் இல்லை. ஸ்படிகத்துக்கு பக்கத்திலுள்ள புஷ்பத்தின் நிறத்தை ஸ்படிகம் ஏற்பது போன்று தென்படுகின்றது உண்மையில் நிறம் ஒன்றையும் ஸ்படிகம் ஏற்றுக் கொள்வதில்லை. அங்ஙனமே ஆத்மாவானது ப்ரக்ருதியின் இயல்பை ஏற்றுக் கொண்டது போன்று காக்ஷி கொடுக்கிறது. அத்தகைய அக்ஞானத்தினால் ஜீவர்கள் ஏமாற்றம் அடைகின்றனர்.

## ஈசுவரனுக்கும் ஜெகத்துக்கும் உள்ள தொடர்பு பற்றிக் கூறுவது

ஈஸ்வரனுக்கும் ஜகத்துக்கும் உள்ள தொடர்பு இந்த இரண்டு சுலோகங்களில் நன்கு விளக்கப்படுகின்றது. சர்வேஸ்வரன் ஆனந்த சொருபி; பரிபூரணன். காரண காரியத்தில் அவன் சம்மந்தப் பட்டவன் என்பது அவனது சொருபத்துக்குச் சிறியதேனும் பொருந்தாது. அவனுடைய சன்னிதான விசேஷத்தால் ப்ரக்ருதிக் சர்வ சக்தியும் வந்தமைகிறது. ப்ரக்ருதியோடு தன்னை இணைத்துக் கொள்கையில் ஜீவன் பந்தத்துக்கு ஆளாகிறான். ப்ரக்ருதியினின்று தன்னை விலக்கிக் கொள்ளுகையில் அவன் விடுதலை அடைகின்றான். வேதாந்தசாரம் முழுதும் இக்கோட்பாட்டில் அடங்கியிருக்கிறது.

வெளிச்சத்தைத் தருவது தீபத்தின் சுபாவம். அதன் உதவியால் சிலர் சமையல் செய்கின்றனர். வேறு சிலர் பாகவதபடனம் செய்கின்றனர். அதே போல ஈஸ்வரனுடைய நாமத்தின் உதவியால் சிலர் மோக்ஷமடையப் பார்க்கின்றனர். வேறு சிலர் தங்கள் தீய எண்ணங்களைச் சாதித்துக் கொள்ள முயலுகின்றனர். என்றாலும் பகவான் நாமம் ஒரு போதும் அசுத்தமடையாமல் எப்போதும் தூயதாகவே இருக்கின்றது.

## ஸரீரத்தின் அவயங்களின் அந்திம காலத்தின் நிலைமை பற்றிக் கூறுவது.

"அஸ்யவிஸ்ரசமானஸ்ய சரீரஸ்தஸ்ய தேஹிந:
தேஹாத் விமுச்ய மாநஸ்ய கிமத்ர பரிசிஷ்யதே:"

—கடோ

இந்த தேஹத்துக்குடையவனுகிய ஆத்மா இந்த தேஹத்தை விட்டுக் கிளம்பிப் போவதற்கு முன்னமே தேஹேந்திர்யாதிகள் ஒன்ருகிலும், மிச்சமாக நிற்பதில்லை எதிரிக்கு பயந்து அரசன் தனது நாட்டைவிட்டு ஓடுவதற்கு முன்னமே ப்ரஜைகள் ஓடிவிடுவார்கள். அதேபோல் ஆத்மா விதேஹமாவதற்கு முன்னமே, தேஹேந்திர்யாதிகள் அதனதன் செயல்களற்று விடுகின்றன.

''அணோரணியாந் மஹதோமஹீயாந்
ஆத்மஸ்யஜந்தோர் நிஹிதோ குஹாயாம்
—கடோ

என்பது போல் இந்த உலகத்தில் அணுவைவிட மிகவும் சிறிய ஜந்துக்களிலும், யானை அல்லது பெரிய பர்வதம்போன்ற பெரிய ஜந்துக்களினுடைய சரீரத்திலும் ஆத்மா நிவசித்துக் கொண்டிருக்கிறது என்றும் அறியவும்.

''அஶரீரம் ஶரீரேஷு'' —கடோ

ஆத்மா தனக்குச் சரீரமில்லாமல் நாசரஹிதனு நமது சரீரத்திலேயே சாக்ஷிபூதமாக மாத்திரம் இருக்கிருன். தான் கர்மம் செய்வதில்லை. ஆசார்யப்ரசாதம் போன்று விளக்கிக் காட்டுவதற்கு இந்த ஆத்மரக்ஷரம்ருத ரகசியம் நமக்குத் துணை புரியும் நூலாகும். ஜீவசாக்ஷியாகிய கூடஸ்தனும் ஈசுவரசாக்ஷியாகிய பரப்ரஹ்மமும் தானென்று அறியாமல் ஸ்தூல ஸூக்ஷ்ம காரணங்களினுல் உண்டாகிய தேஹமேதானென்று அபிமானம் வைத்து, நான் மேம்பட்டவனென்றும் உயர்ந்தவனென்றும் பிரமையடைந்து, அநேக யுகவருஷங்களாய் புருஷன் காலச்சச்கரத்தில் கிறு கிறுவென்று சுழன்றுகொண்டு நானு வித ஜந்துக்களின் யோனிகளில் போய்ப் பிறந்து கொண்டும், இறந்து கொண்டும் இருக்கின்ருர்கள். பரப்ரஹ்மம் இன்னதென்று தெரிந்து கொள்ளும் வரையில் ஜனன மரணங்கள் வந்து கொண்டே இருக்கும். ஆதலால், உலகத்தில் ஸ்த்ரீ புருஷருபமாய் சஞ்சரித்துக் கொண்டிருக்கும் மானுடஜனங்களெல்லாம் மாயை என்னும் ஆசையால் கட்டுப்பட்டு மிகவும் ஆழமான சம்சாரமென்னும் சமுத்திரத்தில் மூழ்குகின்றனர்.

சம்சாரமென்பது மனைவி மக்கள்மீதுள்ள ஆசை மட்டுமல்ல, எந்தப் பொருள் தனக்குவேண்டுமென்று இச்சை கொள்கிருனே

அவையாவும் சம்சார பந்தமென்றே சொல்லப்படும். இந்த சம்சாரமென்னும் பந்தமே பெரிய சமுத்திரமாய் இருக்கிறது. இப்படிப்பட்ட சம்சாரமென்னும் சமுத்திரத்தில் மூழ்கி தனுசை என்னும் வியாதியினுல் பிடிக்கப்பட்டு மின்னலைப்போல் க்ஷணநேரம் உண்டாகும் ஸ்த்ரீ சம்போகங்களின் அற்பசுகங்களுக்குட்பட்டு எப்பொழுதும் வருத்தமடைந்து கொண்டிருப்பார்களே அல்லாமல் நித்யானந்த பதவியைக் கோரமாட்டார்கள். இவர்கள் செய்வது எப்படி இருக்கின்றதென்ருல் காட்டில் பெரிய பள்ளம் வெட்டி கழிகளைப் பரப்பி அதன்மேல் பாய்களையும் சிறிது மண்ணையும் போட்டு விதைகள் விதைத்து பயிர்களை செழுமையாய் வளர்த்து வைப்பார்கள். அந்தப் பயிரைப் பார்த்து அதனுல் கேடு சம்பவிக்குமென்னும் விசாரமில்லாத யானையானது, அதை மேய்வதற்காகத் துரிதப்பட்டுச் சென்று, அந்தப் பாழும் பள்ளத்தில் விழுவதுபோல் மதிமயங்கி அழுந்திப்போகாமல் ஸ்ரீயப்பதியாகிய பகவானருளாலே, இந்த ஸம்சார துக்கமாகிய சமுத்திர ஜலத்தை நிவர்த்தி செய்து மோக்ஷமென்னும் வீட்டினை அடைவோமாக.

## மோக்ஷமென்ருல் என்ன? என்னும் விளக்கம்

மோக்ஷமென்ருல் எல்லா பந்தத்திலிருந்தும் விடுதலை அடைவதேயாம். இப்பந்தம் பாஹ்யம், ஆந்த்ரம் என இரண்டு வகைப் படும்.

பாஹ்ய பந்தமாவது எனது வீடு, எனது பார்யாள், எனது புத்திரர்கள், எனது புத்திரிகள், எனது சரீரம், எனது பூமி, எனது மாடு, எனது தோட்டம், எனது துரவுகள் என்று தனதல்லாத வேறு வஸ்துக்களை தனதாகப் பாவிப்பது.

அந்தரபந்தமாவது-காமக்ரோத லோப மோஹ, மத மச்சர, டம்பதர்ப்ப ஈர்ஷை அசூயை என்னும் இந்த பத்துக் குணங்களினுல் புருஷனுக்கு பந்தமுண்டாகின்றது. இந்த பத்து பந்தங்களையும் நிவர்த்திக்க ஆத்மரக்ஷாம்ருதம் பயன்படுமென்று நம்புகிறேன்.

## பந்தம் என்பதைப் பற்றிக் கூறுவது

இந்த பந்தம் அக்ஞானத்தினுல் ஏற்பட்டதேயன்றி வேறன்று. இவ்வஜ்ஞானத்தை விசாரிக்கும்மளவில் இது கானல் நீர்போல் ஜீவனுக்கு அநேக ஜன்மங்களாய் வந்துகொண்டிருக்கும் காரண

சரீரத்தின் வாசனையினால் இவனுக்கு தாரேஷணை என்னும் புத்திர, பௌத்திர களத்ர, தன தான்யாதிகளின்மீது ஆசை உண்டாகும், இந்த ஈஷணாத்ரயங்கள் ஜீவனுடன் கூடவே சூக்ஷ்ம சரீரத்துடன் அணுசொருபமாய் காணப்படாத சிறிய வஸ்துவாய்க் கிளம்பி, அவனவன் கர்மத்திற்குத் தக்கபடி அந்தந்த தாயின் கர்ப்பத்தில் பிரவேசித்து சிசுவாய்ப் பிறந்தபோது ஈஷணத்ரயங்களும் அவன் கூடவே தொடர்ந்து வருகின்றன. ஆதலால்

## அந்தியம காலத்தில் எமகிங்கரர்கள் நமக்குச்செய்யும் துன்பங்களைப் பகவானிடம் கூறுவது

''சாமிடத்தென்னைக் குறிக்கொள்கண்டாய்
சங்கொரு சக்ரமேந்தினனே
நாமடித்தென்னை யனேகதண்டஞ் செய்வதாநிற்பர்
நமந்தமர்கள்
போமிடத்துன் திறத்தெத்தனையும் புகாவண்ணம்
நிற்பதோர் மாயைவல்லை
ஆமிடத்தே யுன்னைச்சொல்லி வைத்தேன்
அரங்கத்தரவணைப்பள்ளி யானே''

—பெரியாழ்வார்

'சங்க சக்ரபாணியான ஸ்ரீரங்கநாதனே! யமபடர்கள் மிக்க கோபத்தோடு நாக்கை மடித்துக்கொண்டு மஹா பாபியான அடியேனைப் பலவகைகளால் தண்டிக்க நினையா நின்றவர்களாய் இழுத்துக் கொண்டுபோகும்போது என்னுடைய நெஞ்சானது உன் விஷயத்தில் சிறிதாயினும் அவகாஹிக்கமாட்டாமல் நிற்குமாறு ஒப்பற்றதொரு மாயையைச் செய்வதில் நீவல்லவனாயிரா நின்றாய்; ஆகையால், ஸர்வேந்திரியங்களும் தெளிவு பெற்றிருக்கப் பெற்ற இக்காலத்திலேயே கூறினேன். சரீரவியோக ஸமயத்தில் உன்னை நினைக்கமாட்டாத அடியேனைத் திருவுள்ளம் பற்றியருளவேணும்' என்று உன்னைக் குறித்து விண்ணப்பஞ் செய்து கொண்டேன். ஓ, ஸர்வலோக சரண்ய உம்மையன்றி என்னை ரக்ஷிப்பவர் யாருமில்லை, என்னை எமகிங்கரர்களிடமிருந்து மீட்கக் கூடியவர் நீர் ஒருவரேயாவீர்.

## அந்திம காலத்தில் விளக்கம்

''எல்லையில் வாசல் குறுகச் சென்றால்
எற்றி நமன்றமர் பற்றும்போது
நில்லுமினென்னுமுபாயமில்லை
நேமியுஞ் சங்கமு மேந்தினானே
சொல்லலாம் போதேயுன் நாமமெல்லாம் சொல்லி
னேனென்னை குறிக்கொண்டென்றும்
அல்லல் படாவண்ணங்காக்கவேண்டும்
அந்தரங்கத் தரவணைப் பள்ளியானே.

--பெரியாழ்வார்

சங்கசக்ரபாணியான அரங்கநாதனே! அடியேனுடைய வாழ் நாளின் எல்லையாகிய சர்மதசையில் யமபுரத்துக்குப் போகும் வழியைக் கிட்டப்புகுந்தால் யமகிங்கரர்கள் அடித்துப் பிடிக்குங் காலத்தில் (என்னைத் தொட வேண்டாம்) கடந்து நில்லுங்கள் என்று அவர்களை என் அருகில் வரவொட்டாமல் சொல்லுகைக்கு ஒரு உபாயமும் என் கையில் இல்லை; எவ்வித வழியுமில்லை. ஆதலால், உன்னுடைய பவித்திரமான திருநாமங்களைச் சொல்லு வதற்கு உரிய காலமாக இருப்பதால் இப்போது என் நாவானது உமது ஸஹஸ்ர நாமங்களைச் சொல்லுவதற்கு பேரவாக் கொண்டும் உள்ளம் உருகி பலவாறு சொன்னேன். ஆபத்பாந்தவனாகிய எம் பெருமானே! அடியேனை ஓர் குறியாக வைத்துக் கொண்டு ஜீவாத்ம சரீரவியோக காலத்தில் பேராபத்தாகிய பயத்திலிருந்து மீட்டு உன் திருவடி சேர்ப்பிக்குமாறு அநேக தண்ட ப்ரணாமம் செய்து விண்ணப்பம் செய்து கொண்டேன்.

## எமகிங்கரர்கள் மற்றோர் சரீரத்தில் புகும்படி துன்புறுத் தலைப் பகவானிடம் பக்தன் கூறுவது

''நானே துமுன்மாய மொன்றறியேன்
நமன்தமர்பற்றி நலிந்திட்டு இந்த
ஊனே புகேயென்று மோதும் போது
அங்குன்னை நானென்று நினைக்கமாட்டேன்

வானேய்வானவர் தங்களீச
மதுரைப் பிறந்த மாமாயனே என்
ஆனாய் நீ என்னைக் காக்க வேண்டும்
அரங்கத்தரவணைப் பள்ளியானே

—பெரியாழ்வார்

திருப்பாற்கடலில் பள்ளி கொண்டவனே! என்]உள்ளம் புகுந்த வனே! பரம பதத்திலுள்ள நித்ய முக்தர்களுக்குத்தலைவனே! திருவட மதுரையில் அவதரித்த மிக்க ஆச்சர்ய சக்தியை யுடையவனே! உலகங்களுக் கெல்லாம் சுவாமியானவனே! பாக னுக்கு வசப்பட்டொழுகு கின்ற யானை போல் எனக்கு வசப்பட்டு இருப்பவனே! அடியேன் உன் மாயைகளில் யாதொன்றையும் அறியமாட்டேன்! யமகிங்கரர்கள் என்னைப் பிடித்து இந்தச் சரீரத்தில் பண்ண வேண்டிய ஹிம்சைகளெல்லாம் பண்ணிவிட்டு பின்பு நான் செய்த பாபத்துக் கேற்ற இந்த யாதநாசரீரத்துள்ளே பிரவேசி என்று அடிக்கும்போது, அவ்விடத்தில் உன்னை நான் ஒன்றும் நினைக்கமாட்டேன். ஏனென்றால்;எமபடர்களின் பயத்தால் என்நாவானது தடுமாற்றமடையும், கண்ட மடைக்கும். கபவாத பித்தம் மேலிட்டுப் போகும். உமது திருஉருவைப் பார்க்க முடியாமல் கண்கள் பஞ்சடையும். சுவாசம் மேலிட்டுப் போகும். பக்தர்களைக் கொடுமைப்படுத்தும் அரக்கர்களை க்ஷமிக்க மாட்டேன் என்று பல புராணங்களில் சொல்லி இருப்பதால் என்னை கைவிட மாட்டீர் என்ற நம்பிக்கை அடியேனுக்கு உண்டு. நீ (மனத்துக்கு இனியவன்) என்று ஸ்ரீ ஆண்டாள் சொல்லியபடி எப்போதும் அடி யேனுக்கு இனியவனாக இருப்பீராகவும் என்று விண்ணப்பித்துக் கொள்கிறேன். உன்னை நினைக்கும்படியான பிறவியே எனக்கு லபிக்க வேண்டும் உம்மை மறவாமல் இருக்க வேண்டும். துரௌபதியின் துயரத்தைக் காத்தவன். கஜேந்திரன் ஆபத்தைத் தீர்த்தவன். கோவர்த்தன கிரியைக் குடையாகப் பிடித்துக் கோக்களைக் காத் தவன், என்னை புகழத் தக்க நீ காக்க வேண்டும் என்று பலவாறாகச் சொல்லி கண்ணீர் ததும்பச் சரணமடைகிறேன். வாய் மடித்து உன்னை என்னுள் நிறைத்துக் கொண்டேன். நீர் மறந்தாலும் உம்மை என்னைவிட்டுப் போக விடமாட்டேன். சீதாதேவியின் அந்தரங்கமான படுக்கை அறையில் பூமாலையால் கட்டுண்டவனல் லவா! இராமாவதாரத்தில் மகரிஷிகளை ஆயர் பாடியில் கோபிகைகளாக அவதரிக்கும்படி வாக்களித்தவனல்லவா? என்னிடத்தில் உனது வாத்ஸல்யத்தைக் காட்ட வேண்டும்

கோவிந்தா கோவிந்தா வென்று சோடிப்ரணுமம் ஆகுக பரமபக்தனுகிய ப்ரஹலாதன் ராக்ஷஸ சிஸு வென்றும் பாராமல் சிறுவனை ஹிம்ஸித்த அரக்கனைக் கொல்ல ஸிசுவுக்காக அவதரித்த வனல்லவா? என்னை மட்டும் கைவிடுவாயா? ஹே! லோக ரக்ஷகா, ஆபத் பாந்தண அனுதரக்ஷகா, ஸர்வலோக சரண்யா நமாமி சரணம் சரணப்ரபத்யே.

பொன்னை பொற்கொல்லன் உரை கல்லில் உரைத்தாற் போல் பகவானை பக்தன் நாவில் உரைத்தேன் என்பது.

பாசுரம்

பொன்னைக் கொண்டுரைக்கல் மீதே நிறமெழ
உரைத்தாற்போல்
உன்னைக் கொண்டேன்னு வகம்பால் மாற்றின்று
யுரைத்துக் கொண்டேன்
உன்னைக் கொண்டென்னுள்வைத்தே னென்னையு
முன்னிலிட்டேன்
என்னப்பாவென்னிரு கேசு
வென்னுயிர்க் காவலனே.

பொன்னைப் பரீக்ஷிக்க விரும்புபவர்கள் அதனை உரை கல்லில் இட்டு உரைத்துப் பார்ப்பார்கள். அதுபோல் பொன்போன்ற உன்னை அற்ப சாரங்களில் ரசிக்கும் என் நாக்காகிற உரைகல்லில் இட்டு உரைத்தேன். நல்லபொன்னைக் கெட்ட கல்லிலிட்டு உரைத் தால் அப்பொன்னினுடைய மாற்றுக் குறைவதுபோல். நீ என்றன் அசுத்தமான நாக்கில் உரைக்கப்பட்டமையால் பரிசுத்தமான உனது மாற்று அழியப் பெற்ருய் என்பதாகும். மாற்றுஉரைத்துப் பார்ப்பதற்கென்றே தனிப்பட்ட ஒரு கல்லுண்டு அது பொன்னின் தரத்தையும் காட்டும் பொல்லா பொன்னை உரை கல்லில் உரைத்துப் பார்த்தால், நல்ல நிறமுண்டாக மாட்டாது. அதனிடம் உள்ள மாற்றல்லவோ காணப்படும் நல்ல பொன்னை யும் பொல்லாப் பொன்னையும் உரைகல்லில் உரைப்பது அவை களின் நிறம்அறிவதற்கென்றே என்பார்கள். உனது நிறத்தை தேவர்களாலும். முனிவர்களாலும், இன்னு மேலோர்களாலும், பார்க்க ஒண்ணுத மாற்றை என் தரமற்ற நாவகம்பால் உரைத்தேன் என்பது நான் உன்னைத் தூஷிப்பதாகுமேயன்றி

பூஷிப்பதாக மாட்டாது. மாற்றின்றி என்பது, உம்மை மாற்றழியும் படி பேசினேன் என்பதாம். நல்ல பொன்னை நல்ல கல்லில் உரைத்தாலொழிய மாற்றறியலாகாது. தரமல்லாத கல்லிலே உரைத்தாரைப் போலே உன்னை என் தரமற்ற நாவினுல் தூஷித்தேன் என்பதாகும். பொன் என்பது ஈஸ்வரன். கல் என்பது நாக்கைச் சொல்வதாகும்.

உன்னை என் நெஞ்சினுள் அமைத்தேன். நீசனுன அடியேனையும் உனக்கு சேஷப் படுத்தினேன் நானுன்னையன்றிலேன்; நாராயணனே நீ யென்னையன்றில்லை. ஆனுல் நீ மாயன். உள்ள போது உன்னை உணர மாட்டேன். பல இடங்களில் உன்னைத் தேடினேன். நிலவளம் நீர்வளம் பல வளங்களிலும் தேடினேன். உம்மைக் காண மாட்டாதவனுனேன். பல உயிரினங்களின் உள்ளத்திலிருப்பதாக ஸ்ருதிகளும் ஸ்ம்ருதிகளும் கூறியுள்ளன. ஆகவே எனது இருதய கமலத்தில் இடங்கொண்டு சாக்ஷி பூதமாக இருப்பதாகக் கண்டேன். நீயன்றி நானில்லை நானன்றி நீயில்லை என்பதை அறிந்தேன் அறியேன். தெரியேன் அநேகக் கோடி பாபங்கள் செய்துமிட்டேன் நீர் என் உள்ளம் புகுந்து ஞானம் புகுத்தியதனுல் உனது திருவடி அடைந்தேன் இனி உம்மை விட்டு இறைப்பொழுதும் அகலகிலேன் சரணம். சரணம் பிரணுமி.

## பிறந்த இடத்தையும் பால் உண்ட ஸ்தனத்தையும் பிறகு மனிதன் விரும்புதல்

யஃ ஸ்தநம் பூர்வபீதஸ்தம் நிஷ்பீட்யமுதமஸ்நுதே
யஸ்மாத் ஜாதோ பகாத்பூர்வம் தஸ்மிந்நேவபகேரமந்

என்னும் யோகதத்வோப நிஷத்வாக்யரீதியாயும் பூர்வம் எந்த ஸ்தனங்களில் பாலைக்குடித்தானே, அந்த ஸ்தனங்களையே பார்த்து இப்போது மோகித்து சந்தோஷிக்கிருன். எந்த த்வாரத்தில் முன் பிறந்தானே அந்த த்வாரத்தையேப் பார்த்து இப்போது சம்போக மயக்கமடைகிருன். இப்படி மாயையில் அழிந்து போகும் மக்களை உய்விப்பதற்காக கருணுமூர்த்தி சிந்தித்தார்.

## பகவான் ஜீவர்கள் மீது கருணை காட்டுதல்

பகவான் ஜீவர்கள் மீது கருணையுடையவராய் ஜீவர்கள் சித்த சுத்தி அடைந்து முக்திபெறுமாறு, வேதங்களை, கர்ம காண்டம்,

ஞான காண்டங்களாகப் பிரித்து, தான் சகுண ரூபமாய் நின்று, சங்கு, சக்ரம், கதை, கரிய திருமேனி முதலியன தரித்து, விஷ்ணு மூர்த்தியாயும் நின்று, வைகுண்டம் பிரவேசித்து அநுக்கிரகித்தார். அவ்வாறு அநுக்ஹிரத்தும் ஜீவர்களுக்கு தத்வஞ்ஞானம் உண்டாகவில்லை. விஷ்ணு மூர்த்தி வியாஸபகவானாக அவதரித்து, அவ்வேத வேதாந்த ஸாராம்ருதங்களைத் திரட்டி ப்ரஹ்மசூத்ரங்களை ஏற்படுத்தினார். இதற்கு உண்மைப் பொருள் விளங்காமையால் பற்பல மதஸ்தர்கள் அவரவர் கொள்கையின் கருத்திற்கேற்றபடி பற்பல வ்யாக்யானங்கள் செய்து கொண்டார்கள். அதனால் ஸ்ரீராமாநுஜர் காலத்தில் பிரம்ம சூத்திரத்திற்கும் உபநிஷதங்களுக்கும் பகவத் கீதைக்கும் அநேக உரைகளும் வியாக்யானங்களும் விரிவாக விளக்கியதால் பாஷ்யகாரர் என்றும் எம்பெருமானாரென்றும் பெயரிட்டுப் போற்றுகின்றோம். திருமந்த்ர ரஹஸ்யம் பாமர மக்கள் எல்லோரும் உஜ்ஜீவப்பதற்கு உலகமெல்லாம் பரவச் செய்தார். என்ன ஜாதி என்ன நிறம் என்று எண்ணாது விளக்கிக் காட்டினார்

## காண்பதற்கரிய விஸ்வரூபம்

பல யோகிகளும் பக்தர்களும் காண்பதற்கரிய விஸ்பரூப தரிசனத்தைத் தற்செயலாய் சஞ்ஜயன் கண்டான். சூழ்நிலையில் சிலருக்கு கிடைக்கும் வாய்ப்புகளில், இது மிகப் பெரியது. விஸ்வரூப தரிசனத்தின் ஒரு சிறு பகுதியைக் காணாத ஜீவன் ஜகத்தில் இல்லை. வியப்புக்குரியதும் தன்னை மேல்நிலைக்குக் கொண்டு போகக் கூடியதும் எதுவானாலும் அது இறைவனுடைய மகிமையேயாம். ஒவ்வொரு மனிதனுக்கும் அத்தகைய காக்ஷிகள் கிடைக்கின்றன. பெரும்பாலோருக்கும் அவைகளைப் பயன்படுத்தும் வழி தெரிகிற தில்லை. திரும்பத் திரும்ப அக்காக்ஷிகளைப் பற்றி நினைப்பது ஒரு வித தியானமாகும். மனது அதனால் நன்கு பண்படுகிறது. தனது மனதை உயர் நிலைக்குக் கொண்டு போகும் காக்ஷி எது வென்று சாதகன் ஒருவன் நினைத்துப் பார்க்க வேண்டும். இந்த ஆத்ம ரக்ஷாம்ருதம் நூலை பக்தியுடன் சிந்திக்குமவர்களுக்கு பரமபதம் சித்திக்கும் என்பது நிச்சயம்.

## மனிதன் ஸ்வதந்தரன் என்னும் விளக்கம்

''ஸ்வாதந்தர்யாத்ஸுகமாப்நோதி
ஸ்வாதந்தர்யா லபதே பரம்

ஸ்வாதந்தர்யா நிர்வுருதிம் கச்சேத்ஸ்வாதந்
தர்யாத் பரமம் பதம்''

பிறரிடம் சார்ந்திராமல் ஸ்வதந்தரமாக இருப்பவர்கள் நித்யஸுகம் அடைவார்கள். என்று கூறுவர் ஸ்வாதந்தர்யமாக இருப்பவனுக்கு பரமபதம் கிடைக்கு மென்பர். ஸவாதந்தர்யம் நிர்வாணம் அடையச் செய்யும். ஏனென்ருல், போஜன சுகாதிகளை பார்த்து முமுக்ஷுக்கள் பிறருடைய ஆதீனத்தில் இருக்கக் கூடாது என்று அஷ்டவக்ர முனிவர் கூறியுள்ளார். ஆகவே. ஞானிகள், ஆசார்ய சேவை செய்யாமல் (குரு) பரகதி அடைய முடியாது. இதனுடைய ரகஸ்யம் என்னவெனில், மனிதன் இந்திர்யங்களுக்கு வசப்படாது ஸ்வஸ்வரூப மாகவும், ஸ்வந்தரனுகவும் இருக்க வேண்டும். இங்கு போஜனஸுகாதிகளை நாடி ஸம்ஸாரிகளின் வீட்டில் இருக்கக் கூடாதென்பதாகும். ஒரு கிளியை பஞ்சரமென்னும் கூண்டில் அடைத்து நல்ல கனிகள் தேன், பால்; சர்க்கரை முதலானவைகளைக் கொடுத்தாலும் கிளியானது த்ருப்தி அடையாது. கிளியானது இச்சையாக ஆகாயத்தில் பறந்து தருக்கொழுத்தும், நீரும் கிடைத்த போதிலும் பரமானந்தம் அடையும் அதே போலவே ப்ரஹம ஞானிகளுக்கு கனிகள் பலஹாராதிகள் அதிகமாகக் கிடைத்தாலும், ஞானிகள் ஸந்தோஷமடையார்கள். ஆகையால் யோகி ஆனவர் தன்னந் தனியனுக இருந்து ப்ரஹம ஞானத்தை அனுஷ்டிக்க வேண்டு மென்பார்கள்.

## நாராயணனே பரப்ரம்மம்

''நாராயணபரம் பரஹ்ம தத்வம் நாராயண:பர:
நாராயண பரோஜ்யோதி: ஆத்மா நாராயண:பர:
யச்சகிஞ்கித் ஜகத்யஸ் மிந்த் ருச்யதேச்ருய தேபிவா
அந்தர்ப ஹி:ச தத்ஸர்வம் வியாப்ய நாராயண:ஸ்தீத:
— தைத்திரீய

பரப்ரஹ்மம் நாராயணனே உயர்ந்த உண்மையான வஸ்து. நாராயணனே: உயர்ந்த ஆத்மாவும் நாராயணனே. இந்த வுலகத்தில் காண்பனவும். கேட்பனவும் எல்லா வஸ்துக்களிலும் உள்ளும் புறமும். நுழைந்து நிறைந்திருப்பவன் நாராயணனே!

ப்ரஹ்மம் என்றால் என்ன? பரப்ரஹ்மம் என்றால் என்ன? தத்வம், பரம் தத்வம் என்றால் என்ன? ஆத்மா பரமாத்மா என்றால் என்ன! ஜகத் என்றால் என்ன? நாராயணனுடைய மற்ற நாமங்கள் யாவை?

ருஹத்வாத்ப்ரும் ஹணத்வாத்ச தத்ப்ரஹ்மேத்யபி—
தீயயதே

## ப்ரஹ்மம் என்பதைப்பற்றி விளக்கம்

ப்ரஹ்மம் என்றால் பெரிதாயிருக்கும் வஸ்து: தன்னை அடைந்தவர்களைத் தன்னைப்போல் பெரிதாக்கும் வஸ்து. இவ்வுலகில், குலத்தினாலோ, வித்தையினாலோ தனத்தினாலோ அதிகாரப் பதவிகளாலோ, ஆசார அனுஷ்டானங்களினாலோ, பெரியோர்களை அண்டி மனுஷ்யர்கள் அந்தந்தப் பெருமைகளை அடைகிறார்கள். பரலோகங்களிலும், இம்மாதிரியே ஆனந்தம், அதிகாரம், சக்தி முதலியவைகளில் ஏற்றத்தாழ்வுகளுடன் பல பதவிகள் இருகின்றன. இந்திரன் சந்திரன் குபேரன் முதலிய தேவதைகளைத்தொழுது அவர்களிடமிருந்து வரம்பெற்று இஹலோகத்திலும், அவரவர்கள் அதிகாரத்துக்குட்பட்ட பரலோகங்களிலும் பதவிகளைப் பெறுகிறார்கள். ஆயுளிலும் அதிகாரத்திலும். ஆனந்தத்திலும் சக்தியிலும் சிறந்தவனாகிய சிவனை உபாஸித்து அவருடைய லோகத்தை அடைந்து அவருக்கு ஸமானமான குணம், வீர்யம்,சக்தி, ஆனந்தம் முதலியனவகளை அடைந்து அவருடைய சேர்க்கையை அடைகிறார்கள். அவரை ஈன்றவனாகிய பிரமனை உபாசித்து வரம்பெற்று அவருடை ஸத்யலோகத்தை அடைந்து பசி தாஹம் முதலிய, ஆறு விகாரங்களும் (ஊர்மிகளும்) இல்லாமலும் ராஜஸகுணமடைந்து, படைக்கும், தொழிலில் பிரமனுக்கு உதவி புரிந்து கொண்டும் வேதவேதாந்தங்களை விமர்ஸனம் செய்து கொண்டும் பொழுது போக்குகிறார்கள். ஆனால், விதிசிவாதிகளுக்கும், அவர்களுடைய ஆயுள், வீர்யம், சக்தி, ஆநந்தம், முதலியவைகளுக்கும் அவர்களுடைய உலகங்களுக்கும். காலம் முதலிய எல்லா வகைகளிலும், அளவு ஏற்பட்டிருக்கிறது. வேதக்கோனாகிய விஷ்ணுவிற்கோ அவருடைய உலகத்திற்கோ, அளவு கிடையாது. அவருடைய லோகத்தை அடைந்து, ஸமீபத்தையும் சேர்க்கையையும் அடைந்து அவரைப்போல் ரூபத்தையும் ஆயுதங்களையும் தரித்துக்கொண்டு அவரைச் சூழ்ந்திருந்தேத்தி அச்சுதனடியார்கள் ப்ரம்மத்தை அடைகிறார்கள்.

**பலதேவதைகளை பகவான் ஜலப்ரளயத்தில் காத்தல்**

நெற்றிமேல் கண்ணானும் நிறைமொழிவாய்
நான்முகனும் நீண்டநால்வாய்
ஒற்றைக்கை வெண்பகட்டில் ஒருவனையும்
உள்ளிட்ட அமரரோமும்
வெற்றிப் போர்க்கடலரையான் விழுங்காமல்
தான்விழுங்கி உய்யக்கொண்ட
கொற்றப் போராழியான் குணம்பரவாச்
சிறுத்தொண்டர் கொடியவாறே

(கலியன்)

என்று அருளிச் செய்திருக்கிறார். அதன்படி ஈச்வராபிமானிகளாகிய நெற்றிக் கண்ணன். நான்முகன். இந்திரன் முதலிய மற்ற தேவதைகளையும் பிரளய ஜலத்தில் அமிழ்ந்து போகாமல் தன்குக்ஷியில் வைத்து ரக்ஷித்தவனன்றோ எம்பெருமான்? அவர்களை எம்பெருமான் உண்டுமிழ்ந்த எச்சில் என்றும் அனுசந்திக்கிறார். எல்லோருடைய இருதயத்திலும், நான் இருக்கிறேன். என்று கீதையிலும் (''அந்த: பரவிஷ்ட: சாஸ்தா ஜநாநாம்'') (உள்நுழைந்து ஜனங்களை நியமிப்பவன்.) சரீரமாய்ப் பரதந்த்ரனான ஜீவனுக்கு ஸ்வதந்த்ர கர்த்ருத்வம் கிடையாது. ஆகையால் பரமாத்மாவே ஸ்வதந்த்ரகர்த்தா ஆகையால், பகவான் பிதாஸ்தானம் லக்ஷ்மீ ஸ்மாத்ருஸ்தானம். இந்த சரீரம் உண்டாவதற்கு முக்யக்காரணமானவன் தகப்பனுவான். வேதமும் ''மாத்ரு தேவோ பவார பித்ருதே, வோபவா'' என்று தாய் தந்தையரை தெய்வத்திற்குச் ஸமானமாகப் புகழ்ந்திருக்கிறது ''அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்'' என்பர் தமிழர். இவ்வுலகில் கண்கண்ட தெய்வம் அவர்களே.

**நீதிசாஸ்திரம்**

''இம்முகசதவனி நோருநு அம்மாயநி பிலசி
அன்னமடகநி நோருநு
தம்முலபிலவநி நோருநு கும்மரிமனு
த்ரவ்வு நட்டி குன்டரஸுமதி''

மக்களின் செவிகளுக்கு இனிமை தரும்படியாக வாசிக்காத வாயும், கனகமுலை தந்து பாலூட்டி வளர்த்த மகன் தன் தாயி

னிடம் சென்று அம்மா எனக்கு பசிக்கிறது. ''அன்னம் கொடுக்கவா'' என்று அழைக்காத வாயும், தன்னோடு கூடப்பிறந்த (ப்ராதாக்களை) சகோதரர்களை அமைதியான வார்த்தைகளால் அழைக்காத வாயானது குயவன் மண்ணெடுக்கும் குழிக்குச் சமானம் எனலாம்.

—ஸ்ம்ருதி

## இந்தக் கதை

''புத்திகெட்ட மோபிகட்கு புத்தி சொன்னால் வெள்ளரிக்காய் கதைப் போலமுடியும் என்பார்.

## தாய் தந்தையர்களுக்கும் தனயனுக்கும் விரோத விளக்கம்

யஃபுத்ர: பிதரம்த், வேஷ்டி தம் வித்யாத்
அந்யரேதஸம்
யஸ்து நாராயணம்த் வேஷ்டி தம்வித்யாத்
அந்ய ரேதஸம்

பிதாவை த்வேஷிக்கும் புத்ரனை அன்யனுடைய ரேதஸுக்குப் பிறந்தவனாக அறியலாம். நாராயணனை த்வேஷிப்பவனை சண்டாளனுக்குப் பிறந்தவனாக அறியலாம்) என்பதிலிருந்து பித்ரு த்வேஷமும் நாராயணத்வேஷமும் கூடாதென்று ஏற்படுகிறது.

## உண்மையான தாய் தந்தை மாதவனே என்ற விளக்கம்

இப்படி லோகத்திலும் சாஸ்த்ரங்களிலும் மேலாகப்பேசப்படும் மாதாபிதாக்களிலும் மேலானவன் மாதவன் என்று, இங்கு சொல்லப்படுகிறது. முன் கர்த்தாவிகர்த்தா என்று சொல்லப்பட்ட பரமாத்மாவின் லக்ஷணங்கள் அறிவதற்குக் கடினமானவை என்று, லோகத்தில் எல்லோரும் அறிந்துள்ளனர். மாதா பிதா முதலானவர்களை, நாராயணனுக்கு த்ருஷ்டாந்தமாகக் காட்டுகிறது, வேதம். உலகிலுள்ள மாதா பிதாக்களைக் காட்டிலும் மேலானவன் முகுந்தன். இந்த உடல் தாய் தந்தையரால் ஏற்பட்ட சரீரம். இது நீண்ட நாள் நிலைத்து நிற்பதில்லை. மேலும் உயிரினங்கள் நிலையற்றவைகள். எண்ணிறந்த பிறப்புகளில் தாயாரெத்தனையோ! தந்தையர் எத்தனையோ! ஒரு காலத்தில் சுநச்சேபனின் தாய் தந்தையர்கள் அவனைப் பலியிடக் கொடுத்தது ராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அன்று அவனைக் காத்தவனும் வேதத்தில் மாதா பிதாவாக கோஷிக்கப்பட்ட நாராயணனே. மக்களை விற்கும் மாதா பிதாக்கள் இக்காலத்திலும் உண்டு.

இந்திரனுடைய குமாரனாகிய ஜயந்தன் என்னும் நரகாஸுரனை அவனுடைய அஸஹ்ய பசாரத்தைக் கண்டு வெறுத்து ரக்ஷிக்க முடியாது என்கிற நிச்சயத்தாலும் அவனை மறைக்க முற்பட்டால் தங்களுக்கு ஆபத்து வருமென்று அஞ்சியும் அவனுடைய பெற்றோர் கைவிட்டார்கள். ப்ரஹ்லாத ஆழ்வானுக்கு பெற்ற தகப்பன் பகையானது ஸுப்ரஸித்தம். இன்னும் எத்தனையோ பேர்கள் காமபரவசர்களாய் குழந்தைகளை உற்பத்தி செய்த பின்பு அக்குழந்தைகளைப் போக விரோதிகளென்று விட்டுப் போவார்களும் உண்டன்றோ? வள்ளுவர், சகுந்தலை, ஔவையர் திருமழிசையாழ்வார் முதலியோரின் தாய் தந்தையர்கள் இந்த கோஷ்டியைச் சேர்ந்தவர்களே. பொருளுள்ளவரை போற்றுவார்கள். இல்லாதவர்களைத் தூற்றுவார்கள். ''இல்லானை ஈன்றெடுத்த தாயும் வேண்டாள்'' என்றல்லவோ சொல்லப்பட்டிருக்கிறது.

ஆகையால், நமக்கு உண்மையான மாதாவும் பிதாவும் மாதவனே. மாதா பிதாக்களின் உறவு தேஹத்தினாலும் குணத்தினாலும் வந்த பந்தம். பகவானுடைய உறவு ஆத்மாவினால் வந்த ஸம்பந்தம். அவர்களுறவு கால் விலங்கு, இவனுறவு பந்த விமோசனம். அவர்களுடைய உறவு அநித்யமானது. அச்சுதனுடைய உறவு அனாதியாயும் நித்யமாயுமிருப்பது நமக்கும் நம்மையுடையவன் நாராயணனுக்கும் உள்ள உறவு இங்கும் அங்கும், இப்போதும், எப்போதும், ஒழிக்க ஒழியாதது. அந்தஸம்பந்தம், நவவிதம் என்று நன்கு உரைக்கப்பட்டிருக்கிறது.

''பித்ருமாத்ரு ஸுதப்ராத்ரு தாரா மித்ராபியோபி வா
ஏகைக பல லாபாய ஸர்வலாபாய கேசவ: ॥''

தந்தை, தாய், தனயன், ஸகோதரன், மனைவி, நண்பன் முதலானோர் ஒவ்வொரு ப்ரயோஜனத்தை அடைவதற்காக ஏற்பட்டிருக்கிறார்கள். ஆனால் கேசவனோ எல்லா லாபத்தையும் அடைபவனாக ஆகிறான். அவனை அடைவதற்கு அவர்கள் தடங்கலே அந்த மாதா பிதாக்களுக்குத் தன்னலம் என்னும் தோஷமும் பக்ஷபாதம் என்னும் பைத்யமும் உண்டு. இருடிகேசனுக்கு இவை இரண்டுமில்லை. தாயிலுமன்பன் நாராயணன். நாட்டிற் பிறந்து மனிதர்க்காகப் படாதன பட்ட தெல்லாம் அந்தப் பரமனை மனிதன் அடைய வேண்டும் என்பதற்காகவே யாகும்.

ஒருவனுக்கு ஜன்மாந்தர நற்றவத்தால் செல்வம் கிடைத்தாலும் அதை அனுபவிப்பதற்கு வாய்ப்பு இருக்க வேண்டும். ஒரு சிலர் செல்வம் பெற்றாலும் அனுபவிக்க மாட்டார்கள். தேவகி கர்ப்பத்தில் கண்ணபிரான் பிறந்தும் அதை அனுபவிக்கும் பாக்யத்தையசோதையல்லவா அடைந்தாள் என்பதாம்.

## யசோதைப் பிராட்டி தனது இனத்தாரான ஆச்சி மார்களை அழைத்து கண்ணனுடைய திருவுருவமாகிய அழகுகளைக் காட்டுதல்

அவதாரிகை—பஞ்சலக்ஷம் குடிகள் வாழும் திரு ஆயர்பாடியில் 'திரு அவதரித்த கண்ணபிரானுடைய திவ்யமங்கள் விக்ரஹத்தின் வைலக்ஷண்யத்தை. அக்காலத்தில் யாசோதைப் பிராட்டி அனுபவித்தாற் போலே அதாவது அவ்வூரிலுள்ள தன்னேடொத்த பெண்களை யெல்லாம் அழைத்து கண்ணன் அழகைக் காட்டினாற் போலே, ஆழ்வாரும் தன்னை அசோதை போலவே பாவித்து, கண்ணபிரான் அழகைத் தன் வாயினால் பாடியும் பேசியும் அனுபவிக்க விரும்பி திருவடி தொடங்கி திருமுடி அளவாக அனுபவித்துப் பேசுகிறார்.

## யசோதை கண்ணன் பாத விரலை தன் வாயில் வைத்து உண்பதைப் பற்றி விளக்குதல்

''சீதக்கடலுள் ளமுதன்ன தேவகி
கோதைக் குழலாள் யசோதைக்கு போதந்த
பேதக்குழவி பிடித்துச் சுவைத்துண்ணும்
பாதக் கமலங்கள் காணீரே பவளவாய்
வந்து காணீரே''

—பெரியாழ்வார்

...வேதத்தில் ''விஷ்ணே; பதே பரமே மத்வஉத்ஸ:. என்பது போல் எம்பெருமானுடைய சிறந்த திருவடியில் தேன் வெள்ள முண்டு என்று சொல்லப்பட்டதைப் பற்றி ஆழ்வார்களும் தேனே மலரும் திருப்பாதம் என்கிறார். இப்படிப்பட்ட தனது திருவடியிலுள்ள தேனைப் பருகுவதற்காகவும் தனது திருவயிற்றிலிருக்கும் உலகங்களை எல்லாம் உஜ்ஜீவன முண்டாகும்படி செய்வதற்காகவும் ஸ்ரீகிருஷ்ணன் தனது திருவடிகளிலொன்றை எடுத்து வாயில்

வைத்துச் சுவை பார்த்துக் கொண்டிருக்க அதைக் கண்ட யசோதைப் பிராட்டியானவள் தான் மகிழ்ந்ததைப் போலே. மற்றவர்களும் மகிழவேணுமென்றெண்ணி தன்னருகிலுள்ளாரைக் கொண்டாடி அழைத்து 'நீங்களும் இக்குழந்தை சுவைத் துண்ணும், இப்பாதக் கமலங்களைப் பாருங்கள் என்று அவர் களுக்குக் காட்டுகின்றாள்.

தேவர்களும் அஸுரர்களும் பாற்கடலைக் கடைந்த போது கடலில் இரண்டமுர்தங்கள் பிறந்தன; ஒன்று தேவர்களுக்கு போக்யமான உப்புச் சாறுகிய அம்ருதம். அது புறவமிர்தமாம் மற்றொரு அம்ருதம் ‖ அமுதில் வரும் பெண்ணமுது—எனப்பட்ட பிராட்டி; இவளே உள்ளமுதம். ஆகவே, இங்கு "உள்ளமுதன்ன" என்று பிராட்டியைப் போன்றவள் லக்ஷ்மியைப் போன்ற வடி வொத்த தேவகி என்று மிக மேன்மைப்படுத்திக் கூறுவார். பிராட்டியைப் போலவே பரோபகார குணமே சீலமாக உள்ள தேவகி என்க.

## தேவகி தனது மைந்தனை கண்ணனைப்பற்றி அவாவுதல்

கண்ணபிரான் தேவகி வசுதேவருக்கு மைந்தனாகப் பிறந்தும், மைந்தனென்று வாத்ஸல்யம் காட்டவோ, கூடிக்குலாவுவதற்கோ அவர்கள் பாக்யமற்றவர்களாகி விட்டார்கள். ஆயர்பாடியிலுள்ள பெண்கள். ஒருவர் வீட்டில் ஒரு குழந்தை பிறந்தால், அன்பு மிகுந்தவர்களாகி "செறிமென் கூந்தல் அவிழத்திளைத்து எங்கும், அறிவிழந்தனர் ஆய்ப்பாடி யாயரே" என்று அவரவர்கள் மயிர் முடியானது அவிழ்ந்து கலையும்படி விவேகம் அற்றவர்களாகி. ஓடோடி வந்து குழந்தையை அவர்கள் துடையின் மீது இருத்தி, மார்போடு அணைத்து முத்தமிட்டு உச்சிமுகர்ந்து புன்னகையுடன் குழவியின் முகமேரிட்டுப் பார்த்து முகமாவிட்டு. கண்மைதீட்டி, ப்ருமத்யதிலகமிட்டு கண்ணபிரானைக் கூடிக்குலாவுகின்ற போது அதைக் கேள்வியுற்ற தேவகி தன் புலன்களாலே தன் மகனையனு பவிக்கப் பெருமைக்குப் பரிதவிக்கிறாள்.

"அம்மாவென்று கந்தகழைக்கும் ஆர்வச்
சொல்கேளாதே அணிசேர்மார்வும்
என்மார்வத்திடை யழுந்தத்தழுவாதே
மழுவாதே மோவா துச்சி

கைமாவின் நடையன்ன மென்னடையும்
கமலம்போல் முகமும் காணு
தெம்மானை யென்மகனை யிழந்திட்ட
இழிதகையேன் இருக்கின்றேனே''

— குலசேகரர்

என் மகன் களிப்புற்று அம்மா என்றவாறு ஆசையுடன் அழைக்கிற சொல்லைக் கேட்டுக்கொண்டிராத படிக்கும். ஆபரணங் களைக்கொண்ட அவனது மார்பானது எனது மார்பிலேபடும்படி அணையாத படிக்கும், முத்தமிடாத படிக்கும். அவனது உச்சியும் மோத்தல் செய்யாதபடிக்கும். தும்பிக்கையுடைய மிருகமான யானையின் நடைக்கு ஒத்த மெல்லிய நடையழகையும். தாமரைப் பூப்போல முகத்தையும், கண்டு கொண்டிராதபடியும் ''என் ஐயனே'' என்று என்மைந்தனை அருகிலிராதபடி செய்து கொண்ட இழிவான குணமுடைய நான் உலக நிந்தைக்கும் துணிந்து உயிருடனிருக்கின்றேனே! என்னைப் போல் மைந்தனைப் பெற்று மாற்றுத் தாயிடம் யாரேனும் கொடுப்பார்களா? மாற்றுத் தாயான யசோதையல்லவோ குழவியின் பெருமையையும் மயல் சொல்லழகையும் அனுபவிக்கிருள்? அவன் கரத்தை மாற்றுத் தாயல்லவோ கோத்துக் குழைத்து குணுளமடித்துத் திரிகின்ருள். மாபாவியான என் கண்கள் அதைக் கண்டதனுல் மனமானது கொதிகலத்தில் அனல் கொதிப்பது போல் கொதிக்கின்றதே, ஐயோ! என்னைப் போல் பிள்ளையைப் பறிகொடுத்த மாபாவி ஒருவள் இருப்பாளா? ஒப்பற்ற பிள்ளையைப் பெற்றும் மலடி யல்லவோ நான். அவனது செந்தாமரைக் கண்ணழகும், கார்மேனி உடலழகும், கதிர்மதியின் திருமுகத்தழகும். செங்கேழ்விரலழகும் கடைக்கண்ணழகும் அமுதூற்றும் திருப்பாதக் கமலங்களினழகும், அபயஸ்தம் கொடுக்கும், திருக்கரங்களினழகும் காணக் கூடாத அந்தக மாகிவிட்டேன். ஆஹா! பாவமே என் செய்தேன்? என்று பரதவிக்கின்ருள்.

யசோதையானவள் அனுபவிக்கும் அந்த பாக்யம் நமக்கு இல்லையே என்று தேவகி வருத்தமடைந்தாற்போல் ஆழ்வார் வருந்திப் பேசுகிருர்.

முந்தை நன்முறை யன்புடை மகளிர் முறைமுறை
தந்தம் குறங்கிடை யிருத்தி
எந்தையே! எந்தன்குலப் பெருஞ்சுடரே!
எழுமுகில் கணத்தெழில் கவரேறே
உந்தையாவனென்றுரைப்பநின் செங்கேழ் விரலினும்
கடைக்கண்ணினும் காட்ட
நந்தன் பெற்றனன்; நல்வினையில்லா நங்கள்கோன்
வசுதேவன் பெற்றிலனே

—குலசேகரர்

தாய் தந்தைகளுக்கும் முன்னுன பாட்டிமார் போன்ற நல்ல உறவையும் அன்பையுமுடைய ஸ்த்ரீகள் ஒருவர் பின் ஒருவராய் வந்து கண்ணனை அவர்களுடைய தொடைகளிலே (மடியிலே) விட்டுக்கொண்டு ''என் அப்பனே! எங்கள் குலத்தில் தோன்றிய பெரிய விளக்கே! நீர்கொண்ட மேகம்போல் காந்தியைக் கொண்ட சிங்கமே! உன் தந்தையார் காட்டு'' என உன்னைக் கேட்கும்போது, நீ உனது சிவந்த நிறமுடைய விரலாலும் கடைக்கண்ணாலும் இவர் தான் என் தந்தையெனத் தெரிவிப்பதற்கு நந்தகோபனல்லவோ அந்த பாக்யம் பெற்றான். நல்வினை இல்லா எங்கள் தலைவரான உன் தந்தையானவர் மஹா பாவியாகிய என் கையைப் பிடித்த என் பர்த்தாவானவர் அந்த பாக்யம் பெறவில்லையே'' என்றாள்.

மானிட தேகமெடுத்த அனைத்து மக்களும் மோக்ஷமென்னும் வீட்டை அடையச் செய்வதற்கு அஷ்டாக்ஷரமந்திரம் ஒன்று இருக்கிறது. அது என்ன மந்திரம் என்பதை ஆராய்ச்சி செய்ய வேண்டும்.

## பகவான் நம் வாயினுல் சொல்லுவதற்கு வசப்படடவன் என்று விளக்குதல்

''நாராயணேதி ஶப்தோ அஸ்தி வாகஸ் திவஶவர்த்திநீ
ததாபி நரகேகோரே பதந்தீதி கிமத் புதம் ॥''

நாராயணனென்னும் சொல் உள்ளது. அது வாக்கென்னும் இந்திர்ய வஶத்திலுள்ளது. அப்படியும் கொடிய நரகில் வீழ்கின்றனரே என்ன ஆச்சர்யம்! பல பாபத்திலிருந்து மீள்வதற்கு ஓம் நமோ நாராயணாய என்னும் அஷ்டாக்ஷரமந்த்ரம் உதவுகிறது. அந்தக் கரணத்தில் மனனம் செய்யவேண்டுவதை கர்மவாக்கினுல்

சொன்னால் போதுமா? என்பது முக்யமான கேள்வி! ஆகவே நாராயணா என்னும் மந்திரம் எல்லாரும் சொல்லக் கூடியது. ஆனால், குருவினால் உபதேசம் பெற்றால் பிரதிபலிக்கும் என்பதை அறியவும். கர்மவாக்கினால் சொல்வதைவிட அனன்ய, சிந்தை யோடு அந்தக்கரணத்தில் மனனம் செய்தால் மோக்ஷமென்னும் விடு அடையலாம் என்பதற்கு ஓர் உதாரணம் உண்டு. புகை வண்டி நிலையத்தில் வண்டி வந்து நிற்கின்றது. அது புறப்படுவதற்கு பச்சைக் கொடி காட்டுவார்கள். புகை வண்டி நிலையத்திற்கு அதிகாரியானவர் கொடி காட்டினால் நின்றிருக்கும் வண்டி புறப்படும். அதே கொடியை அன்யமானவர் காட்டினால் வண்டி போகுமா? அந்த நிலையத்திற்கு அதிகாரியின் மகன் வந்து அக் கொடியைக் காட்டினால் போகுமா? போகாது என்பதை அறிய லாம். மற்றோர் உதாரணமுண்டு. இராமாயண காவ்யத்தில் லக்ஷ்மணசுவாமி இலங்கையில் போர் நடந்த போது இராவண னுடைய குமாரன் இந்திரஜித்துவின் நாகாஸ்திரங்களால் கட்டுண்டு லக்ஷ்மணஸ்வாமி துன்பமடைந்த போது நாகங்களை விடுவிக்க அவைகளுக்கு விரோதியான கருடன் வைகுண்டத்திலி ருந்து வந்ததும் நாகாஸ்திரங்கள் விலகிவிட்டன என்பதாகும்; யுத்தகளத்தில் இராமபிரானும். மற்ற வீரர்களும். இருந்தும். கருடன் லக்ஷ்மணசுவாமியின் துன்பங்களை நீக்கினதுபோல், மனிதர் கள் பாபங்களிலிருந்து மீளுவதற்கு அஷ்டாக்ஷர மந்த்ரம், குருவி னிடம் உபதேசம் பெற வேண்டும்.

## குரு என்பதைப் பற்றி விளக்குதல்

"குகாரஞ்ச குணாதீதம் ருகாரம் ரூபவாஜிதம்"

குரு வென்னும் இரண்டு அக்ஷரங்களில் கு. என்னும் அக்ஷரம். சுத்த நிர்க்குண சொரூபம். ரு. என்னும் அக்ஷரம் கேவல நிராகார பரப்ஹ்மம். ஆகவே, குரு வென்றால் சுத்த நிர்க்குண நிராகார பரப்ரஹ்மம்.

## கொண்டமனைவியை சேர வைத்து பரஸ்த்ரீ இடம் சேர்ந்தவனைப் பற்றிக் கூறுவது.

"வம்புலாம் கூந்தல் மனைவியைத் துறந்து
பிறர் பொருள் தாரமென்றிவற்றை
நம்பினாரிறந்தால் நமந்தமர் பற்றி
யெற்றிவைத்து எரியெழுகின்ற

செம்பினு லியன்ற பாவையைப் பாவி
தழுவென மொழிவதற்கஞ்சி
நம்பனே வந்துன் திருவடி யடைந்தேன்
நைமிசாரணி யத்துளெந்தாய்.''

— திருமங்கை

பாமர மக்களுக்கு விஸ்வாஸகனுக நிற்கும் ரமபவித்ரமான சுவாமியானவனே! பரிமளம் வீசா நின்றுள்ள குழலுடையவளான மனைவியை பந்துக்கள் சாக்ஷியாகவும் அக்நி சாக்ஷியாகவும் தேவர்கள் சாக்ஷியாகவும் அருந்ததி சாக்ஷியாகவும் மாலையிட்ட தர்ம பத்தினியைக் கைவிட்டு வேறுஸ்த்ரீகளின் அழகிய முகமும் அவளின் கொங்கைகளின் மீது மோகம் கொண்டு அறிவீனனுகி பரஸ்த்ரீகளை நாடிச் சென்ற பாதகனுன நான் இறந்து போனுல் எமகிங்கரர்கள் ஆயிரம் பேர்களாக வந்து பிடித்து அடிக்கும் நான் விரும்பிய பரஸ்த்ரீயை போல் செம்பினுல் ஒரு பாவையை செய்து அதை பழுக்க தீயிலிட்டு எரிகின்ற பாவையை பாவீ இதை தழுவக் கடவாய் என்று அடிப்பார்கள். அதனுலே பயந்து உன் திருவ அடைந்தேன். அறிவீனனுனவன் தம்பி மனைவியை விரும்பி வாலி மாண்டு போனுன். காட்டில் தமயந்தியை விரும்பி வேடுவன் எரிந்து விட்டான். மாயா சீதையைக் காதலிக்க வேண்டி இராவணன் அழிந்து போனுன். ரிஷிபத்தினியான அகலிகையை காதலிக்க வந்த இந்திரன் அங்கஹீனனுனுன். குருபத்தினியாகிய தாரையை விரும்பிய சந்திரன் உடல் தேய்வு பெற்றுன். இதுபோல் 'கொண்ட பெண் சேர வைத்து க்ஷத்தியாண்டால் குடிவாழ்வுக்கு உதவாது வியாதி சொந்தம்'' என்னும் பழமொழி கேட்டு, யமகிங்கரர்கள் வந்து என்னை நலியச் செய்வார்கள் என்னும் பயத்தால் உனது திருவடி அடைந்தேன் என்பதாம். உனது திருநாமத்தைக் கற்றவர்களில் துருவன் தவத்தில் மீண்டு வந்தான். ப்ரஹல்லாதன் பகவத் கடாக்ஷம் பெற்றுன். விபீஷணன் இலங்கைக்கு வேந்தனுன். பாண்டவர்கள், அரசு பெற்றுர்கள். துரௌபதி ஆபத்தில் உதவி பெற்றுள். கஜேந்திரன் மோக்ஷமடைந்தான் இவர்களில் தீயவர்கள் தீமை அடைந்தார்கள். ஞானிகள் மேன்மை பெற்றுர்கள் என்பதை புராணங்களின் வாயிலாகவும், பெரியோர்கள் கூறுவதைக் கேட்டும பேரருளாளனுகிய உமது திருவடி அடைந்தேன் என்னை ரக்ஷிக்க வேண்டும்.

## பர்த்தாவுக்கு வயது ஆன காலத்தில் மனைவி விரும்பாளென்னும் விளக்கம்

''ஈசிபோமின் ஈங்கு இரேன்மின்
இருமிஇளைத்தீர் உள்ளம்
கூசியிட்டீர் என்று பேசும்
குவளையங் கண்ணியர்பால்
நாசமான பாசம் விட்டு
நன்னெறி நோக்கலுறில்
வாசம்மல்கு தண்து ழாயான்
வதரிவணங்குதுமே''

— திருமங்கை

முதுமைக் காலத்தில் மனைவியானவள் தனது பர்த்தாவை தன்னருகில் வருவதும் பேசுவதும், வேண்டாம். தூரமாகப் போவீர் என்று கடிந்து பேசுவாள். புருஷன் பால்யத்தில் மனைவியிடம் பழகின ஆசையினால் இன்ப உணர்ச்சியான வார்த்தைகளைப் பேசுவான். அப்போது மனைவியானவள் கசந்து பேசினாலும் இன்ப வார்த்தைகளைப் புன்னகையோடு பேசுவான். ஆனால், மனைவியானவள் ''ஈசிபோமின் ஈங்கிரேன்மின் என்பது போல். ஈசி= சீசி. போ இங்கே இருக்க வேண்டாம் என்பாள். அதற்கு பர்த்தாவானவன் என் ஆசைநாயகியே நான் உன்னைவிட்டு வெளியே போக வேண்டிய காரணம் யாது? உன்னை மாலையிட்டு கையைப் பிடித்தபோது உன்னைக் கை விடுவதில்லை என்று பந்துக்கள் சாக்ஷியாகவும், தேவர்கள் சாக்ஷியாகவும் அருந்ததி சாக்ஷியாகவும், அக்னி சாக்ஷியாகவும் சொன்னேனல்லவா? அதற்கு மாறாக நான் உன்னைவிட்டுப் போகலாமா? உனக்கு நான் இன்ப நாயகனல்லவா? என் இன்பத்துக்கு உகந்த நாயகியே, நமது வாழ்நாளில் அனுபவித்த இன்பத்தை மறந்து விட்டாயோ? அல்லது எனது அழகு மாறிவிட்டதோ? என்மேனி குறைந்து விட்டதோ? என்பான். அதற்கு இருமி இளைத்தீர் உள்ளம் கூசி விட்டீர் என்பாள் = ஐயா இருமல் அதிகமாகி அசடு ஒழுகுமாறு உடல் இளைத்து விட்டீர். ஆகையினால் உம்மைப் பார்ப்பதற்கு விருப்பமற்றவளானேன் என்பாள். ஆகவே மனைவியிடம் இது போன்ற ஹேயமான வார்த்தைகள் வருவதற்கு முன்னதாகவும் தனது சரீரம் தளரும் முன்னதாகவும் வடகோடியில் ஹிமோத்கிரி என்னுமிடத்தில் பத்ரிகாசிரமத்தில் எழுந்தருளி

யிருக்கும் நாராயணனே சேவிக்குமாறு ஆழ்வார் அருளிச் செய்தார் என்பதாம். ஏனென்றல் பத்ரி நாராயணனே சேவிப்பதற்கு வயது முதிர்ந்தவர் போக இயலாது என்பதற்கு இந்த உபமானம் சொல்லப்பட்டது.

## ஆசாரியர் சிஷ்யனுக்கு கூறுவது

அவித்யாம் ஸ்ரேஷ்டயாஸ் ரேஷ்ட: க்ஷர்ஸன் னேவதிஸ்டதி

மலம்மலேனுபஹரன் யுத்திஜ் ஞோரஜகோயதா

புத்தியுடைய வண்ணனவன் பூமியில் உண்டாகும் அழுக்கு உப்பு மண்ணினுல் வஸ்திரத்தின் அழுக்கை எப்படிப்போக்குவானே அப்படியே அவித்தியா சம்பந்தமான கர்மத்தை, வித்யா சம்பந்த மான ஸ்ரேஸ்டமான கர்மத்தினுல் போக்கவேண்டும் என்பது ஸ்ரீவசிஷ்ட முனீந்திரருடைய அபிப்ராயம். ஆகையினுல், முமு க்ஷுவான எனக்குப் பிரியமான தோழனே! ஸிஸ்நோதர பரா யணர்களான மூடவேதாந்திகளின் பிதற்றலே நமது செவியில் நுழையாதபடி நீ செய்யும் தியான நிஷ்டையை உன்னுடைய ஸ்வரூபஸ்திதியை அடையும் வரையில் விட்டுவிடக் கூடாது, விட்டால் குருத்துரோகியாகவும். ஆத்மா உஜ்ஜீவிப்பதற்குத் தடைப்பட்டவனுகவும், ஜனன மரணத்தில் ப்ரவர்த்திக்கிறவனுக வும் ஆவாய் என்பது நிச்சயம்.

(கர்ஷகன்) ஒரு விவசாயி ஆனவன் தான் பயிரிடும் நிலத்தில் பயிருக்குத் தடையாக இருக்கும் (புல்) அல்லது களேகளேச் சுத்தமாக எடுக்கும்படி வேலே ஆட்களுக்குக் கூறினுன். புல் எடுக்கவேண்டி யவர்கள் தனக்கு பலன் கொடுக்கும் பயிர்களேயும் பிடுங்கிப்போடும் மூடர்கள் இருப்பார்களா? அதுபோலவே, தீமை செய்யாதே என்று பல ஞானிகள் ஞானவிதிகள் விதித்திருக்க மோக்ஷ மார்க்கத்துக்குஉப யோகமாகும் யஜ்ஞ தான தபசு தியானுதிகளே கைவிட்டவர்களே கேவலம் மூடர்களான ஸுஷ்க வேதாந்திகள் என்று சொல்லுகிறுர் கள். ஆனுல், யோகியானவன் கூட, பாபமற்றவர்கள் போலவே தான் செய்யவேண்டிய கார்யங்களே விட்டுத் தானும் கர்மாதிகள். செய்யவேண்டும். ''பாமரர்களோடு பழகுவது விஷப் பாம்போடு பழகுவதுபோல் பழகி பாமரர்களேத் திருத்தவேண்டும்'' என்ற ஞானிகளின் உண்மையை அறியாத ப்ரகிருதிகள் சர்வகர்மாதிகளே நாம் செய்யலாம். எல்லாம் நாம் புசிக்கலாம் என்னும் பிதற்றலும் பொருந்தாது. மூடர்களோடு பழகுவது ஞானிகளின் நற்கொள்கை ஏனலாம்.

## பெரியோர்கள் போகும் வழியைப் பின் பற்றிப் பின்னவர்கள் போகும் விளக்கம்

"யத்யதாசரதி ஸ்ரேஸ்ட ஸ்தத்தேவேதரோஜன:
ஸயத்ப்ரமாணம் குருதே லோகஸ்தனுவர்ததே"

உத்தமன் என்பவன் எப்பணிகள் செய்யவேணுமோ, அவ்விதப் பணிகளைச் செய்வான். அப்படிப்பட்ட உத்தமன் எதை ப்ரமாண மாகப் பெறுவானே, அதையே ப்ரஜைகள் உத்தமம் என்று ஏற்றுக் கொள்வார்கள். ஆகவே, "யதாராஜா ததாபிரஜா:" என்பது போல், இப்பவும் சில கிராமாதிகாரிகள் சன்மார்க்கர்களாக இருக் கும் கிராமங்களில், அந்தக் கிராமவாசிகள் அனைவரும் சஜ்ஜனர் களாகவே இருகிறார்கள். சில கிராமாதிகாரிகள் மூர்க்கர்களாக இருக்குமிடத்தில் அந்தக் கிராமவாசிகள் துராசாரமானவர்களாக இருக்கின்றனர். கிராமவாசிகள் செய்யும் பாபத்துக்கும் புண்யத் திற்கும் அவர்களே காரணமாகிறார்கள். ஆகையினால், கிராமாதிகாரி களோ அல்லது, பெரியோர்களோ மிக ஜாக்ரதையாக இருக்கவே ணும். "யதாகுருஸ்ததாசிஷ்ய:" குரு எப்படியோ, சிஷ்யனும் அப்படியே இருப்பான். இது பிரத்தியக்ஷம். சில வேஷதாரிகள் நீச காரியங்கள் செய்வதும், மதுமாம்சாதிகள் புஜிப்பதும் உண்டு. அவர்கள் தம்மிடம் பழகும் சிஷ்யர்களும் அவ்வித துராசாரங்களைப் பழகாமலும் உலகத்தைப் பாழாக்காமலும் இருக்கும்படி செய்யு மாறு கருணாமூர்த்தியான பகவானை, இவர்களுக்கு நல்ல புத்தியைக் கொடுத்து ரக்ஷிக்கும்படி பிரார்த்திக்கின்றேன்.

## மோட்சத்திற்குரிய வழிகள்

உலகத்திலுள்ள ஜனங்களெல்லோரும் தன தான்யம், பசுபதி பத்னி, புத்ரபௌத்திராதிகளும் 'இருக்கவேண்டுமென்றும் மோக்ஷ முண்டாகவேணுமென்றும். நினைக்கின்றார்கள். இவ்விரண்டும், எவ்வாறு உண்டாகும்? பாரியாள் புத்திர தன தான்யாதி சம்பத்துக் கள் யாவும், மோக்ஷத்திற்கு நேர்விரோதமானவைகள் ஆகும். மேற்சொல்லியவைகளின்மீதுள்ள ஆசைகளெல்லாம். ஸ்த்ரீ புருஷர்களைவிட்டு நீங்கினால் மோக்ஷமென்னும் வீட்டைத் தப்பாமல் அடைவார்கள். மோக்ஷமென்றால் என்னவென்று நினைத்துக் கொண்டீர்கள். மோக்ஷமென்னும் வாக்யத்திற்கு சரியான அர்த்தம் விடுதலை அடைவதேயாம். இது விஷயம் இதில் அநேகமுறை சொல்லியிருக்கின்றோம். மேற்சொல்லிய ஆசைகள் யாவும். அநேக

கோடி ஜன்மங்களாய் ஸ்த்ரீ புருஷர்களைத் தொடர்ந்து கொண்டு வருவதனால் அந்த பாழும் ஆசைகள் மோக்ஷமென்னும் வீட்டை அடையவிடாமல் செய்விக்கின்றன.

## மாயையைப் பற்றிய விளக்கம்

இந்த ஆசைகள் மாயை என்று சொல்லப்படும். அதாவது இல்லாத வஸ்துவை, உண்டென்று ப்ரமையை உண்டாக்குவதே மாயை எப்படி என்றால் உங்கள் முதல் பாட்டி, பாட்டன், இரண்டாம் பாட்டி பாட்டன்,மூன்றாம் பாட்டன் பாட்டி முதலானவர்களும், பார்யா, தன, தான்யாதி சம்பத்துகளின்மீது சில வருஷங்கள் ஆசையுடையவர்களாயிருந்து, கடைசியில் மேற்சொன்னவர்களை எல்லோரையும் விட்டு, தனதென்று மதிமயக்கம் கொண்டு, உண்ணாது உறங்காது தேடிய பொருளைவிட்டு, எங்கே போகிறோம் என்றும் சொல்லாமல், தனியே போன விஷயம் எல்லோரும் அறிந்த விஷயமே. இதனால் என்ன ஏற்படுகின்றதென்றால் சில நாட்களுக்குள் அழிந்து போகத்தக்க ஸ்த்ரீ புருஷர்களில் எனது எனது என்று சொல்லிக்கொண்டு மாண்டவர்கள் கோடான கோடியுண்டு. அழிந்து போகத்தக்க ஸ்கூரீ வஸ்துவை எல்லாம் நிஜமென்று எண்ணி, பிரமையடைவதே மாயை என்றும், அவித்தை யென்றும் அஞ்ஞானமென்றும், சொல்லப்படும். ஆதலால் எல்லோரும் எல்லா ஆசைகளையும் ஒழித்து மோக்ஷமென்னும் வீட்டை அடைவதற்காகவே இந்த ஆத்மராக்ஷாம்ருதம் எழுதப் பட்டு இருக்கின்றது.

## வேதாந்த விளக்கம்

வேதாந்தமென்றால் வேதங்களுக்கெல்லாம் கடைசியில் முடிவாகிய பதவி எதுவோ அதுவே வேதாந்தம். அதாவது, ருக்,யஜுர், சாம, அதர்வண மென்னும் நான்கு வேதங்களையும் பரிசோதித்துக் கொண்டே செல்லச் செல்ல கடைசியில் மனதை ஒரே நிலையாய் நிறுத்தி பிறகு அந்த ஓர் நிலையும் அற்றால் தானே முக்தி பெறலாம் என்று வேதங்களின் முடிவில் சொல்லப்பட்டிருக்கின்றது. அந்த முடிவான விஷயம் எதுவோ அதை இந்த நூலில் தெரிவித்திருக்கிறேன். ஆதலால் பல இடங்களிலும் குரங்கைப்போல் ஓடித்திரியும் மனதை ஓடவிடாமல் ப்ரஹ்மசூத்திரத்தினால் (சுவாசமென்னும் நூலினால்) கட்டி ஒரே நிலையாய் நிறுத்திப் பிறகு அந்த ஓர் நிலையும் சூன்யமாய்ச் செய்தால் அந்த க்ஷணமே ஆனந்த முண்டாகும்.

மனது எதுவரையில் ஓடிக்கொண்டிருக்கிறதோ, அதுவரையில் ஆனந்த முண்டாகமாட்டா, எந்த மந்திரங்களும் ஜபங் களும் பூஜைகளும். செய்யாமல் பரமாத்ம சொரூபத்தில் மனதை ஐக்யம் செய்து விடுவதே வேதாந்தங்களின் முடிவான ரஹஸ்யார்த்தம்.

## மனவடக்கம்

ஆனல் ஒரே சமயத்தில் மனதை ஐக்கியம் செய்வது மிகவும் கஷ்டமாகும். ஆதலால், மனதை ஒரே நாட்டத்தில் நிறுத்துவதற் காக முதல் முதல் விக்ரஹ ஆராதனையைச் செய்ய வேண்டும். இவ் வாறுசெய்து வந்தால், மனம் ஒரே நாட்டத்தில் நின்று பிறகு அந்த ஒருநாட்டமும் தனக்குத் தானுகவே மறைந்துவிடும். இப்படிக்குச் செய்யாமல் (''அசாஸ்த்ரவிஹிதம் கோரம் தப்பயந்தே யே தபே ஜனு:/ தம்பாஹங்கார ஸம்யுக்தா: காமராக பலான்விதா;'' வீம்பும், அகங்காரமும் கொண்ட அஸுர இயல்பு உடையவர் களாய், காமமும் பற்றுதலும் வலுத்தவர்களாய் எந்த அறிவிலி கள் உடலிலுள்ள இந்திர்யங்களையும் உள்ளத்திலுறையும் என்னை யும் துன்புறுத்தி சாஸ்திரத்துக்கு ஒவ்வாத கொடுந்தவம் புரிகிறுர் களோ, அவர்களை அசுர வழியில் துணிந்தவர்களென்று கூறுவார் கள். ப்ரக்ருதி வாழ்க்கைக்காக பலவிருத்தகர்மங்கள் செய்து பிறகு நாலுவிதமான யோனிகளிற் போய்ப் பிறந்து கொண்டும் இறந்து கொண்டும் மாயை என்னும் இருளில் அகப்பட்டு வழி தெரியாமல் துக்கமென்னும் சமுத்திரத்தில் மூழ்கி பலவித துக்கங் களை அனுபவித்துக் கொண்டிருப்பதனுல் இவர்களை அடிக்கடி சிருஷ்டி செய்ய பிரம்ம தேவருக்கு அதிக கஷ்டத்தைக் கொடுக்கி ருர்கள். ப்ரபஞ்சத்தையும், ஜீவர்களையும் அவரவர்கள் செய்யும் செயலுக்கும் வினைக்கும் ஏற்ற பிறவிகளைக் கொடுக்கும்படி ப்ரஹ்ம தேவருக்கு பகவான் சொல்லிருப்பதனுல் ஜீவர்கள் நித்யாநந்த பதவியைக் கேளாமல், சிலநாளில் அழிந்து போகத்தக்க துக்க விஷ யங்களை அனுபவிக்க இச்சை கொண்டு வரங்களைக் கேட்டு. மோக மென்னும் இருளில் அகப்பட்டுக், கேவல விஷயானந் தத்தில் மூழ்கி, கடைசியில் பல ஜீவ ஜந்துக்களின் ஜன் மங்களை அடைந்து நல்வழிக்கு வராமல் மாயையிலேயே அகப் பட்டுக் கொண்டு, துக்கங்களையே நல்ல சுகமென்று எண்ணி, அவை களையே கேட்கின்றுர்கள். உலகத்திலுள்ள ஜனங்களின் இருதயக் கமலத்தில் அமர்ந்த ஆத்ம சொருபத்தை, மூடிக் கொண்டிருக்கும் ஆசாபாசங்களென்னும், அழுக்குகளைக் கழுவி, போக்கடிக்காமல் சரீரத்தின் மேலிருக்கும், அழுக்குகளைக் கழுவுகின்றனர்,

## ஸ்ஞன விதிகளை விளக்கிக் கூறுவது.

"அத்யந்த மலி நோதேஹோ தெஹீசாத்யந்த
நிர்மலம்
உபயோரந்தரம் ஜ்ஞாத்வா கஸ்யஸௌசம் விதீயதே
— முக்திகோபநிஷத்

தாய் தந்தையர்களுடைய சுக்கில சுரோணிதங்களினல் உண்டாகிய இந்த மாமிச சரீரம் அசுத்தம். இதில் நீ வசித்துக்கொண்டிருக்கும் ஆத்மா நிர்மலமானவன். இந்த இரண்டு தத்வங்களையும் விசாரித்த ஞானி எதற்கு சௌசம் செய்வான். அசுத்தமாகிய தேகத்திற்கே ஸ்நான சௌசாதிகள் செய்ய வேண்டுமே யொழிய. பரிசுத்தனுகிய ஆத்மாவிற்கு ஸ்நான சௌசாதிகளினல் பிரயோஜனமில்லை. இந்த ஸ்நான சௌசாதிகளினல் ஆத்மா பரிசுத்தமாவானென்பது விருதா பிரமையேயன்றி வேறல்ல. சரீரத்தின் மேலிருக்கும் அழுக்குகளைக் கழுவி விபூதியும் திருநாமங்களும் துளசி மாலைகளும் பூண்டு ஒரு ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டு ஜபமாலையைக் கையிற் பிடித்து முணு முணு வென்று உதட்டை அசைத்து கர்மவாக்கினல் மந்திரத்தைச் சொல்லி, ஜபமாலையைத் திருப்புவதால், இருதய கமலத்திலிருக்கும் ஆசை என்னும் அழுக்குகளைப் போக்கடிக்க முடியாது.

## ஹிருதய பரிசுத்தம்

"ஹ்ருதயம் நிர்மலக்ருத்வா சிந்தயித்வாப்யநாமயம்
அஹமேவபரம் ஸர்வமிதீபஸ்யேத்பரம ஸுகம்"
—எபங்க

இருதயத்தை, எவ்வித சங்கல்பமுமில்லாமல் படிகம் போல் நிர்மலமாய்ச் செய்து கொண்டு அதாவது ப்ரஹ்ம சிருஷ்டி நாள் முதல் நாளது வரையில் நாம் அநேக கோடி ஜன்மங்களை எடுத்துக் கொண்டே வருகின்ரும். இனியும் எத்தனையோ கோடி ஜன்மங்களையும் எடுக்கப் போகின்ரும். இதற்கு திருஷ்டாந்தம் ஸ்ரீ கிருஷ்ணர்ஜுந சம்வாதம் ஸ்ரீபகவத்கீதை அத்யாயம் 2 சுலோகம் 12.

## அர்ஜுனனுக்குப் பகவான் உபதேசம் செய்வது

''நத்வேத வாஹம் ஜாது நாஸம் நத்வம் நேமேஜ
நாதிபா:''
நசைவ நபவிஷ்யாம ஸர்வே வயமத: பரம்.''

ஓ, அர்ஜுனு! நான் இவ்வளவு தூரம் சொல்லியும் விஷயம் தெரியாமலே இருக்கின்ருய். நீயாகிலும் நாளுகிலும் நமது எதிரிலிருக்கும் இந்த ராஜாக்களாகிலும் மற்றும் யாராயிருந்தபோதிலும் ஒரு போதிருந்தும், மற்றொரு போதில்லாமலும், இருப்பதுண்டோ? நீ இதுவரையில் எத்தனையோ ஜன்மங்களெடுத்து இப்பொழுது இந்த ஜன்மத்தை எடுத்திருக்கின்ருயல்லவா? அப்படி இருக்க நீ துக்கப்படுவது எதைப் பற்றி? தேஹத்தைப் பற்றியா? அல்லது ஆத்மாவைப் பற்றியா? தேஹம் போய் விடுகின்றதே என்று வியசன முண்டானுல் ஒரு தேஹம் போகவும் மற்றொரு தேஹம் வரவுமாகவே இருக்கிறபடியால் ஜடமாகிய தேஹம் ஒருநாள் அழிவது நிச்சயம். நிச்சயமாய் அழியும் சுபாவமுடைய தேஹத்தைக் குறித்து நீ வியசனப்படுவதனுல் அது அழியாமலிருக்குமோ? ஜடமாகிய தேஹத்தைக் குறித்து நீ வியசனப் படுவதேன்? ஆத்மா போய் விடுகின்ற தென்பதைப் பற்றி வியசனப் படுவதினுல் பின் சொல்லப்போகும் பல ஸ்லோகங்களினுல் பரமாத்மா எப்படி நித்யனே; அப்படியே ஜீவனும் நித்யனென்று சொல்லப்பட்டிருப்பதனுல் அழிவற்ற சுபாவமுடைய ஆத்மாவைக் குறித்து, நீ வியசனப் பட வேண்டிய காரணமேயில்லை. தேஹத்தை அடைவதும், விடுவதும், ஜீவனுடைய கார்யமே யொழிய வேறல்ல.

''அவஜாநந்தி மாம் மூடா: மாநு ஷீம்தநும்ஆச்ரிதம்''

என்னுடைய பரம இயல்பை அறியாத மூடர்கள். மானுட உடலை எடுத்துள்ள என்னை அவமதிக்கின்றனர்.

அந்தர்யாமியாயிருக்கின்ற பரமாத்மா உடலில் எங்ஙனம் வாழ வேண்டும் என்பதை மக்களுக்குக் காட்டுதற் பொருட்டே ஓர் அவதார புருஷராக தேகத்தை எடுத்தார். இதை அறியாதவர் அவரை அவமதிக்கின்றனர்.

## பகவான் நமது இருதயத்தில் இருக்கும் உதாரணவிளக்கம்

''க்ருதமிவ பயஸ் நி கூடம் பூதே பூதேச வஸதி
விஜ்ஞானம்
ஸததம் மனஸி மந்த யித்வ்யம் மநோ மந்தாசபூதேந''

பாலில் நெய் ரகஸ்யமாய்க் காணப்படாமல் மறைந்திருப்பதுபோல் சகல ஜந்துக்களிலும். பரப்ரம்மத்தின் அம்சமாகிய ஆத்மா ரகஸ்யமாய் வெளியில் காணப்படாமல் மறைந்திருக்கின்றது.

## பரமாத்மா சரீரத்தில் குடியிருந்து கிளம்பி விடுதல்

''பத்மகோஶ ப்ரதீகாஶம் ஹ்ருதயம் சாப்யதோமுகம்
அதோ நிஷ்ட்யா விதஸ்த்யாந்தே நாப்யா முபரி
திஷ்டதி''

''நீலதோயத மத்யஸ்தா வித்யுல்லே கேவ பாஸ்வரா
நீவாரஶூ கவத்தன் வீ பீதா பாஸ்வத்யணுபமா''

(நாராயணோபநிஷத)

'':அங்குஷ்டமாத்ர: புருஷோங்குஷ்டம்ச
ஈஶஸ்: வர்னஸ்ய ஜகத: ப்ரபு: ப்ரீணுதி ஶஸ்வபுக்''

—(ஸூபாலோபநிஷத்)

உரை: பத்மகோசப்ரதீகாசம்—தாமரைக்கமலத்திற்குச் சமான மான யத்—எந்த. ஹ்ருதயம் சாமி—ஹ்ருதயம். அதோர்முகம்—தலைகீழாய் நிஷ்டயா நெஞ்சுக்கு. விதஸ்த்யாந்து — ஜானளவு. அத:—கீழ் நாபியாம்— நாபிக்கு விதஸ்த்யாந்து—ஜாணளவு. உபரி — மேல். திஷ்டதி — இருக்கிறது.

தியானிக்கப்பட்டவர்களை அனுக்கிரகிப்பதற்காக இருதய கமலத்திலிருக்கிறன். நீலகருத்த தோயத—மேகங்களின், மத்யஸ்தா—மத்தியிலிருக்கும். வித்யுல்லேகேவா—மின்னற் கொடி போல். பாஸ்வரா—ப்ரகாசித்துக் கொண்டு. நீவாரஸூ நவத்—நெல்லினுடைய நுனியிலிருக்கும் சிறியமுள்ளைப் போல். தந்வி—ஸூக்ஷமமானதும். பீதா—பச்சை நிறமுடைய காந்தியுடையதும், பாஸ்வத்யணூபமா—இதற்கு உபமானம் கொடுப்பதற்கு வேறொரு வஸ்து இல்லாததாய்.

அதாவது மாம்சத்துடன் சேர்ந்து நரம்புகளுடன் கூடி சிவந்த நிறமுடைய தாமரைக் கமலம் ஒன்று இருதயத்தில் தலை கிழாய்த் தொங்கிக் கொண்டிருக்கும். அந்த கமலம் அது தொண்டைக்கு ஜாணளவு கீழும் நாபிக்கு ஜாணளவு மேலுமாய் இருக்கின்றது. அந்தக் கமலத்தின் மத்தியில் முக்கியமான ரத்திரமொன்றுண்டு.

அந்த ரந்திர மத்தியில் அங்குல ப்ரமாணம் ஆகாசம் உண்டு. அந்த ஆகாசம் மலர்ந்த வெண்மையான தாமரை மலரைப் போலிருக்கின்றது. அந்த ஆகாச மத்தியில் சமுத்திரம்போல் ஜலம் நிறைந்திருக்கும். அந்த ஜலமத்தியில் பரமாத்மா நெல்லின் நுனியிலுள்ள சிறிய முள்ளைப்போலவும், மேகங்களின் மத்தியில் தோன்றும் மின்னலைப் போலவும்.

''கார்வண்ணம் திருமேனி கண்ணும் வாயும்
கைத்தலமும் மடியிணையும் கமல வண்ணம்
பார்வண்ண மட மங்கை பத்தர் பித்தர்
பணிபவர்மேல் பாவைக்குப் பாவம் செய்தேன்.
ஏர்வண்ண வென்பேதை யென்சொல் கேளாள்
எம்பெருமான் திருவரங்க மெங்கே யென்னும்
நீர்வண்ணன் நீர்மலைக்கே போவே னென்னும்
இதுவன்றோ நிறைவழித்தார் நிற்கு மாறே''

என்னும் நாலாயிர பிரபந்த வாக்கிய ரீதியாய் மிகவும், ஸூக்ஷ்ம மானதாயும் பச்சை நிறமுள்ள காந்தியுடையதாயும், இருக்கின்றது. இதற்கு தொண்டரடிப் பொடியாழ்வார் பிரமாணம்.

''பச்சைமாமலை போல் மேனி
பவளவாய்க் கமலச் செங்கண்''

அந்தப் பரமாத்மா ஜடராக்னிக்கு உஷ்ணத்தையுண்டாக்கி, ஜீவராசிகள் புசிக்கும். ஆஹாரங்களைப் பஸ்பம் செய்வித்து பாதப் பெருவிரல் முதல் உச்சிவரையில் உஷ்ணத்தை உண்டாக்குகின்றான். இப்படிப்பட்ட பரமாத்மா, இருதயகமலத்திலிருக்கும் ஜலத்துடன் சேர்ந்து இருப்பதனால் அவனுக்கு நாராயணன் (க்ஷீராப்தி வாசன்) என்று பெயர் வந்தது. அன்றியும் ஆலிலையின்மேல் பள்ளி கொண்டானென்றும் சொல்லுவார்கள். ஏனென்றால், இருதய கமலம் இரு பிளப்பாய்ப் பிளந்தபோது அது ஆலிலைவடிவமாயிருக்கும். இதற்குப் பெரியாழ்வார் திருமொழி ப்ரமாணம்.

''ஆலத்திலையான ரவினணைமேலான்
நீலக்கடலுள் நெடுங்காலங் கண்வளர்ந்தான்''

அந்த ஆலிலை மீதிருக்கும் ஜலத்தின்மீது அநேக கோடான கோடி ஜன்மங்களாய் ஜீவாத்மா மிதந்துகொண்டு வருவதனால்

அவனுக்கு ஆலிலையின் மேல் பள்ளி கொண்டானென்று பெயர் வந்தது. ஸ்ரீபகவத் கீதையில் அத்யாயம் 15, சுலோகம் 14ல் ஸ்ரீகிருஷ்ணபகவான் சொல்லுகின்றார்.

### பகவான் பிராணிகளிடம் இருக்கும் விளக்கம்

''அஹம் வைஸ்வாநரோபூத்வா ப்ராணிநாம்
தேஹமாஸ்ரித:
ப்ராணபாநஸமாயுக்த:பசாம்யந்நந்சதுர்விதம்''

நான் ப்ராணிகளுடைய தேகத்தை ஆசிரயித்து, அக்நிசொரூப மாயிருந்து கொண்டு அக்கிநியைத் தூண்டும் பிராண அபான வாயுக்களுடன் கூடிக்கொண்டு சாப்பிடும் பக்ஷயம் போஜ்யம் லேஹ்யம் சோஷ்யம் முதலாகிய நான்குவித ஆஹாரங்களையும் ஜீர்ணம் செய்விக்கிறேன்.

''புஷ்பமத்யே யதாகந்த: பயோமத்யே யதாக்ருதம்
திலமத்யேயதா தையலம் பாஷாணேஷ்விவ
காஞ்சனம்
ஹ்ருதிஸ்தாநே ஸ்திதம் பத்மம்தஸ்ய
வக்த்ரமதோமுகம்
ஊர்த்வநாளமதோபிந்து தஸ்யமத்யே
ஸ்த்திதம் ப்ரஹ்ம''

புஷ்பத்தில் வாசனை போலவும், பாலில் நெய்போலவும், எள்ளில் எண்ணெய் போலவும், கல்மத்தியில் தங்கம் போலவும், இருதய ஸ்தானத்தில் தாமரைக் கமலம் போன்ற, சிகப்பு வெண்மையுடைய மாம்சத்தினல் உண்டாயிருக்கும் கமலமத்தியில் ஜலமுண்டு. அந்த ஜலமத்தியில் பரமாத்மா நிவசித்துக் கொண்டிருக்கின்றார்.

ஆதலால், ஆலிலையின்மீது பள்ளி கொண்டிருக்கும் பரமாத்மாவே நாராயணன். இந்த நாராயணனே ப்ரஹ்ம, ருத்ரேந்திராதிகள் இவனே. இவனே, சித்ரகுப்தன், இந்த சித்ரகுப்தன் ரகசியம், அறியாத சில புருஷர்கள், சித்திராபுத்திரன் என்று வழக்கச் சொல்லாய் சொல்லுகின்றார்கள். ஜீவகோடிகள் செய்யும் புண்ய பாபங்களையெல்லாம், வேறோர் சித்திரா புத்திரன் இருந்து பார்த்துக் கொண்டு கணக்கு எழுதுவதல்ல அவனவன் செய்துவரும் புண்ய பாவங்களெல்லாவற்றையும் இருதய கமலத்திற் சாக்ஷிசொருபமா

யிருக்கும் ஆத்மா பார்த்துக் கொண்டு வருகின்றது. புண்ய பாபங்களைப் பார்த்துக் கொண்டு வருவதுமேயல்லாமல் ஜீவகோடிகளின் ஆயுட்பாகத்தையும் அவரவருடைய வினைக்கேற்ற சரீரத்தையும் ஆத்மா கொடுத்துக் கொண்டிருக்கின்றது.

''ஏஷஸர்வபூதாந்தராத்மா அபஹதபாப்மா
திவ்யோதேவ ஏகோநாராயண:''

எல்லா பூதங்களுக்கும் அந்தராத்மாவாகவும் தோஷமற்றவனாகவும், பரமபதத்திலிருப்பவனாகவும் உள்ள தேவன் நாராயணன் ஒருவனே.

ஆபத்துக் காலத்தில் ரக்ஷிப்பவன் நாராயணன்
''கிம்தத்ர பஹுபிர் மந்த்ரை
கிம்தத்ர பஹுபிர் வ்ரதை: |
நமோநாராயணாயேதி மந்தரஸர்
வார்த்த ஸாதக: (பாரதம்)''

பல மந்தரங்களால் என்ன பயன்? பல விரதங்களால் என்ன பயன்? நமோ நாராயணாய என்னும் மந்திரமே எல்லாப் பயன்களையும் ஈடேற்றிவைப்பதாகும். அந்தக்காரணங்கள் தன்வசம் ஆகுதற்கு ப்ராணாயாமம் என்னும் யோகம் அப்யாசம் செய்யும்படியும், யோகி ஆகும்படியும் அர்ச்சுனனுக்கு உபதேசம் செய்தார் என்குதாகும்.

ஓ அர்ச்சுனா நீ யோகியாவாயாக என்றதாகும். யோகசாதனத்தால் மிக மேலான பலன் இல்லை என்றால் பகவான் தனது ப்ராண தோழனுக்கு அதை போதித்து இருக்கமாட்டார். ஆத்மஸம்யோகமென்னும் பெயரினால் ஆறாவது அத்யாயத்தில் சொல்லப்பட்டது. இந்த கீதோபதேசம் ஒரு மனிதனுக்காக சொன்னதாக இல்லை. கேவலம் மானிடவர்க்கத்திற்கே சொன்னதாகும். அர்ச்சுனனை ஒரு குறிக்கோளாக வைத்துக்கொண்டு எல்லா ஜீவ ராசிகளுக்கும் உபதேசிக்கப்பட்டதாகும். ஸர்வமானிட புனர்ஜன்ம நாசரஹிதமாகும்படி உபதேசிக்கப்பட்டது. மோக்ஷமென்றால், சகல மனோ பாவங்களையும் அடக்கி சுகதுக்கங்களிலிருந்து விடுதலை அடைவதேயாகும். மன அடக்கத்தால் சமாதி சித்திக்கும். அதனால் முக்தி என்பது மனிதனுக்கு சித்திக்கும். என்று ஜாபாலோபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. முக்திக்கு ப்ரதான காரணமான ப்ராணாயாமத்தை எல்லோரும் இன்றளவும்

அப்யாசம் செய்கிறுர்கள். ஒரு சிலர் ப்ராணுயாமத்தை. ப்ராணத்துக்கு ஹாநி என்று பீதி அடைகின்றுர்கள். மிரளுபவர்களாகவும், தீரமற்றவர்களாகவும், செய்கின்ற இந்த பீதி ப்ரகருதியின் இயல்பாகும். உறுதியான மனதுடையவனே, யோகத்துக்குடையவனுவான். பயந்தவன் எதற்கும் தகுதியுற்றவன் ஆவான். "தைர்யே ஸாஹஸே லக்ஷ்மி" தைர்யமுள்ளவர்களேயே லட்சுமி ஏற்றுக்கொள்வாள். இதையே சத்யமென்று கூறுகிறேம். ப்ராணுயமாம் செய்வதால் ப்ராணன் தனக்கு ஸ்வாதீனம் ஆகுமே தவிர ப்ராணஹானி ஆவதில்லை. இது ப்ரமயேயாகும். நிஜமாகாது. தனது தங்கையின் புருஷனுகவும் மைத்துனனுகவும் இருக்கும் அர்ஜுனனை யோகி ஆவாய் என்று கூறிய யோகேஸ்வரனுன கிருஷ்ணன் சிந்திக்க மாட்டாரா? மைத்துனன் ஜீவிக்கத்தானே கருதுவார்? ப்ரபஞ்சத்தில் புகழத்தக்க ப்ராணுயாமம் செய்து கொண்டு ஏகாந்தமாக சில காலம் பழகி வந்ததாகப் புராணங்கள் சொல்லுகின்றன. எத்தனையோ பக்தர்களை உஜ்ஜீவிக்கச் செய்த ப்ராணுயாமம் நமக்கு மாத்திரம் ஏன் ப்ராணஹாநி செய்யும் என்று ஏன் நாம் ஆராய்ச்சி செய்யக் கூடாது? ஆனல் அடயோகமென்பது நோவுண்டாக்குவது என்பதேயாகும். எனவே ஸுலபமாகவும் ஸூக்ஷ்மமாகவும் காயத்ரி மந்த்ராந்த்ர கரணமாகவும், குருஸம்ப்ரதாயமாகவும் முக்தி பெறுவதற்குக் காரணமாகவும் இருக்கும் லேசான பிராணுயாமத்தை விட்டு விடுவது அறிவற்றதாகும். யோகமென்பது துன்பத்தைப் போக்குவதேயாகும். அதனுல் நமக்குத் துன்பம் நேராது 'யோகோபவதி துக்காஹ:' யோகமானது ஸகல துக்கங்களையும் தீயினில் தூசாகும் வண்ணம் செய்யும் என்பார்கள்.

## பகவான் பக்தர்களுக்கு ஆபத்துக் காலத்தில் உதவி செய்த விளக்கம்

"மஹத்யாபதி ஸம்ப்ராப்தே ஸ்மர்த்தவ்யோ
பகவாந்ஹரி:

(பேராபத்து வந்தபோது ஹரியை நினைக்கவேண்டும்)

"ஶங்க சக்ரகதாபாணே த்வாரகா நிலயாச்யுதா |
கோவிந்தபுண்டரீகாக்ஷரக்ஷமாம் ஶரணுகதாம் |"

[ஶங்கம், சக்கரம், கதை, ஆகிய ஆயுதங்களைக் கையிலுடையவனே! துவாரகையில் வாழும் அச்சுதனே! கோவிந்தனே! தாமரைக் கண்ணு! ஶரணமடைந்த என்னை ரக்ஷிப்பாய்]

கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணுமாம்
தூரவாஸிநம் |
ருணம்ப்ரவ்ருத்த மிவமே ஹ்ருதயாந் நாபஸர்ப்பதி |

வெகுதூரத்திலிருந்த என்னை துரௌபதியானவள் கோவிந்தா என்று கூப்பிட்டது விருத்தியடைந்த கடன் போலே என் நெஞ்சி லிருந்து அகல்கின்றதில்லை.

"ஸாங்கேத்யம் பாரிஹாஸ்யம் சஸ்தோபம்
ஹேளநமேவ வா |
வைகுண்ட நாமக்ரஹணமஶேஷா கஹரம்விது:

## பகவானை எந்த விதம் சொன்னாலும் சந்தோஷப்படுவார்

—என்னும் விளக்கம்

வேறொருவருடைய பெயரிட்டழைக்கும் போதும் பரிஹாஸத் திற்காகவும், அர்த்த மில்லாமலும், ஏளனமாகவும் வைகுண்ட னுடைய பெயரைச் சொல்லுவதும் கூட எல்லாப் பாபங்களையும், போக்குவதென்று ஞானிகள் கூறுவார்கள்.

மானவ ஜனங்கள் மீது தயை கூர்ந்து ஒவ்வொரு அவதார புரு ஷரும் பூலோக விஜயம் செய்தது வெறும் குருட்டு வாய்ப்பன்று அவதாரப் புருஷர்களின் ஒவ்வொரு செயலிலும் சிறந்த கருத்து கள் அடங்கப் பெற்றிருக்கும். மானுடர் முன்னேற்றம் அடைவதற் கான மார்க்கத்தை அவதார புருஷன் விளையாட்டுப் போன்று வினையாற்றிக் காட்டுகின்றன். ஆனல், தனக்கென்று வினையாற்ற வில்லை. மக்கள் உய்வதற்கான நெறியே அவதார புருஷனது நோக்கம். நோக்கத்துக்கேற்ற காலமும் உண்டு.

"யதா யதா ஹிதர்மஸ்யக்ளானிர் பவதிபாரத
அப்யுத்தானமதர்மஸ்ய ததாத்மான ஸ்ருஜாம்யஹம் |

தர்மத்துக்குக் குலைவும், அதர்மத்துக்கு எழுச்சியும் எவ்வெப் போழுது உண்டாகிறதோ அப்போதெல்லாம் என்னை நானே சிஷ்ரு டித்துக் கொள்கிறேன். சமூகத்திற்குத் துணைபுரியும் கர்மங்கள் தர்மங்களாகின்றன. அதர்மங்கள் தலை எடுத்துப் பெருங் குழப் பத்தை உண்டு பண்ணும் நெருக்கடி காலங்களிலெல்லாம் நானே அவதரிக்க வேண்டிய அவஸ்யம் ஏற்படுகின்றது என்று கண்ணன் கூறினர். அப்படி அவதரித்து வந்தவர் என்ன செய்தார்?

## இறைவன் அவதரிக்கும் காலங்களின் விளக்கம்

''பரித்ராணாயஸாதூனாம் விநாசாயச துஷ்க்ருதாம்
தர்மஸமஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே''

சாதுக்களை ரக்ஷிப்பதற்கும் துஷ்டர்களை அழிப்பதற்கும் தர்மத்தை நிலைநாட்டுவதற்கும் யுகந்தோறும் நான் அவதரிக்கிறேன் என்றார்.

அப்படி அவதரித்த அவதாரங்களில் நரசிம்ஹனுடைய தயையை என்னமவ்வன்று வர்ணிப்பது?

க்ருதயுகத்தில் திதியின் மகன் இரண்யகசபு என்று ஒருவன் இருந்தான். அவன் தேவர்களிடத்துப் பெற்ற வரங்களின் வலிமையையும் தனது தோள் வலிமையையும் பெருக்க நினைத்து நமக்கு ஒருவராலும் ஓர் அழிவு நேர மாட்டாது என்று துணிந்து விஷ்ணுவை விரோதித்துக் கொண்டான். தனக்கு வரமளித்த தேவர்கள் அனைவரையும் நொறுக்கி தன்னுடைய நாமம் தவிர எம்பெருமான் திருநாமம் நாட்டில் நடைபெற வொண்ணாது என விலக்கினான். அக் கொடியவனுக்கே பகவானைப் புகழ்ந்து பேசும் ஓர் மகன் பிறந்தான். அவன் பெயர் ப்ரஹலாதன். அவன் தாய் கர்பத்திலேயே நாரதர் உபதேசம் பெற்றவன்; விஷ்ணு பக்தன். ஆகவே, சிசுவை தன் பக்ஷம் பேச வேண்டுமென தனது உள்ளம் மகிழ்ந்து பகருகின்றான்.

## இரண்ய கசபு உவாச

''அனுதினஸந்தோஷணமுலு ஜனிதஸ்ரமதாபதுக்
கஸம் சோஷணமுல்
தனயுல ஸம்பாஷணமுலு ஜனகுலகும் கர்ணயுகளஸத்
பூஷணமுல்

—பாகவதம்

(தானவேந்திரன் சிசுவை முத்தமிட்டு) நாள்தோறும் நாம் அனுபவிக்கும் துன்பங்கள் அனைத்தும் போக்குவது நமது அருமைக் குழந்தைகள் பேசும் மையல் சொற்களாகும். ஆகவே உனது இனிய சொற்களை நான் கேட்க ஆர்வமுற்றிருக்கிறேன். என் கண்மணியே! என் செவிக்கினிய உன் வாயமுதம் தரும்படி உனக்கு மங்களகரம் உண்டாகும் வார்த்தையைச் சொல் என்றான்.

—5—

## ப்ரஹல்லாத உவாச

''எல்லசரீரதாருலகு நில்லநு சீகடிநூதி லோபலந்
த்ரெள்ளக விருநேமநு மதிப்ரமணம்புந பின்னுலெப்ரவ
ர்த்தில்லக ஸர்வமுன்னதநி திவ்யகளாமய மந்சு
விஷ்ணுநந்
துல்லமு சேர்ச்சி தாரடவினுண்டுடமேலு
நிசாசராக்ரணி''

—பாகவதம்

அப்பா சுக்லஸ்ரோணிதங்களால் உண்டாகிய தேஹாதிகள் அனேரும் இருளடைந்த பாழுங்கிணற்றில் விழுந்து துன்பம் அடையும். பாமர ஜனங்கள் புத்ர பௌத்ர களத்ராதிகள் போஷணார்த்தமாக திக்ப்ரமை கொண்டு திகைத்தவர்களாகிய மனிதர்கள் தூய மனத்தினராய் மாயவனை மாதவனை மனதில் நிறுத்தி தூய்மலரென்னும் ஆர்வமுள்ள புஷ்பங்களைச் சாத்தி மனனம் செய்பவர்களின் பாபசில்மிஷங்கள் தீயினில் தூசானது எரிவது போல் பஸ்பமாகிவிடுவது நிச்சயம் என்றான்.

## தானவேந்திரன் மகன் கூறிய வார்த்தையைக் கேட்டு மையல் நகையுடன் கூறுவது

எட்டாடிந நட்டாது ரிட்டட்டநி பலுகநெருக
ரிதருலசிசுவுல்
தட்டிஞ்சி எவ்வரேமநி பட்டிஞ்சிரோ
பாலகுனகுபரபக்ஷம்புல்

—பாகவதம்

சொன்னதைச் சொல்லும் கிளைப்பிள்ளை என்பதுபோல் சிறுபிள்ளைகள் நாம் பேசுவதையே பேசுவார்கள். ஆகவே யாரோ நம் சிறுவனுக்கு அந்யபக்ஷம் பேசும் போதனமொழிகளை கற்பித்தார்கள், என்று அஸுரகண்டகனான விஷ்ணுவுக்கு விரோதியான தானவேந்திரன் சுக்கிரபுத்திரனைப் பார்த்து சினம் கொண்ட மனதுடன் பேசினான்.

### குருபுத்திரன் தானவேந்திரனுக்குக் கூறுவது

''ஈபாபனு ஜதவிந்துமு நீபாதமுலான இங்க
நிபுணதத் தோடன்
கோபிந்துமு தண்டின்துமு கோபிம்பகமய்ய
தநுஜகுஞ்ஜரவின்டே''

—பாகவதம்

ஐயா தநுஜகுஞ்ஜரா! உனது பாதசாக்ஷியாக மிகுந்த உனது பராக்ரமத்தையும் தேவர்களை வெறுத்துப் பேசும் வகையையும் சிஸுவான உனது பிள்ளைக்கு கற்பனை செய்கின்றோம். உனது புத்திரனைக் கோபமாகத் தண்டிப்போம், அதற்குத் தாங்கள் கோபம் செய்யலாகாது என்று சண்டகமார்க்கன் பகர்ந்தான்.

### பிரஹலாதன் குரு உபதேசம் மறுத்தல்

சிசுவானவன் ஆசாரியன் உபதேசம் செய்த தாமஸ குணங்களை யும். அரக்கரான துஷ்டர்களுடைய உறவினையும் ரஜோகுணங்கள் அடங்கிய போதனு மொழிகளையும் நிராகரித்து அஞ்சா நெஞ்சனுய் தாக்ஷண்யமின்றி பெற்ற தகப்பன் பகையாவதையும் பாராட்டமல் பரமபவித்ரமான நாராயண கரமங்களையே விளக்கி எதிர்த்துப் பேசினுன்.

### பள்ளியில் ஓதிவந்த சிறுவனை தந்தை கேட்பது

''சோத்யம் பய்யெடி நின்தகாலமரிகென்
சோதிஞ்சி யேமேமி ஸம்
வேத்யாம்சுலு செப்பிரோ குருவுலே
வென்டம் படிம்பிஞ்சிரோ
வித்யாஸார மெறுங்ககோரெத பவத்விஜ்ஞாத
சாஸ்த்ரமுலோ
பத்யம் பொக்கடிஸெப்பி ஸார்த்தமுகன்
தாத்பர்யம்பு பாஷிம்புமா''

—பாகவதம்

என் கண்மணி போல் விளங்கும் ப்ரஹல்லாதா! அநேக நாட்களாகப் பள்ளியில் பழகினவன் ஆசாரியனிடம் நீ என்ன ஸாராம்

ஸங்கள் பழகினுயோ? அதில் ஓர் கட்டுரை பகர்ந்து. என்னுடைய செவிக்கு ஆபரணங்கள் அணிவிப்பது போல். நல்ல ஸாராம்சமான் இன்பமொழிகள் சொல்லவேண்டுமென்றுன்.

## கேட்கும் தந்தைக்கு பிரியநந்தனன் கூறுவது

''சதிவிம்சிரி நநுகுருவுலு சதிவிதி தர்மார்த்த
முக்யசாஸ்த் ரம்புலுநே
சதிவி நவி கலவுபெக்குலு சதுவுலலோ
மர்மமெல்ல சதிவிதி தண்ட்றி

—பாகவதம்

அப்பா குருமார்கள் எனக்குப் பாடங்களை நன்முகச் சொல்லித் தந்தார்கள். நான் வாசித்த பாடங்களிலுள்ள ரகஸ்யங் களையெல்லாம் புரிந்து கொண்டேன். அதில் முக்யமானவைகளை சொல்லட்டுமா? என்றுன்.

## பிரஹலாதன் கூறுவது

''கமாலாக்ஷுநர்சிம் சுகரமுலு கரமுலு
ஸ்ரீநாதுவர்ணிம்சு ஜிஹ்வ ஜிஹ்வ
ஸுரரக்ஷகுநிஜுசு சூட்குலு சூட்குலு
சேஷசாயிகி ம்ரொக்கு சிரமு சிரமு
விஷ்ணு நாகர்ணிம்சு வீனுலு வீனுலு
மதுவைரின் தவிலின மனமு மனமு
பகவந்து வலகொநு பதமுலு பதமுலு
புருஷோத்த முனிமீத புத்தி புத்தி''

—பாகவதம்

அப்பா, அம்போருஹநேத்ரன் என்னும் கமலக்கண்ணனை எனது கரங்கள் அர்ச்சிக்கும். செல்வத்துக்குடையவளான லக்ஷ்மீ நாயகனை என் நாவானது வர்ணிக்கும். அஸுரகண்டகனுன சுர நாயகனைப் பார்த்து எனது கண்கள் களிக்கும். மாமாயன் மாதவனை பேசும் கதாகாலக்ஷேபங்களைக் கேட்டு என் செவிகள் இன்பமடை யும். அர்ச்சாமூர்த்திகளாக எழுந்தருளிருக்கும் ஆலயங்களைத் தேடி எனது பாதங்கள் சென்று கொண்டிருக்கும். அப்பா அதுமட்டு மல்ல;

"எப்படிகையதி ப்ரஸ்துதமப்படிகா மாடலாடி
அன்யுலமனமுன்
நொப்பிம் கதனெநாவ்வக தப்பின்சுக
திருகுவாடு தன்யுடுசுமதி

—ஸுமதி

கால, நேரத்துக்கேற்ற வார்த்தைகளை மக்களுடன் அன்பாகப் பேசவேண்டும். அன்யமானவர்கள் மனதை நோகச் செய்யாமலும் தானும் நோகாமலும், நடப்பதே மனித குலதர்மமாகும், அஹிம்ஸாதர்மத்தை அறிவுறுத்தவேண்டும். பரத்தை அடையும் மார்க்கமறியவேண்டும். உண்மை நெறியை உணரவேண்டும், என்று சுமதி சதகம் கூறுகின்றது.

### தானவேந்திரன் சிறுவன்மீது சீறுவது

"பள்ளியில் ஓதிவந்த சிறுவன் வாயில்
ஓராயிரம் நாமம்
ஒள்ளியவாகிப்போத ஆங்கு அதனுக்கு
ஒன்றுமோர் பொறுப்பில்லானகி"

திருமங்கை

பள்ளியில் ஓதி தன்னருகே வந்த சிறுவன் வாயில் சர்வவ்யாபகமான ஸர்வேஸ்வரனின் ஓராயிரம் நாமங்களைப் பயமின்றி அழகாகச் சொல்லி மாயவன், மணிவண்ணன் தாளிணைப் பணியும் புத்திரனைப் பெற்றோமே இதென்ன பாக்யமென்று இருக்கவேண்டியவன், எம்பெருமான் திருநாமங்களைச் சொன்னதற்கு சற்றுயினும், பொறுமை இல்லாமல் ப்ரஹல்லாதன் சொன்ன வார்த்தைகள் தனது உடலில் முட்கள்தைத்தது போலவும், செவிகளில் நாராஸம் ஊற்றினது போலவும், உடல் நடுங்கி உதட்டை மடித்துப் பற்களை நெறு நெறுவென்று கடித்து, குருபுத்திரனைப் பார்த்து சிறுவனுக்கு இவ்விதம் ஏன் கற்பனை செய்தாய்? என்று கடிந்து பேசினன்.

### சண்டமார்க்கன் பயந்து கூறுவது

"தப்புலு லேவுமாவலன தானவநாத விரோதி
சாஸ்த்ரமுல்
செப்பமு க்ருருலெ பருலுசெப்பரு மீசரணம் புலானஸு

ம்மெப்புடு மீகுமாருனகு நின்தயு நைஜமநீஷ
யெவ்வருன்
ஜெப்பெடி பாடிகாது ப்ரதிசின்த தலம்பமு
நேர்ப்புகைவடின்

தானவேந்திரா! நாங்கள் உனக்குத் தோழர்களாகவும் குரு புத்திரர்களாகவும் பார்க்கவ புத்திரர்களாகவும் இருப்பவர்களாகிய எங்களை நிந்திக்கவேண்டாமென்றான்,

## குருமார்கள் சொன்ன வார்த்தைகளைக் கேட்ட தானவேந்திரன் சிறுவனை தூஷிப்பது

''ஒஜ்ஜலு செப்பனியீமதி மஜ்ஜாதுடவைன
நீகு மறியெவ்வரிசே
யுஜ்ஜாத மய்யேபாலக தஜ்ஜநுலம்
பெருகொநுமு தகநாம்ரோலந்.''

குருமார்கள் சொல்லாத வார்த்தைகளை, என்னுடைய குலத்தில் பிறந்தும் எனக்கு விரோதியின் திருநாமங்களைச் சொல்லுவதற்கு யாரால் உனக்கு போதிக்கப்பட்டது என்றான்.

''அச்சபுஜீகடிம்படிக்குருஹவ்ரதுலே,
விஷய ப்ரவுஷ்டுலே
சச்சுசு புட்டுசுன்மரலஜர்வித
சர்வணு லேனவாரிகிம்
ஜெச்ரபுட்டுநே பருலு செப்னனன,
நிச்சேசனன,நே
மிச்சனன, கானலகு நேகினனன,
ஹரிப்ர போதமுல்''

சம்ஸாரமென்னும் தமோகுண இருளில் அகப்பட்டு திகைத்துக் கிடக்கின்றவர்கள். பிறப்பதும் இறப்பதும் மறுபடியும் பிறப்பது மாக இருப்பவர்களுக்கு மற்றவர்கள் சொன்னாலும் விளங்காது. தானாகவோ, அல்லது யுக்தியினாலோ, காட்டுக்குச் சென்றாலும் தானவ கண்டகனை ஹரிபக்தி உண்டாகாது.

## இரணியன் கூறுவது

க்ரோடம்பைபின தண்ட்ரின்ஜம் பெநநி,
தாங்க்ரோதிஞ்சி சித்தம்புலோ
வீடம்ஜேயடு பன்டுபங்கி ஹரிகின்
வித்வேஷிகின் பக்துடை
யோடம் டக்கடப்ராண வாயுவுலு
வீடொப்பின்சு சுன்னுடு, நா
தோடன் வைரமு பட்டே நிட்டி-ஜனகத்
ரோஹின் மஹிம் கன்டிரே.

ஹரியானவன் வராஹ அவதாரம் எடுத்து, என் தம்பியைக் கொன்ருன். அவனை என் சிற்றப்பாவைக் கொன்றவன் என்று விரோதம் காட்டாமல், அவனுக்கு அடிப்பட்டவனுகவும், தனது ஆவியை அவனுக்கு ஒப்பித்தவனுகவும், என் வார்த்தைகளுக்கு மாருகவும் என்னை விரோதியாகவும் கொண்டு நமது குலத்துக்குக் காலனுக வந்தவனைப்போல் இந்தவுலகில் வேறெங்கும் கண்டீரோ? என்ருன்.

''பஞ்சாப்தம் புலவாடு தண்ட்ரிநா
பக்ஷம்பு நிந்திஞ்சி, ம
த்கிஞ்சித் பீதியுலேக விஷ்ணுஸஹிதும்
கீர்த்திஞ்சு சுன்னுடு''

ஐந்து வயதுள்ள சிறுவன் பெற்ற தந்தையிடம் அன்புகாட்டாமல் வேச மாத்திரம் என்பக்ஷம் பேசாமல் என்னை நிந்தித்து, கொஞ்ச மேனும் பயமில்லாமல் விஷ்ணுவைப் புகழ்ந்து பேசுகிருயல்லவா என்று கூறினுன்.

## இரண்ய கசிபு, ப்ரஹலாதனை, அநேக விதங்களில் துன்பப்படுத்துவது

''தன்னுநிஸாசருல் பொடுவ தைத்ய
குமாருடு மாடிமாடி-, கோ
பன்னகஸாயி யோதநுஜ பஞ்ஜந
யோஜகதீஸ யோமஹா

பன்னஸரண்ய, யோநிகில பாவந,
யஞ்சு நுதிஞ்சுகரநீ, தா
கன்னுலநிருதேடு, பயகம்பஸ
மேதுடுகாடு பூவரா''

—பாகவதம்

தானவேந்திரன் சொற்படி அஸுரர்கள், சிசுவென்றும் பாராமல் அநேக விதமாக, பல ஆயுதங்களாலும், சூலத்தினலும் ப்ரஹல்லாதனைக் குத்தி அடித்தபோதும், ஓ பன்னகஸாயி! ஓ மாதவா! ஓ ஓ ஜகத்ரக்ஷகா! ஸர்வலோகஸரண்யா! ஸர்வவ்யாபக மானவனே! என்று தியானித்து கண்ணீர்விடாதும் பயந்து ஓடாதும் சோர்ந்து நிற்காதும், பெருமூச்சுவிடாதும் 'ஓம் நமோ நாராயணுய' என்னும் அஷ்டாக்ஷர மந்திரத்தை உச்சரித்த வண்ணம் அனன்ய சிந்தையோடு நின்றான்.

ஸலிலமுன் நிஸாசருலு ஸ்ருக்கக்தேஹமு நிக்ரஹிம்பகா
''பாலுடு நேலபைபடடு, பாறடு,
சாவடு தண்ட்ரி நைந, நா
பாலிகிவச்சி சக்ரதருநி பக்ஷமு மாநிதி நந்சு

## இரணியன் சிறுவனைத் துன்புறுத்தல்

இப்படி ஸர்வார்த்தகமாகிய மஹாவிஷ்ணுவினிடத்தில் சித்தத்தை நிறுத்தி, பரமானந்தம் பெற்ற ப்ரஹல்லாதனிடத்தில், ராக்ஷஸேந்திரன் தனது ஏவலாளரால் செய்யும் மாரணகர்மங்கள். அரக்கரால் செய்யப்பட்டவை ஆனதால் அவைகள் விபலமாகி விட்டன. உடனே தானவேந்திரன் பார்த்து, சூலத்தால் குத்தும் படி ஏவினுன். திக்கெஜங்களைக் கொண்டு மிதிக்கச் செய்தான். விஷத்தையும் கொடுத்தான். நாகங்களைக் கொண்டு கடிக்க விட்டான். உணவுநீர் கொடுக்காமல் நிறுத்தினான். இப்படி அநேகவித மாரணேபாயங்களால் பாபரஹிதமானவன் எந்தவித மான துன்பமும் அடையவில்லை.

## இரண்ணியகசபு சிறுவனை துன்புறுத்துதல்

முஞ்சிதி வார்த்துலந் கதல மொத்திதி
ஸைலதடம்புலந்து
த்ரொப்பிஞ்சிதி சஸ்த்ரராஜின் பொடி
பிஞ்சிதி மீத நிபேந்த்ர பங்கத்தி ரொ

ப்பிஞ்சிதி சபஞ்சிதி கோர
தவாக்நுலந்து
த்ரேயிஞ்சிதி திக்கரிஞ்சிதி பெக்குபாட்லு
நலயிஞ்சிதி சாவடிதேமி சித்ரமோ

சிறுவன் ஜீவிதவுஷ்தம் அறிந்திலன். இவனை ஆதரிப்பவருமில்லை. துன்பங்களையும் பொறுக்க முடியாதவன். இவனுடை சரீரத்தில் எவ்வித மாறுதலும் இல்லை. ஒருவரை வேண்டுதலுமில்லை ஆபத்தும் இவனுக்கு நேருவதாகவுமில்லை. இவனுடைய ப்ரபாவம் ஏதோ நான் அறியேன். ஆனால் ஒரு காலத்தில் சுனச்சேபன் என்னும் முனிக்குமாரன் தனது தந்தையால் யாகபலிக்காகக் கொடுக்கப் பட்டான். தந்தை அபகாரம் செய்தாலும், அவன் பிழைத் தானல்லவா! அதுபோல் என்னால் செய்யப்பட்ட மாரணகர்மங்கள் சிறுவனிடம் பலிக்கவில்லை—என்று தானவேந்திரன் இதென்ன? ஆச்சர்யம் என்கிறான். இவனால் நமக்கு ஏதோ துன்பம் நேரிடும் என்று கருதுகிறான்.

தானவேந்திரன் தனது சிறுவனைப்பற்றி சிந்திக்கின்றான். இவன் மஹாப்ரபாவ ஸம்பன்னன், இவனுக்கு எந்தவித பயமு மில்லை. இவனோடு நாம் விரோதம் கொண்டால் தனக்கு மரணம் நிச்சயமாகும் என்று எண்ணி வெட்கப்பட்டு தலை நிமிராமல் கீழே பார்த்துக் கொண்டே வியசனத்துடன் இருக்கும் ராஜாவுக்கு குரு புத்திரனான சண்டாமார்க்கன் சிறுவன் குணங்களைக் கூறுகின்றான்.

## ‘பிரஹலாதன் குருவின் உபதேசம் வெறுத்தல்’

குருபுத்திரனை க்ருஹஸ்தர்களுக்கு வேண்டிய தர்மார்த்த மார்க்கங்களை ப்ரஹலாதனுக்கு உபதேச ம்செய்யும்படி ஆஜ்ஞா பித்தான். அதன்படி த்ரிவர்க்கம் உபதேசம் செய்தார்கள். அதற்கு சிறுவன் உடன்படவில்லை. ராகத் வேஷங்களினால் விஷயா சக்தி உடையவர்களுக்கு உபயோகமான தர்மார்த்த காமங்கள் எனக்கு ஆத்மார்த்தமாக, உஜ்ஜீவிக்க உபயோக மற்றது என்றான். இது மக்களுக்கு ப்ரக்ருதிவிவஹாரப்ரசித்திக்கான பேதமாகுமே தவிர, ஆத்மா பேதமில்லாதது. வ்யர்த்தமாகவும் கற்பனாசக்தி யுடையதாகவும் திப்ரமை கொண்டு இருப்பதாகும் என்று குரு மார்கள் நித்யக்கடன்கள்முடிப்பதற்கு க்ருஹங்களுக்குப் போனதும் சிறுவன் தன் சஹாக்களை ஏகாந்தமாக அழைத்து இப்படிக் கூறு

## ப்ரஹல்லாதன் தோழர்களை ஏகாந்த வாசம் ஆத்மார்த்தம் உபதேசம் செய்வது

"ஆடலகுன்தன்னுரம்மனி பாடிஞ்சி நிஸாட ஸுதுலு
பாஷிம்சிநதோ
ஷாடகுலேந்த்ரகுமாருடு பாடவமுன வாரிஜேரி ப்ரஜ்
ஞான்விதுடை."

தனக்கு சஹாக்களான அஸுரப் பிள்ளைகளை விளையாட வாருங்கள் என்று தனியே அழைத்துச் சென்று தோழர்களே, நமது குரு, அஸஹ்ய ப்ரவுர்த்தி குலேந்திரன், வார்த்தைகளைக் கேட்டு, ப்ரக்ருதி ப்ரக்ஞை அடைந்து ஸத்வரஜஸ்த்தமோ குணங்கள் போதிக்கின்றான். அது நமக்கு ஆத்ம விரோதமானது. ப்ரஹல்லாதன் இராஜ புத்திரனான படியால் கருணை கூர்ந்து தோழர்களோடு சிரிப்புடன் விளையாடிக் கொண்டு பகருகின்றான்.

"பாலகுலாரரண்டு மனப்ராயபு
பாலுரு கொந்தருவ்விபை
கூலுடகன்டிரே குருடுக்ரூரு
டனர்த்த சயம் புநடுந்துது
ஸ்ஸீலத நர்த்தகல்பந முன்ஜேஸெடிக்
ராஹ்யமுகாது சாஸ்த்ரமே
மேலெறிகிஞ் செதன் வினின மீகு
நிரந்தரபத்ர மய்யெடின்"

தோழர்களே! நம்மோடொத்த பிள்ளைகள் இப்புவியில் எத்தனையோ பேர்கள மாண்டு போனார்கள் என்பதை கண்டீரல்லவா? நாம் எத்தனையோ ஜென்மங்களில் புண்யம் செய்து மானிடப் பிறவி எடுத்துள்ளோம். நாம் மேல் நிலைக்குப் போக வேணுமென்றால் சம்சாரதுக்க சமுத்திரஜலத்திலிருந்து தனக்குத் தானே உத்தரிக்க வேணும். நமக்குள் உறைகின்ற மாயவனை, மதுசூதனனை, காண வேண்டும். நாராயணா என்னும் மந்திரம் மனனம் செய்து மோக்ஷமடைய வேண்டும். ஆகவே ஸர்வ பூதாந்தராத்மாவாய் இருக்கப்பட்ட நிராகார பரப்ரஹ்மமான ஹ்ருதயேஸ்வரனை அடையும் மார்க்கம் தவிர குருவுபதேசம் ஆத்மாவுக்கு விரோதமானது. நமக்கு அனர்த்த முண்டாகும். பாடங்களை நாம் செவியுற்றுக் கேட்கக் கூடாது எனறு விலக்கினான். அன்று முதல் பிள்ளைகள் குருவினிடம் பாடம் கேட்பதில்லை—

## ப்ரஹல்லாதன் அஸுரப் பிள்ளைகளைக் குருவிடம் போக வேண்டாமென்று கூறியதை தானவேந்தரிடம் சண்ட மார்க்கன் கூறுவது

ஐயா தான வேந்திரா! உனது புத்திரன் தைத்திய குமாரர்களை நாங்கள் இல்லாத சமயம் பார்த்து தனி வழியில் அழைத்துச் சென்றுசெய்யும்குருவுபதேசம்ப்ரக்ருதிவிஷயமானது.விஷயேந்திரங் களில் ஈடுபட்டு பல யோனிகளில் பிறந்து மரண ஜனன மார்க்கம் அடையும்படி செய்யும் ஆத்மாவுக்கும் அது மோசமாகும். குரு விடம் இனி நாம் போகப்படாதென்று பிள்ளைகளைக் கெடுத்து விட்டான். அவன் ராஜபுத்திரன் ஆகவே பல பிள்ளைகளைக் கூட்டி நாராயண பரத்வம் ஒன்றே நமக்கு வேண்டியது என்று விளக்கிக் கூறினான் என்றான்.

## ப்ரஹலாதன் பூர்வம் நாரத மஹரிஷியிடம் பெற்ற வுபதேசம் கூறுதல்

தோழர்களே! நான் என் தாயார் கரப்பத்திலிருக்கும் போது விசேஷஜ்ஞானமும் பரமபாகவத் தர்மங்களும் உபதேசம் பெற்றேன் என்று சொன்னதும் தைத்ய குமரர்கள் ப்ரமித்துப் பகரு கின்றார்கள்.

## தானவகுமாரர்கள் ப்ரஹல்லாதவனிடம் கூறுவது

ராஜபுத்திரனானவனே! நாம் பார்க்கவகுமாரரிடம் அநேக சாஸ்தி ரங்கள் கேட்டோம். ஆத்மரக்ஷண ரத்தமான பாடங்கள் சொல்ல நமது ராஜசபையில் ஒருவரும் இல்லை. ஆகவே, உனக்கு நிஷ்கண்ட கமானவனான ஹரியைப் பற்றியும் அவன் குணானுபவங்களைப் பற்றியும் நாரதர் உமக்கு எப்படி உபதேசம் செய்தார் என்பதை யும் சொல்ல வேணுமென்றார்கள்.

### பரம பாகவத குலாலங்காரனான ப்ரஹல்லாதன் புன்னகையுடன் கூறுவது

தோழர்களே! ஒரு சமயம் தேவேந்திரன் என் தந்தையானவன் தேவர்களை ஜெயிக்கத் தவம் செய்யப் போனபோது அஸுரர்குல மெல்லாம் கர்வம் அடங்க அல்லோலகல்லோலமாகச் செய்தான். அப்போது என் தாயாரை சுசேந்திரன் சிறைக்குக் கொண்டு போகும்போது அவள் ஆதரிப்பாரற்று தீனஸ்வரத்துடன் கதறும்போது, தைவானுரிரஹமாக நாரதமஹரிஷி ஸுராதி

பதியை எதிரிட்டு ஓ தேவலோக நாயகா! இந்தஸுனிதமான குண வதியை எடுத்துச் செல்லுவது ஏன்? இவள் கர்ப்பஸ்த்ரீ இவள் கல்மிஷமாது அல்ல. உன்னுடைய க்ரோத பாவனே விட்டு இவளே என்னுடைய பாதுகாவலில் விட்டு விடுவாயாக என்ருர்.

ஐயா நாரத மாஹா முனியானவரே! நீங்கள் சொல்லுவது உண்மைதான். இவள் அரக்கனுடைய மனேவியானவள். இவள் குஷிக்குள் அரக்கன் வீர்யம் பூர்ண மடைந்தவளாதலால் இவள் ப்ரஸவமாகும் வரையில் சிறையில் வைத்து சிசு வெளியானதும் நீங்கள் சொன்னது உண்மையானுல் விட்டு விடுகிறேன் என்ருன்.

### கர்ப்பத்திலிருக்கும் சிசுவைப் பற்றி நாரதர் சொல்லுதல்

தேவநாத இவளுடைய குக்ஷிக்குள் இருப்பவன் நிர்ப் பய முடையவன் ப்ரஸ்நிகாபாகவதன். பூர்வாப்யாசபாவ முடையவன் இந்த தைத்யாங்கன கர்பத்திலிருப்பவன் விஷ்ணு பக்தன். இவன் துர்பாவனுவஸ்தைகளால் மரணமாகான். என்று நாரதர் சொன்னுர்.

### தேவேந்திரன் நாரதர் வாக்யம் ஏற்றுக் கொண்டது

ஐயா! தேவரிஷியே நீங்கள் சொன்ன புனிதவதியின் கர்ப்பத்தி லிருந்து ஹரிபக்தன் இருப்பதினுலும் நானும் விஷ்ணு பக்தன் ஆகவே நாரதரிடம் என் தாயாரை விட்டுப் போனுன். நாரதர் என் தாயாரை அவர் ஆஸ்ரமத்திற்கு அழைத்துச் சென்று

தன் புத்திரிகா பாவமாக வைத்து ஆதரித்து வந்தார். அவருக்குப் பரிசர்யம் செய்த என் தாயாருக்கு அபயம் செய்து கர்ப் பத்திலிருக்கும் எனக்கு தர்மதத்வங்களும் நிர்மலஜ்ஞானமும், உபதேசம் செய்து நான் பரமபதநாதனே அடையும் வழியைக் காட்டினுர்.

### தானவப் பிள்ளேகளுக்கு ஞானேபதேசம் ப்ரஹல்லாதன் கூறுவது

தோழர்களே! காமராக போகாதிகளினுல் ஜீவாத்மாவின் சம்சார சாக்ர நிவர்த்திகம் செய்வதற்கு அஜ்ஞான மென்பதை எரித்துப் பரப்ரம்மம் எப்படிப் பட்டதென்பதை ஞானத்தில் முதிர்ந்த பெரியோர்கள் அறிவார்கள். ஹரியானவர் சகல ஜீவ ராசிகளின் இருதயத்திலும் இருக்கப்பட்டவன். சரீரேந்திரியங்

களுக்கு வசப்பட்டவனல்ல. மனிதன் அஹங்காரங்களும் புத்ர பௌத்ரகளத்ராதிகளும் ராஜ்ய போகாதிகள் அனைத்தும் நித்ய மானவைகள் என்று ப்ரமிக்கின்றார்கள். மோக்ஷப்ரதானமான இறைவன் சகல ஜீவஜந்துக்களின் அந்தர்யாமியானவன்; பிரிய முள்ளவன், ஆகையால், அப்படிபட்ட ஹரியை நிஜபக்தி செய்பவர் கள் மாயவன் மணிவண்ணன் தாளினை அடைவார்கள்.

சிக் கடு, வ்ரதமுல, க்ரதுவுல் சிக்கடு தானமுல்,
சௌசஸீல தபமுலம்
ஜிக்கடு, யுக்தினி பக்தினி ஜிக்கினக்ரிய நச்யுதுண்டு
ஸித்தமுசுண்டி

விரதங்களாலும் யக்ஞாதிகள் நடத்தினாலும், சௌசாதிகளினாலும் சிலங்களினாலும் பலவித யுக்திகளினாலும் ஹரியானவர் கிடைக்க மாட்டார். மனதை ஒருமுகப்படுத்தி முழுமனதுடன் மனனம் செய்பவர்களுக்கே கிடைப்பார் என்று

### ப்ரஹ்லாதன் புத்தகம் கொண்டுவரச் சொல்லுதல்

தெண்டெல்ல புஸ்தகம் புலு, நிண்டா சார்யுநுகு
மரல நேகதமுனகுன்
ரண்டு விஸேஷணமு ஸெப்பெதன்,பொண்டோல்
லநிவாரு கர்ம புஞ்ஜமுபாலே

தோழர்களே! உங்கள் புத்கமெல்லாம் எடுத்துக்கொண்டு தனி யிடம் வந்து விடுங்கள். உங்களுக்கு ஆத்மதத்வங்களெல்லாம் சொல்லுகிறேன். மறுபடி ஆசார்யனிடம் போகவேண்டாம். இதற்கு சம்மதமுள்ளவர்கள் வாருங்கள், சம்மதமில்லாதவர்கள் அந்த காரமான மாயாச் சொற்களில் அழுந்திப் போங்கள் என்றதும் அன்று முதல் அஸுரப்பிள்ளைகள் பாடசாலைக்குப் போக மறுத்துவிட்டார்கள். நாராயண பக்தியில் நாட்டம் கொண் டார்கள்.

### சண்டாமார்க்கன் சக்ரவைரியிடம் சொல்லுதல்

ஐயா! தானவேந்தரா! உன் குமாரன் விஷ்ணுமூர்த்தியின் கதைகளை எப்போதும் சொல்லவேண்டும் என்று எங்களை உல்லங் கனம் செய்து எங்கள் வார்த்தைகளை வெறுத்துப் பேசுகிறான். இனி உமது பொறுப்பாகும். என்றான்.

## இரண்யகசிபு தன்புத்ரனிடம் கோபித்துக்கொள்ளுதல்

இப்படி குருபுத்திரன் சொன்னது தன் மகனுல் விரோதிகளால் மோசம் வருமென நினைத்து மனம் சோர்ந்து காலடியில் அகப்பட்ட பாம்பைப்போல் கோபாவேசமாக சிந்தாக்ரந்தனுக, புத்திரனை சம்ஹரிக்க வேணுமென்று சிறுவனை வரச்சொல்லி காரஸாரமாகப் பகர்ந்தான்.

அஸ்மதீயம்பகு நாதேச முனகானி
மிக்கிலி ரவிமின்ட மெறயவெறுசு
நன்னிகால முலந்து நநுகூலுடை
காநி வித்வேஷயை காலிவீவவெறுசு
மத்ப்ரதாபா நலமந்தீக்ருத்ரசியை
விச்சலவீடி நக்நீ வெலுவவெறுசு
நதிதீக்ஷணமைன நாயாஜ்ஞு நுல்லகிஞ்சி
ஸமநுண்டு ப்ராணுல ஜம்பவெறுசு

என்னுடைய ராஜ்யத்தில் அதிகமாக சூரியன் உஷ்ணமான கிரணங்களை வீசுவதில்லை. எல்லாக் காலங்களிலும் எனக்கு அனுகூலமாகவே மாருதி வீசுவான். அதிதீக்ஷண்யமான அக்நியானது. அதன் இஷ்டத்துக்கு ப்ரகாசிக்காது. என்னுடைய ஆஜ்ஞையை மீறி என்னை அவமதித்து யமனுனவன் ப்ராணிகளைக் கொல்லுவதில்லை.

திக்குல கெலிசிதினன்னியு திக்கெவ்வடோரி நீகு
தேவேந்த்ராதுல்
திக்குலராஜலு வேருெக திக்கெருக்க, கொலு
துரிதடேதிக்கனி நன்னுன்

நான் எல்லா, திக்விஜயமும் செய்தவன். தேவேந்திராதிகளோடும் போர் புரிந்தவன். வேறு யாரும் எதிர்க்க முடியாமல் என்னையே தொழுவார்கள்.

பலவந்துடநே ஜகமுல, பலமுலதோ ஜனக
வீரபாவமுன மஹா
பலுல ஜயிஞ்சிதி எவ்வநி பலமுன நாடெதவு
நாகுப்ரதிவீருடவை

ப்ரஹல்லாதா! இந்த உலக முழுவதையும் என்னுடைய பராகக்ர மத்தால் ஜெயித்தவன். ஆகவே, நீ, யாருடைய பலத்தினுல் எவனை நாடி என்னை எதிர்த்துப் பேசுகிருய் என்ருன்.

## தகப்பன் கூறிய வார்த்தைகளுக்கு பிரகல்லாதன் மெல்லிய வார்த்தைகளுடன் கூறுவது

பலயுதுலகு துர்ப்பலுலகு பலமெவ்வன்டு நீகுநாகு
ப்ரஹ்மாதுலகுன்

பலமெவ்வடுப்ராணுலகு பலமெவ்வண்டட்டி
விபுடுபலமஸுரேந்த்ரா

பலமிருப்பவனுக்கும், பலமில்லானுக்கும், உனக்கும் எனக்கும் ப்ரஹ்மாதிகளுக்கும் சகலப்ராணிகளுக்கும் யாருடைய பலமோ அவனே எனக்கும் பலமுடையவன். நமக்கு கால நேரத்திலும் ஜீவர்கள் எல்லாருக்கும் ரக்ஷகார்த்தமாக வரக்கூடியவர் பகவான். நமக்கு விரோதி நமது மனமேயாகும்.

வைருலெவ்வரு சித்தம்பு வைரிகாக சித்தமுனுநீகு
வசமுகாஜேயவையா

மத,யுதாஸுரபாவம்பு மானவையா, யய்ய நீம்ரோல
மேலாடரய்ய ஜநுலு

அப்பா உனக்கு விரோதிகள் யாருமில்லை. உனது மனமே உனக்கு விரோதி. உனது சித்தமானது உனக்கு வசமாகி விட்டால், அன்புள்ளவனென்றும் அறிவுடையவனென்றும் மக்கள் போற்றும் படி வாழலாம் என்முன்.

## ப்ரஹ்லாதனுகிய பரமபாகவோத்தமனிடம் அஸுரேந் திரன் கடினமாகக் கூறுகிமுன்

நாதோடம் ப்ரதிபாஷலாடெது, ஜெகந்
நாதுண்டு நாகன்டே, நீ
பூதஸ்ரேணிகி ராஜுலேடொகடு ஸம்பூர்ண
ப்ரபாவுண்டு, மத்
ப்ராதம் ஜம்பிந முன்ன நேவெதகிதிம்
பல்மாறு நாராயணும்
டேதத்விஸ்வ முலோன லேடு மறி
வாடெந்துண்டுரா துர்மதி

என் வார்த்தைகளுக்கு குறுக்கிட்டுப் பேசுகிமுய். நீ சொல்லும் ஜெகந்நாதன் என்னைவிடப் பெரியவனு? இந்தப் பூ மண்டலத்தில்

## இரண்யகசிபு தன்புத்ரனிடம் கோபித்துக்கொள்ளுதல்

இப்படி குருபுத்திரன் சொன்னது தன் மகனால் விரோதிகளால் மோசம் வருமென நினைத்து மனம் சோர்ந்து காலடியில் அகப்பட்ட பாம்பைப்போல் கோபாவேசமாக சிந்தாக்ரந்தனாக, புத்திரனை சம்ஹரிக்க வேணுமென்று சிறுவனை வரச்சொல்லி காரஸாரமாகப் பகர்ந்தான்.

அஸ்மதீயம்பகு நாதேச முனகானி
மிக்கிலி ரவிமின்ட மெறயவெறுசு
நன்னிகால முலந்து நநுகூலுடை
காறி வித்வேஷயை காலிவீவவெறுசு
மத்ப்ரதாபா நலமந்தீக்ருத்ரசியை
விச்சலவீடி நக்நீ வெலுவவெறுசு
நதிதீக்ஷணமைன நாயாஜ்ஞ நுல்லகிஞ்சி
ஸமநுண்டு ப்ராணுல ஜம்பவெறுசு

என்னுடைய ராஜ்யத்தில் அதிகமாக சூரியன் உஷ்ணமான கிரணங்களை வீசுவதில்லை. எல்லாக் காலங்களிலும் எனக்கு அனுகூலமாகவே மாருதி வீசுவான். அதிதீக்ஷ்ண்யமான அக்நியானது. அதன் இஷ்டத்துக்கு ப்ரகாசிக்காது. என்னுடைய ஆஜ்ஞையை மீறி என்னை அவமதித்து யமனனவன் ப்ராணிகளைக் கொல்லுவதில்லை.

திக்குல கெலிசிதினன்னியு திக்கெவ்வடோரி நீகு
தேவேந்த்ராதுல்
திக்குலராஜலு வேறெக திக்கெருக்க, கொலு
துரிதடேதிக்கனி நன்னுன்

நான் எல்லா, திக்விஜயமும் செய்தவன். தேவேந்திராதிகளோடும் போர் புரிந்தவன். வேறு யாரும் எதிர்க்க முடியாமல் என்னையே தொழுவார்கள்.

பலவந்துடநே ஜகமுல, பலமுலதோ ஜனக
வீரபாவமுன மஹா
பலுல ஜயிஞ்சிதி எவ்வநி பலமுன நாடெதவு
நாகுப்ரதிவீருடவை

ப்ரஹல்லாதா! இந்த உலக முழுவதையும் என்னுடைய பராகக்ரமத்தால் ஜெயித்தவன். ஆகவே, நீ, யாருடைய பலத்தினால் எவனை நாடி என்னை எதிர்த்துப் பேசுகிறாய் என்றான்.

### தகப்பன் கூறிய வார்த்தைகளுக்கு பிரகல்லாதன் மெல்லிய வார்த்தைகளுடன் கூறுவது

பலயுதுலகு துர்ப்பலுலகு பலமெவ்வண்டு நீகுநாகு
ப்ரஹ்மாதுலகுன்

பலமெவ்வடுப்ராணுலகு பலமெவ்வண்டட்டி
விபுடுபலமஸுரேந்த்ரா

பலமிருப்பவனுக்கும், பலமில்லானுக்கும், உனக்கும் எனக்கும் ப்ரஹ்மாதிகளுக்கும் சகலப்ராணிகளுக்கும் யாருடைய பலமோ அவனே எனக்கும் பலமுடையவன். நமக்கு கால நேரத்திலும் ஜீவர்கள் எல்லாருக்கும் ரக்ஷகார்த்தமாக வரக்கூடியவர் பகவான். நமக்கு விரோதி நமது மனமேயாகும்.

வைருலெவ்வரு சித்தம்பு வைரிகாக சித்தமுனுநீகு
வசமுகாஜேயவையா

மத,யுதாஸுரபாவம்பு மானவையா, யய்ய நீம்ரோல
மேலாடரய்ய ஜநுலு

அப்பா உனக்கு விரோதிகள் யாருமில்லே. உனது மனமே உனக்கு விரோதி. உனது சித்தமானது உனக்கு வசமாகி விட்டால், அன்புள்ளவனென்றும் அறிவுடையவனென்றும் மக்கள் போற்றும் படி வாழலாம் என்முன்.

### ப்ரஹ்லாதனுகிய பரமபாகவோத்தமனிடம் அஸுரேந்திரன் கடினமாகக் கூறுகிருன்

நாதோடம் ப்ரதிபாஷலாடெது, ஜெகந்
நாதுண்டு நாகன்டே, நீ
பூதஸ்ரேணிகி ராஜுலேடொகடு ஸம்பூர்ண
ப்ரபாவுண்டு, மத்
ப்ராதம் ஜம்பிந முன்ன நேவெதகிதிம்
பல்மாறு நாராயணும்
டேதத்விஸ்வ முலோன லேடு மறி
வாடெந்துண்டுரா துர்மதி

என் வார்த்தைகளுக்கு குறுக்கிட்டுப் பேசுகிருய். நீ சொல்லும் ஜெகந்நாதன் என்னேவிடப் பெரியவஞ? இந்தப் பூ மண்டலத்தில்

என்னைத் தவிர அரசன் ஒருவனுமில்லை. என் தம்பியைக் கொன்ற போது அந்த நாராயணனை அநேக இடங்களில் பூலோக முழுதும் தேடினேன். அவன் கிடைக்கவில்லை. ஆதலால் எங்கேயிருப்பான்? என்றான்.

ப்ரஹலாதன் சிறியவனாக இருந்த போதிலும் பகவானைத் தியானம் செய்து, நமஸ்கரித்து சிறுபிள்ளைத்தனமாக எதுக்கும் அஞ்சாமல் சொல்லுகின்றான்.

இந்துகலடந்து லேடநி, ஸந்தேஹமு வலதுசக்ரி
ஸர்வோபகதுண்
டெந்தெந் வெதகி சூசின, நந்தந்தே கலடு
தாநவாக்ரிணிவின்டே

அப்பா இங்கிருப்பான், அங்கு இருக்க மாட்டான் என்ற சந்தேகம் வேண்டாம். சக்ரதாரி ஸர்வவ்யாபகமானவன்-நீக்கமற எங்கும் நிறைந்துள்ளவன் என்றான்.

**சிறுவன் சொன்னதற்குத் தானவேந்திரன்**

டிம்பகஸாவஸ்தமுல நம்போருஹ
நேத்ருடுண்நநுசுமிகுல, ஸம
ப்ரம்பம்புன பலிகெத நீஸ்தம்பம்புனஜுப
கலவே, சக்ரின் கிக்ரின்
ஸ்தம்பமுன ஜீபவேநிம் கும்பிநி நீசிரமு
த்ருஞ்சி கூர்பக ரக்ஷா
ரம்பமுன பலிகெத வீஸரம்பம்
புனநட்டபடக ஸக்துண்டகுனே

அப்பாநாம் பேசும் வார்த்தைகளில் கூட இருப்பவன் பகவான். இந்த ஸ்தம்பத்திலும் இருப்பான் என்பதில் எனக்கு எந்த வித சந்தேகமுமில்லை என்றான். தானவேந்திரன் சிறுவன் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு கர்ஜனை செய்து எழுந்து நன்றாகக் கூரிய வாளைக் கையில் எடுத்துக் கொண்டு பரமபாகவோதோத் தமனான ப்ரஹலாதனை மிரட்டித் தன்கையினால் ஓங்கிக் கம்பத்தை அடித்தான்

பிள்ளையைச் சீறி வெகுண்டு தூண்புடைப்ப
பிறை எயிற்றனல் விழிப் பேழ்வாய்
தெள்ளிய சிங்கம் ஆகிய தேவை

பிள்ளையைச் சீறி கோபாவேசமாக ஓங்கி கம்பத்தை அடித்தான். கம்பத்தினின்று மூன்றும் பிறை போன்ற கூரிய பற்களும் நெருப்புப் பொறிகள் சிந்தா நின்றுள்ள கண்களும் பெரிய வாயும் கொண்டு சிசுவின் உறுதிமொழியை நிலைநாட்டுவதற்கும் தன் பக்தனைத் துன்புறுத்திய அக்கொடியவனைச் சித்ரவதம் செய்வதற்காகவும் அவதரித்த நரசிம்ஹாவதாரத்தின் தயையை என்னவென்று வர்ணிப்பது? கடவுள் பலபேர்வேண்டுதலுக்காக அவதரிப்பதுண்டு. பகவான் ஒரு சிசுவுக்காக அவதரித்தான். சிசுவோராக்ஷஸ சிசு உயர்ந்தசிசுவன்று.சிசுவானவன் பகவானை அவதரித்து வந்துஎன்னை ரக்ஷிக்கவேணும் என்று ப்ரார்த்திக்கவில்லை. ஆனால் பகவான் எங்கும் இருப்பான் என்று உறுதியாகச் சொன்னான். பக்தன் வார்த்தைகளை உறுதிப்படுத்த கம்பத்தில் தோன்றிய பகவான்

உரம் பற்றி யிரணியனை உகிர் நுதியா
லொள்ளிய மார்புறைக்கவூன்றி
சிரம் பற்றி முடியிடியக் கண்பிதுங்க வாயலறத்
தெழித்தான் கோயில்

—பெரியாழ்வார்

இரணியாஸுரனுடைய அழகிய மார்பை நகங்களின் நுனிகள் உள்ளே பொத்தும்படி திருக்கைகளால் பற்றிக் கொண்டு, அவனது தலையிலுள்ள கிரீடமானது பொடிபடும்படியாகவும்,கண்களானவை பிதுங்கும்படியாகவும், வேதனைப் பொறுக்கமாட்டாமல் வாய்விரியும்படியாகவும், தலையை நெரித்துப் பிடித்து ப்ரஹல்லாதனுடைய விரோதியை முடித்து ஆரவாரம் செய்து அருளிய எம்பெருமானாகிய ''நாதனை நரசிங்கனை நவின்றேறுவார்களுழக்கிய பாததூளி படுதலாலிவ்வுலகம் பாக்கியம் செய்ததே'' என்றதுபோல் பகவான் ஒரு சிசுவுக்காக ஒரு அவதாரம் எடுத்து வந்ததைப் பற்றி என்னவென்று வர்ணிப்பது? பெரியாழ்வார் போல அடியேனும் நரசிஹ்மப் பெருமானுக்குப் பல்லாண்டு பாட விரும்புகிறேன்.

மாயவன் மறையோர்களேத்தும்
மாதவனுக்குப் பல்லாண்டு
தீயவனை ஒழிக்கத் திருத்தூணில்
உதித்தவனே பல்லாண்டு

ஆயர்குலத்தில் உதித்த
அணிவிளக்கே பல்லாண்டு
பழிப்பவன் உடலைக் கீண்ட
பத்மநாபனுக்குப் பல்லாண்டு!

### ஸாங்கத்ய தோஷம்

''யுக்தி யுக்தமுபாதேயம் வசனம் பாலகாதபி
அன்யத்ருணமிவத்யாஜ்யமப்யுக்தம் பத்மஜன்மனு''

சிறுவனுன போதிலும் சிறிய தனம் படைத்தவனுக இருந்தாலும் சொல்லும் வார்த்தைகள் பொருத்தமாக இருந்தாலும் சாஸ்த்ரசம்மதமாக இருந்தால் நாம் ஏற்றுக் கொள்ள வேண்டும். ப்ரஹ்மதேவனுனுலும். ஆசார்யனுனுலும், தாய் தந்தையர்களாக இருந்தாலும், சொல்லும் வார்த்தைகள் பொருத்தமற்றவைகளானுல் சாஸ்த்ரஸம்மதமில்லா விட்டால் உண்மைப் பொருளுக்கு ப்ரதிபந்தமாக இருந்தால் அவைகளை த்ருணமாகக் கருத வேண்டும். என்று வசிஷ்ட பகவான் ஸ்ரீஇராமபிரானுக்கு வாசிடத்தில் உபதேசித்தார். மேலே கூறிய தோஷங்கள் ஒருவரோடொருவர் பழகுவதால் உண்டாகும். இதற்கு ஒரு கதையுண்டு, ஒரு கிளி இரண்டு குஞ்சுகளைப் பொரித்தது. ஒரு சமயம் ஒரு வேடுவன் அந்தக் குஞ்சுகளைப் பிடிப்பதற்குப் போகும்போது ஒரு குஞ்சு தப்பித்துக் கொண்டு ஒரு ரிஷி ஆஸ்ரமத்தில் சேர்ந்தது. இந்த பக்ஷி சிறியதாக இருப்பதால் வெளியே விட்டால் பருந்து முதலான பக்ஷிகள் இதைக் கொன்றுவிடும் என்று கருதி ரிஷி சிஷ்யர்கள் அதை ஆஸிரமத்தில வைத்துப் பத்திரமாகக் காப்பாற்றினுர்கள். மற்றொரு குஞ்சை வேடுவன் கசாப்புக்கடைக்காரனுக்கு விற்றுவிட்டான். அந்தக் கசாப்புக்காரன் பஞ்ஜரமென்னும் கூண்டில் வைத்து கசாப்புக்க்கடையில்பேசும்வார்த்தைகளைக்கற்பித்தான்எப்படியோ ஒரு நாள் அந்த பக்ஷியானது கசாப்புக்காரனிடமிருந்து தப்பித்துக் கொண்டு மார்க்கத்தில் ஒரு மரத்தில் உட்கார்ந்திருந்தது. அப்போது அந்த மார்க்கமாக ஒரு பரமபக்தர் காசியாத்திரை போகின்றவன். அந்த மரத்தின் நிழலில் உட்கார்ந்து அருகில் இருக்கும் தண்ணீரைப் பார்த்ததும் சமையல் செய்ய ஆரம்பித்தான். அப்போது விருக்ஷத்தில் உட்கார்ந்திருக்கும் கிளியானது 'எந்த மாம்சம் உமக்கு வேண்டும், பன்றி மாம்சம் சேர் இரண்டு இரண்டு அணு, ஆட்டு மாம்சம் மூன்று அணு, கோழி மாம்சம் நாலணு, வேண்டுமானுல் பெற்றுக் கொள். இல்லையேல் போங்கோள்' என்று கூவினது. இது போன்ற கூக்குரல் கேட்டு ப்ரஹ

மஜ்ஞானியானவர் இதென்ன ஆச்சர்யம்! இந்த விருக்ஷத்தில் பிசாசு பக்ஷிரூபமாக இருக்குமெனக் கருதி பயந்தவனுக விரைவில் சென்று ஒரு ஆசிரமத்தின் அருகிலுள்ள மரத்தின்கீழ் உட்கார்ந்து சாப்பிடும்போது அந்த மரத்திலேயும் ஒரு கிளியானது உட்கார்ந்து 'ஐயா க்ஷேமமா? 'ஸ்வஸ்திரஸ்து சத்யம்வத தர்மம்சர ஓம் தத்ஸத் ப்ரஹ்ம ஸத்யம்ஜகத்—மித்யா அஹிம்ஸா பரமோதர்ம: ஸம்ஸார ஸாகரம் துக்கம்'' என்று பவித்ரமான வேத சப்தங்கள் பேசுவதைக் கேட்டு அந்தப் பரம பக்தன் ஆச்சர்யம் அடைந்து ஒன்றும் தோன்ருது, அருகிலிருக்கும் ரிஷியாஸ்ரமத்திற் சென்று, அங்கு தவம் செய்யும் முனிவருக்கு நமஸ்காரம் செய்து, இரண்டு மரத்தில் இரண்டு கிளிகள் கூறியதைச் சொல்லி; சுவாமி, இந்த இரண்டு கிளிகளின் கதைகளைக் கூற வேண்டும் என்று கேட்டார். அப்போது முனியானவர் ஞான திருஷ்டியினுல் அறிந்து கிளிகளைப் பற்றி சொல்லத் தொடங்கினுர். அப்பா! இந்தப் பக்ஷிகள் இரண்டும் ஒருதாய்க் குழந்தைகள். ஒன்றை கசாப்புக்காரன் வளர்த்தகாரணத் தால் அதற்குண்டான சுபாவத்தைச் சொல்லிற்று. மற்ருேர் கிளி யானது இந்த ஆசிரமத்தில் இருந்த காரணத்தால் அதற்குப் பரம சாத்வீகமான குணங்கள் உண்டாயின. ஆகையாலே, மனிதன் யாரிடத்தில் பழகுகின்ருனே அதே குணங்கள் அவனுக்கு உண்டாகும். என்று சொல்லிவிட்டு முனியானவர் தனது ஆஸ்ர மத்துக்குச் சென்ருர். ஆகவே இந்தக் காலத்தில் பரம வேதாந் திகள் போல் பேசி தன் சரீரத்தை வளர்ப்பதற்கும் நாருசிக்காக வும், ப்ராணிகளை வதை செய்து கோரக்ருத்யங்கள் செய்து புசிக்கிருர்கள் என்று பெரியோர்கள் கூறுகிருர்கள். புளிப்பு மாங் கொட்டை ஆனுலும் மல்கோவா செடியில் ஒட்டுப் போடுவோ மானுல் அதன் புளிப்பு போய் இனிமையான காய்கள் காய்க்கும். மல்கோவா கொட்டை ஆனுலும் புளிப்புச் செடியில் ஒட்டுக் கட்டினுல் அதன் இனிப்பு போய் இதர குணங்கள் உண்டாகும். ஆகையால், சத்குணவான்களிடம் சேர வேண்டும்.

''ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம்
நிஸ்ஸங்கத்வே — நிர்மோஹத்வம்
நிர்மோஹத்வே நிர்ச்சலதத்வம்
நிர்ச்சலதத்வே ஜீவன்முக்தி:''

—பஜகோவிந்தம்.

**"ஸூ: "பாஞ்சபௌதிகம் மாயாமாத்ரத்வாத்"**

சதுர்புஜாகாரம் நீலவர்ணமாக இருப்பினும்விஷ்ணு பகவான் சரீரம் நமது சரீரம் போலவே பஞ்சமஹாபூதங்களால் உண்டான தென்று சொல்லக் கூடாது. ஏனென்றால், கேவலம் மாயையினாலே பரமேஸ்வரன் இச்சாமாத்திரம் இப்படி நிர்மிக்கப்பட்டது. ஈஸ்வரன் ஸத்யஸங்கல்பன், ஆகையினாலே பகவான் உலக மக்களை ஒழுங்குபடுத்துவதற்கு எவ்விதமாக வரவேண்டுமோ அந்தக் காலத்துக்கேற்றவாறு அவதரிக்க வேண்டிய அவஸ்யம் ஏற்படுகிறது! அதற்கு ப்ருதிவி முதலான பஞ்ச பூதங்கள் தேவையில்லை.

"மாயாஹ்யேஷா மயாஸ்ருஷ்டாம் யந்மாம் பஸ்யஸி
நாரத
ஸர்வபூதகுணைர்யுக்தம்னை நாம்வத் ஜ்ஞாது மர்ஹஸி"

நாரதா, நானே மாயையை உண்டுபண்ணினேன். ஆகையால் இந்தச் சரீரத்தை பஞ்ச பூதவிகாரங்களாகக் கருத வேண்டாம். என்று அப்போது நாரதருக்கு ஸ்வேத தீபத்தில் பகவான் தனது விஸ்வருபத்தைக் காட்டினதாக பாரத மோஷதர்ம பர்வத்தில் வாக்யப்ரமாணம் நரசிம்ஹாதி ரூபத்தில் நினைத்த மாத்திரத்தில் நரசிம்ஹமாக வந்ததே ப்ரசித்தமாகும். விஷ்ணு பகவான் சரீரம் சங்கல்பமாத்திரமாகும் என்று அறிய வேண்டும். பகவான் வ்யக்த சொருபமாக நிருபித்து அதை அர்ச்சிக்கும் ப்ரகாரம் வர்ணிக்கிறார்

**"பஹிரந்தஸ்ததர்ச்நம்"**

பகவானை அர்ச்சிப்பது இரண்டு விதங்களாக இருக்கின்றன. முதலாவது பாஹ்யார்ச்சனம், இரண்டாவது அந்தரார்ச்சனம். இரண்டில் ஒன்றுவது இரண்டாகிலும் அவரவர் அதிகாரத்தை அனுஸரித்துச் செய்வதாகும்.

இப்படி சாமான்யர்ச்சனை இரண்டு விதங்கள் சொல்லி இப்போது இரண்டில் விசேஷமானது சொல்லப்படுகின்றது.

**ஸூ: "பாஹ்யம் க்ருஹிணு மஸ்திரச் சித்தத்வாத்"**

புத்ர பௌத்திர களத்ராதிகளோடு கூடி க்ரகஸ்தனாகி குடும்ப போஷ்கனாகவும் துன்பத்திலழுந்திக் கிடப்பவருக்கு சித்த உறுதி கனவு போன்றதாகும். சித்தமானது ஒருமுகமாகாது. அந்தர் முகமாக பகவானை அர்ச்சிக்க முடியாது. சித்தமானது ஒரு முகப்

படாதவன் பாஹ்யார்த்தமே செய்ய வேண்டும். பாஹ்யமென்பது ஓர் ஆதாரம் வைத்துக் கொண்டு செய்வதாகும். ஆதாரமென்பது, அவரவர் அதிகாரத்துக்குத் தகுந்த விக்ரஹம் வைத்துப் பூஜிப்ப தாகும். இதற்கு கீதை உபமானம்.

''யேயதாமாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்ததைவ பஜாம்யஹம்
மமவர்த்மானுவர்தந்தே மனுஷ்யா: பார்த்த ஸர்வச:''

யார் என்னை எப்படி வழிபடுகிறரோ அவர்க்கு நான் அப்படியே அருள்புரிகிறேன். பார்த்தா! மக்கள் யாண்டும் என் வழியையே பின்பற்றுகின்றனர்.

இயற்கையின் அமைப்பில் உணவு வகைகள் இருக்கின்றன. சுவையிலும் தரத்திலும் குணத்திலும் அவைகளுள் பேதங்கள் உள்ளன. ஓர் உயிருக்கு உணவாவது மற்றோர் உயிருக்கு நஞ்சு ஆவதும் உண்டு. ஆனல் அந்தந்த உயிர் தான் ஏற்கும் உணவைச் சேமித்து ஜீர்ணம் பண்ணுகிறது. அவ்வுணவினின்று புஷ்டியும் பெறுகிறது. உடலை வளர்த்து ஓம்புதல் உணவின் பயனுகும். அதே விதத்தில் உலகில் மதங்கள் பல இருக்கின்றன. அவைகளுள் ஒன்றோடு ஒன்று ஒவ்வாதவைகளும் உண்டு. விக்ரஹ ஆராதனை மஹாபாபம் என்கிறது. ஒருமதம். தானே விக்ரஹமாக வாய்ந்துள்ள மனிதன் மற்றொரு விக்ரஹத்தின் வாயிலாக பரமனை வழுத்தியாக வேண்டுமென்று கூறுகிறன். இன்னும் வழிபாடு வேற்றுமை மதங்களுள் உண்டு. ஒருமதம் ஆராதனை என ஆமோதிப்பதை மற்றொருமதம் அடாத செயல் என ஓதுகிறது. இப்படிமதங்கள் வேறுப்பட்டிருப்பினும் அவை யாவுக்கும் ஆதி நாயகனுக ஈசன் இலங்குகிறன். மக்களின் இயல்பு வேறுபாட்டுக்கு ஒப்ப மத வேறுபாடும் இருக்கிறது. யார் யார் எந்த எந்த மதத்தின் மூலம் எப்படியெப்படி இறைவனை வணங்குகின்றார்களோ அப்படி எல்லாம் பகவான் மக்களுக்கு ஊக்கம்கொடுத்து, பக்தியை வளர்த்து, அவர்கள் தம்மை வந்தடைவற்கு வழிகாட்டித் தருகிறர். மதங்கள் அனைத்துக்கும் அவருடைய அனுக்கிரஹம் உண்டு. மதங்கள் பலப்பலவாக அமைந்திருப்பதே மானுட இயல்புகளுக்குத் தேவையாம். அவரவர் மதத்தை மக்கள் ஆழ்ந்து அனுஷ்டிப்பதற்கிடையில் மதங்களுள் சமரசம் காண்பது முற்றிலும் அவசியமாகிறது. சமரசம் காண்பது இறைவனுடைய பெரும்திட்டத்தைப் போற்றுவதாகும்.

முக்தியை நாடுபவர்களுக்கு பகவான் முக்தியைக் கொடுக்கிறுன், புத்தியை (போகத்தை) நாடுபவர்களுக்கு பகவான் போகத்தைக் கொடுக்கிறுன். போகப் பொருள்களாய்ப் பரிணமித்திருப்பதும் பகவானேயாதலால் போகத்தை நாடுபவர்களும் தம் அறிவுக் கெட்டியபடி பகவானையே நாடுகிறுர்கள். இயற்கையோடு வைத்துள்ள வெவ்வேறு விதமான இணக்கத்துக்கு ஏற்றுற் போன்று பல விதமான அனுபவங்கள் வாயிலாக எல்லா உயிர்களும் இறைவனையே இறுதியாக வந்தடைவதால் மார்க்கங்கள் யாவும் அவனை நோக்கிச் செல்பவைகளாகின்றன. ஈஸ்வரன் கற்பக விருக்ஷம் போன்றவன். கற்பக விருக்ஷத்தின் அடியில் இருந்து கொண்டு யார் எதை விரும்புகிறுர்களோ அதை அடைகின்றனர்.

''காங்ஷந்த: கர்மணும்ஸித்திம் யஜந்த இஹதேவத:
க்ஷிப்ரம்ஹி மானுஷே லோகே ஸித்திரபவதி கர்மஜா''

மனிதர்கள் வினைப்பயனை விரும்புபவர்கள். இம்மையில் பல தேவதைகளை (மாரியம்மன். கருமாரியம்மன் என்றும்) தொழுகின்றனர். ஏனென்றுல் அவர்களால் வையகத்தில் வினைப்பயன் விரைவில் வாய்க்கின்றது. அதனுல் பலதேவதைகளைத் தொழுது அல்ப பலனைப் பெற்று சொற்ப சந்தோஷம் அடைகின்றனர்.

ஆத்ம ஞானத்தை விட மிக எளிதில் அடையப் பெறுவது கர்மபலன். அதுக்கிடைக்குமிடம் இம்மை என்றும் மனுஷ்யலோகம் என்றும் சொல்லப்படுகிறது அது இந்திர்யங்களுக்குப் புலனுகும். இவ்வுலகம் அறிவிலிகள் எது விரைவில் அகப்படுகிறதோ அதில் பற்று வைத்து அதையே நாடிச் செல்லுகின்றனர். ஆனுல் இதற்கோர் உதாரணம் சொல்லப்போகிறேன். நாம், ஓர் அரசனுேடு இணக்கம் கொள்ளுவது அரிது. இருந்தாலும் அரசனுடைய இணக்கம் எல்லாவித நன்மைகளும் மேன்மைகளும் தரும். அரசனுடைய சிப்பந்திகளில் கீழ் நிலையில் இருப்பவர்களிடம் விரைவில் தொடர்புக் கொள்ளலாம். ஆயினும் அவர்களிடமிருந்து அடையும் நன்மையும் மிக அற்பமானதேயாகும். சர்வேஸ்சுவரனை ஆராதிப்பவர்கட்கு பக்தி ஞானம் முக்தி முதலியன வரும். சிறு தெய்வங்களை வணங்குபவர்க்கு அதற்கேற்ற கர்மபலன் கிடைக்கிறது. மக்களுக்கிடையில் மனபரிபாகம் வேறுபடுகிறது. அதற்கு ஏற்ப அவர்கள் நாடுகின்ற நலனும் வெவ்வேறு வகைப்பட்டது.

## ஆண்டாள் பகவானை உத்தமன் என்பது

ஓங்கி உலகளந்த உத்தமன் "என ஆண்டாள் திருவுள்ளத்தில் தோன்றிற்று. ஆழ்வாராதிகளும் வாமனனிடத்தில் விசேஷித்து ஈடுபடுவது இதனாலேயாம். இவ்வவதாரத்துக்குள்ள சிறப்பு என்ன எனில் மற்றையவதாரங்களில் ''பரித்ராணாயசாதூனாம் வினாஸாயசதுஷ்க்ருதாம்'' என்றபடி பலவகையில் பகைவரைச் சித்ரவதம் செய்து, துன்பத்திற்கு ஆளாக்கி, ஸாதுபரித்ராணம் செய்வதென்பது வாமன அவதாரத்தில் இல்லை ஸுராணா மஸுராணாம் சஸாமான்ய மதிதைவதம்'' என்ற தன் பெயர் கெடாதபடியும் உயிரழிக்காதப்படியும் உத்தமமான வழியில் நடந்து கொண்டது இவ்வவதாரத்திலேயாம். ஆகவே, உத் எனப்படும் எம்பெருமான் சிலரை அனுக்ரஹிக்கவே ஹம்ஸாத்யவதரங்களிலே உத்தரநானான் திருவிக்ரமனான போது உத்தமனானான். ஓங்கி உலகளந்த உத்தமன் துற்பிக்ஷம் நீங்க மழைபெய்ய வேண்டுமென்று ப்ரார்த்திக்கும் நமக்கு உலகளந்தானைப் பாடுவதே பொருந்தும் என்பதும் கருத்தாம். ஏனெனில் அவனே தடையின்றி ஜலம் ப்ரவாஹிக்கக்காரணமானான். திருக்கையினாலே மாவலியின் கெண்டியினின்று கங்கா தீர்த்தத்தை எல்லா உலகிலும் தீங்கின்றி செல்வம் ~~தீங்கும்படி~~ பெருக்கினான். கெண்டியினுள் புகுந்து ஜலத்தைத் தடுத்து சுக்கிரன் கண்ணைத் துரும்பினால் கிளரிய சக்ரக்கையனிவன். அதனால்கெண்டியினின்று தீர்த்தம் பெருகிற்று. உலகெல்லாம் பரவி ஸ்தாவரங்கள் ஓங்கி வளர்ந்தன. ஆகவே ஓங்கி உலகளந்த உத்தமன் என்றார்கள்.

# உழவன் பெருமை

சகல ஜீவஜந்துக்களும் ஜீவிப்பதற்கு ஜீவனோத்தாரணமாகும். உணவுப் பொருளை உண்டாக்கி பல உயிரினங்களுக்கும் ஜீவாதார மாய் இருப்பவன் விவசாயி என்பவன் ஒருவனே யாவான். அவ னுடைய வேளாண்மை எல்லாருடைய சரீரத்தையும் போஷிப் பதாகும்.

தோழர்களே! பூலோகத்தில் தவசிகளையும் முனிவர்களையும் அரசாங்கத்தையும் வேந்தர்களின் நாட்டைப் பாதுகாப்பவர்களை யும் போஷிப்பது விவசாயியின் தொழிலேயாகும். அது மட்டுமல்ல கூன், குருடன், முடவன் ஊதாரித்தனமாகத் திரிபவன் முழு சோம்பேறி, கொலை, களவு செய்பவன் பட்க்ஷிகள் மிருக ஜாதிகள் ஆகிய அனைத்திற்கும் உணவு தருபவன் உழவனொருவனே யாவான். தான்ய உற்பத்தி செய்யும் காலத்தில் உழுவதும் அதற்குத் தகுந்த விதை தேடி நேரத்தில் விதையிட்டு, நீர்ப்பாய்ச்சி உரமிட்டு அனேகவிதமான பாதுகாப்பிட்டு, தான்யம் அறுவடை செய்யும், வரையில் வேளாண்மையின் வாழ்க்கையை முன்னிட்டுத் தவம்செய்கிறான் விவசாயி. மேலே சொல்லி வந்த இத்தனை பெயர் களும விவசாயியின் மேழிச் செல்வத்தை நாடுபவர்களே ஆவார் கள்; ''சர்வேஜநாஸுகிநோ பவந்து'' என்று அவனியிலுள்ளோர் எல்லோரும் ஸுகமாயிருக்க வேணுமென்று வாழ்த்துவது வயலின் வாழ்வாகும். அது மட்டுமல்ல, 'சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால் உழந்தும் உழவே தலை'' உலக மக்கள் அனைவரும் வெவ் வேறு தொழில்களைச் செய்து கொண்டு வாழ்ந்து வந்தாலும் உழவுத் தொழிலையே பின்பற்றிச் செல்ல வேண்டியவர்களாக இருக்கிறார்கள். ஆகையால் எவ்வளவு சிரமப்பட்டாலும் உழவுத் தொழிலே மிகமேன்மைப்பட்டதாகும்.

கலியுகத்தில் ஆஸ்ரிதர்களை ரக்ஷிப்பதற்கு பகவான் ஆங்காங்கு கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் அர்ச்சா மூர்த்திக்கு நாள் தோறும் செய்யும் பூஜை நைவேத்யம் முதலானவைகளுக்கும் உதவி செய்வது வேளாண்மை வருவாயாகும். அர்ச்சாமூர்த்திக்கு ஸ்தோத்ர மந்திரங்கள் சொல்லும் அர்ச்சகர்களுக்கும் தேவை யான உணவு தருவது விவசாயிகளின் மேழிச் செல்வமேயாகும். வேளாண்மை ஆரம்பகாலத்தில் க்ரிஷியைப் பண்படுத்தி விதை யிடும் போது வருண பகவானை மழை பெய்ய வேண்டி க்ரிமி. கீடக பிபீலகாதி பர்யந்தம் ஜீவனோபாயமாகவும் இருக்கிறது. தனது வேளாண்மை தீங்கின்றி நடக்கவும் உழவன் சூர்ய பகவானையும் வேண்டுகின்றான். ஸ்ரீஆண்டாள் ''தீங்கின்றி நாடெல்லாம்

திங்கள் மும்மாரி பெய்து நாங்கள் நம் பாவைக்குச் சாற்றி நீராடினுல்'' என்று தொழுவதுபோல் உழுபவன் பகவானை பூஜிக்கின்ருன். பூலோகத்தில் மானிடப்பிறவி ஜென்மாந்த்ர நற்றவங்களாலே வந்துள்ளது. அப்படி வந்துள்ள மானிடப்பிறவியில் மேலோரென்றும் கீழோரென்றும் ஏற்றத் தாழ்வுகளில்லை என்று வேதம் கூறுகிறது. ஒவ்வொருவருடைய குணத்தினுலேயும் செயல்களாலேயும் இத்தகையவனென்று சொல்லலாம். பரப்ரஹ்மத்தை அறிந்து மக்களுக்கு போதித்து வந்த ப்ராஹ்மணர்களுக்கு பகவான் பிரியமானவர் என்று ஸஹஸ்ர நாமத்தில் சொல்லும் வாக்யம். **''ப்ரஹ்மவித் ப்ராஹ்மனே ப்ரஹ்மி ப்ரஹ்மஞானோ ப்ராஹ்மணப்ரிய''** என்பது சான்ருகும். ஸ்ரீமகாபாரதத்தில் 188வது அத்யாயத்தில் மானிடப்பிறவியில்பேதமில்லைஎன்றும்இந்த ஜகத்தெல்லாம் ப்ரஹ்மமாகவே இருந்ததென்றும் சொல்லப்பட்டு இருக்கின்றது. க்ருதயுகத்தில் ஜாதி பேத மில்லை என்று வாயு புராணத்தில் எட்டாவது அத்யாயத்தில் சொல்லப்பட்டிருக்கின்றதும் சான்றாகும்.

## மஹாபாரதத்தில் வைஸ்யம்பாயனர் தர்மராசாவுக்கு வர்ணுச்ரமதர்மம் சொல்லுதல்

''சுலோ॥ நகுலே நஜாத்யாவ. க்ரியாபிர் பிராஹ்மனே பவேத். சண்டாலோபி ஹி வ்ரு ததஸ்தோ ப்ராஹ்மண ஸயுதி ஸ்டிர ஏகவர்ணமி தம்பூர்ணம் விஸ்வமாஸீத் யுதிஸ்டிர கர்மக்ரிய விஸேஷேண சாதுர் வர்ணயம் ப்ரதிஸ்டிதம் ஸர்வேவையோ நிஜாமர்த்தியாஹ ஸர்வே மூத்ரபுரிஷண: ஏகேந்த்ரி யேந்த்ரி யார்த்தஸ்ச சஸ்மாச்சீல குணைர்த் விஜ: ஸூத்ரோபி ஸீலஸம் பந்னே குணவரந் ப்ராஹ்ணே பவேத் ப்ராஹ்ணேபிக்ரியாஹீந: ஸூத்ராத் ப்ருத்ய வனேபவேத்

ஓ யுதிஷ்டிரா,(ஓ தர்மராஜா)ஜாதியினுல் ப்ராஹ்மணனுகமாட்டான். கார்யத்தினுல் நல்ல நடவடிக்கையுடையவன் சண்டாளனுயிருந்த போதிலும் அவனே ப்ராஹ்மணனுவான். முற்காலத்தில் ப்ரபஞ்சமெல்லாம் ஒரே ஜாதியாயிருந்தது. கர்மத்தினுல் நான்கு ஜாதிகளாக ஏற்படுத்தப்பட்டது. மனிதர்களெல்லோரும் ஓர் தாய் கர்ப்பத்திலிருந்து பிறந்தவர்களென்ருல் இவர்களில் நல்ல

நடவடிக்கை எவனுக்கு உண்டோ அவனே ப்ராஹ்மணன் என்பார், இதற்குச் சில வாக்யங்களை புராணங்களிலிருந்து திருஷ்டாந்தமாய்ச் சொல்லுகிறேம். ஒருவன் ப்ராஹ்மணக் குலத்தில் பிறந்தும் ப்ராஹ்மணத்வம் இல்லாதவனை நம்மாழ்வார் 3 ஆம் பத்து 7ஆம் திருமொழியில் 9ஆம் பாசுரம் பார்க்கவும்.

பாசுரம்

"குலம்தாங்கு சாதிகள் நாலிலும் கீழிழிந்து எத்தனை
நலந்தானிலாத சண்டாள சண்டாளர்களாகிலும்
வலந்தாங்கு சக்ரத்தண்ணல் மணிவண்ணற் காளென்று உள்
கலந்தார் அடியார்தம் அடியாரடியார் எம்மடிகளே"

—நம்மாழ்வார்

பிறரிடத்து வேலைக்காரனுயிருந்து இட்ட வேலையைச் செய்து சம்பளம் ஏற்று ஜீவிப்பவன் சூத்திரனுகிறுன். இக்காலத்து குமஸ்தாக்களெல்லாரும் சூத்திரர்களாவார்கள். நல்ல மனப்பான்மையுடன்ஆசிரிய வேலை செய்கிறவர்களை ப்ராஹ்மணர் என்று சொல்லலாம். அரசாங்கத்தில் ஆக்ஷி முறையைச் செலுத்துபவர்கள்க்ஷத்திரிய கர்மம் இயற்றினுலும் சம்பளம் ஏற்பதால் குற்றேவல் செய்பவரென்றும் சொல்லப்படுவர்.

"பரிசர்யாத்மகம் கர்ம சூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம்"

என்று கீதை சொல்லுகிறது. ஆகவே, அக்காலத்து ப்ராஹ்மணர்கள் உஞ்சி விர்த்தி செய்து வேதங்களை ஓதி வந்தார்கள் என்பதையும் புராண வாயிலாகக் காண்கிறேம். ஆகவே. ஸ்வேச்ச விருத்தி ஸ்வயம் ப்ரவர்த்தி என்றும், பரசர்ய பரச்சர்ய விருத்தி சூத்ரப்ரவார்த்தி என்றும் சொல்லப்படுகிறது. இதற்கு கீதாவாக்யம் சான்ருகும். இத்தகைய குற்றேவலென்னும் சூத்திரத் தொழிலில் ஈடுபடாதவன் வேளாண்மை நடத்துபவன் ஒருவனே ஆவான். மேழிச் செல்வம் கோழைபடாது என்னும் அவ்வையார் வாக்யமும் இதற்குச் சான்ருகும்.

## ஒருவன் செல்வமுடையவனுவது எப்படி?

"ப்ராப்ய புண்யக்ருதாம் லோகானுஷித்வா சாச்வதீ: ஸமா:
சுசீனும்ஸ்ரீமதாம் கேஹேயோகப்ரஷ்டோSபிஜாயதே"

யோகப்ரஷ்டன் புண்யம் செய்தவர்களின் உலகங்களையடைந்து அங்கு நெடிது வாழ்ந்திருந்து, செல்வம் நிறைந்த

புனிதவான் இல்லத்தில் பிறக்கிறான். அத்தகைய நல்ல ஒழுக்க முடையவன் வீட்டிலேயே யோக ப்ரஷ்டன் பிறக்கிறான். ஏனென்றால், யோகியின் இயல்பு எப்போதும் தூய்மையானது. ஒவ்வொரு ஜீவனும் அதனதன் தன்மைக்கும், வினைக்கும் ஏற்ற இடத்தில் பிறப்பெடுப்பது இயல்பாகும். (கீதாவாக்யம்) (பொருள்) ஆஸ்தி என்பது ஒவ்வொருவருடைய புண்யவசத்தினால் வருவதாகும். மனிதப் பிறவியில் தாய் தந்தைகள் ஆஸ்தி வைத்திருப்பதால் குழந்தைகள் மீது ஆசை உண்டாகிறது பிள்ளைகளும் பொருளை நாடி தாய் தந்தையர்களை முதுமைக் காலத்தில் பாதுகாத்து வருகின்றார்கள். அரசர்களின் உரிமைப்படி அவர்களது புத்திரர்களும் இளவரசர்களாகத் தொடர்ந்து வந்தார்கள். இது போலவே பத்ம கோடி காலங்களாகத் தொடர்ந்து வருகின்றது. பொருள் இல்லை என்றால் ஒருவருக்கு ஒருவர் பந்தமில்லாமல் போய் விடும் பக்ஷிகள் மிருக ஜாதிகள் அனைத்தும் தமது குஞ்சுகளுக்கு உணவு ஊட்டும் வரையிலும் ஒரு சில மிருகங்கள் பாலூட்டும் வரையிலும் பந்தமுண்டாய் அதன் பிறகு யாருக்கு யார் என்பது போல பந்தமில்லாமல் போய் விடுகிறது அல்லவா? மனித குலம் அப்படி இல்லை. கணவனுக்கு பொருளில்லை என்றால் மனைவிக்கு ஆற்றலும் பந்தமும் குறைந்து விடும். அது போல ஆஸ்திகள் ஒருவருக்குப் புண்யவசத்தால் வந்ததாகும் என்பார்கள். அவைகளை அரசாங்கமோ, அல்லது மற்றவர்களோ பறித்து மற்றவர்களுக்குப் பகிர்ந்து கொடுத்ததாக இதுவரையில் இல்லை; இக்காலத்தரசாங்கம் ஒருவன் பொருளை மற்றொருவனுக்குப் பகிர்ந்துக் கொடுக்கவும் அக்கறை காட்டுகின்றது. அதனால் மக்கள் ஊதாரித்தனமாகவே திரிவதால் அரசாங்கத்துக்கும் நாட்டுக்கும் கெடுதி யுண்டாகும் என்பதைக் கருதவில்லை! இது எப்படி இருக்கின்றதென்றால் ஒரு காலத்தில் வேனன ஊதாரிகளுக்கும் சாம்பித் திரிபவர்களுக்கும் நாட்டின் உடமைகளை பகிர்ந்து கொடுத்து வந்தால் அரசாங்கத்தை பாதிக்கப்பட்டதாக விஷ்ணு புராணத்தில் சொல்லப்பட்டது. நானும் அது போல கருதுகிறேன்.

அதிசய கேள்வியும் பிறப்பின் குறைகளும் ஒருவனுக்கு அங்கஹீனம் வருவதைப் பற்றியும் விளக்கம் கூறுவது

## ஒருவனுக்கு அங்கஹீனம் வருவதைப்பற்றி விளக்கம்

தோழர்களே! மனிதப் பிறவிகள் புண்ய வசமாக வந்தவைகள், அவர்களுள் அங்கயீனமாகப் பிறக்கப்பட்டவர்கள் கணக்கற்ற

பேர்கள் உண்டு. பூர்ண அங்கங்களோடு பிறந்தவர்களும் உண்டு. தோழர்களே! கண்ணில்லாக் குருடனுக்கு நேத்திரமுள்ளவன் கண்ணைப் பிடுங்கி வைப்பார்களா? கர்ம வசத்தால் காலில்லாத வனுக்கு காலுள்ளவன் காலை எடுத்து வைக்கமுடியுமா? கரங்களில்லாதவனுக்கும். நாக்கில்லாதவனுக்கும். மற்றவர் வருடைய அவயவங்களை எடுத்துப் பொருத்த முடியுமா? ஆகவே பொருளென்பதும் ஒவ்வொருவருடைய புண்ய வசத்தால் வந்த தாகும் அல்லவா?

## வாழ்த்துப் பாடல்

வாழ்க! வாழ்க! வளமிக வேளாளன் வாழ்க!
வாழ்க! வாழ்க! வானத்திலுலாவும் முகில்கள் வாழ்க!
வாழ்க! வாழ்க! வளமிகுந்த செந்நெல் வாழ்க
வாழ்க! வாழ்க! வையகம் தீங்கின்றி வாழ்கவே!

## குரு சிஷ்யனைக் கேட்பது

அப்பா! எந்தக் காரணத்தால் உன் கால் நொண்டியாயிற்றோ அதை ஆலோசித்துப்பார். அப்படிப் பார்ப்பதே ஞானமார்க்கம். 'ஸ்ரத்தாவாந் வபதேஜ்ஞாநம்'' என்று ஸ்ரீகிருஷ்ண பகவான் சொல்லிருப்பது போல் சிரத்தையுடைய புருஷன் ஞானமும் மோக்ஷமும் அடைவான்.

## சிஷ்யன் தத்வங்களைப் பரிசோதனை செய்தல்

சிஷ்யன்—என் கால் எந்தக் காரணத்தினுல் நொண்டியா யிற்றோ அதை ஆலோசித்துப்பார் என்று ஆசாரியர் சொல்லியிருக் கின்றாரல்லவா? அதை இப்பொழுது ஆலோசிக்கலாம்.

என் கால் நொண்டியாயிருக்கின்றதே,இந்த நொண்டிச் சரீரம் நானே சிருட்டித்துக்கொண்டதல்ல. அப்படி நானே சிருஷ்டித்துக் கொள்ளும் பக்ஷத்தில் என் இஷ்டம்போல் நல்ல சரீரமாய் சிருஷ்டித்துக் கொள்வேனல்லவா? என் தாயின் கர்ப்பத்திலேயே யல்லவா இந்த நொண்டி சரீரம் எனக்குண்டாயிற்று.

## தாயின் கர்ப்பத்தின் விளக்கம்

என் தாயின் கர்ப்பத்தில் பிரவேசித்து என் காலை நொண்டி யாய்ச் செய்வதற்கு மனுஷ்யர்களால் ஆகமாட்டாதல்லவா? நான் முன் செய்த கர்மத்தினுல் என் தாயின் கர்ப்பத்திலேயே என்னை

எவரோ சிக்ஷை செய்ததாய் ஏற்படுகின்றது. ஆதலால், அப்படி சிக்ஷை செய்தவரே சர்வத்திற்கும் அதிகாரியான ஈஸ்வரனென்று அறிய வேண்டும்.

கர்ப்பத்திலேயே என்னை சிக்ஷித்திருப்பதால் இதற்கு முன் ஜன்மத்தில் நான் செய்த பாபகர்மத்திற்காக என்னை சிக்ஷித்தாற் போல் தோன்றுகின்றது.

இந்த ஜன்மத்தில் நான் பாபம் செய்தால், மறுஜன்மத்தில் எப்படிப்பட்ட சிக்ஷை எனக்கு ஏற்படுமோ தெரியாது.

ஆனால் நான் முன் ஜன்மத்திலேயுமிருந்தேன். இந்த ஜன்மத்தி லேயுமிருக்கின்றேன். வருகிற ஜன்மத்திலுமிருப்பேன். இது விஷயத்தை இப்படியே அந்தந்த ஜன்மங்களிலும் ஆலோசித்திருந் தால், மூன்று ஜன்மங்களும் தெரியவரும். இந்த மூன்று ஜன்மங் களிலும் நான் இருப்பதாய் ஏற்படுகின்றது. ஆதலால், நான் நித்யன்.

## முன் ஜென்மம் உண்மை

இதற்கு முன்ஜன்மத்தில் நான் இல்லாவிட்டால் எனக்குப் பாபமிராது. பாபமில்லாவிட்டால் என் கால் நொண்டியாயிராது பாபம் செய்யாதவனை சிக்ஷிப்பதற்கு நியாயமில்லை. பாபம் செய் யாதவனை சிக்ஷிப்பதால், அவன் ஈசுவரனாக மாட்டான்.

நான் முன்ஜன்மத்தில் மரணமடைந்திருந்தால், இந்த ஜன்மத் தில் எப்படிப் பிழைத்திருப்பேன்? மரணமென்றால், இந்தச் சரீரத்தை விட்டு மற்றொரு சரீரத்தில் ஆத்மா பிரவேசிப்பதே யாகும். (ஸ்ரீகிருஷ்ணார்ஜுந ஸம்வாத ரூபமாய் எழுதிய ஸ்ரீபகவத் கீதை அத்யாயம் 2. சுலோகம் 22 பார்க்கவும்) நான் மறு ஜன்மத் தில் பசுவாய் ஜன்மித்தால் அப்பொழுது எனக்குக் கைகள் இருக்க மாட்டாதல்லவா? ஆதலால், கைகள் இந்தச் சரீரத்திலேயே நின்று விடுகின்றன. எனக்குக் கைகள் இருந்தால் நான் ஜன்மிக்கும் பசுவின் சரீரத்திலும் கைகளிருக்க வேண்டும். அப்படி இல்லாமல் அவை கள் இந்த சரீரத்திலேயே நின்றுவிடும் ஆதலால், கர்மேந்திரியங் கள் என்னை பிடித்துக் கொண்டிருக்கவில்லை கர்மேந்திரியங்கள் நானல்ல கர்மேந்திரியங்கள் சரீரசம்பந்த மேயல்லாமல் அசரீரி யாகிய எனக்குச் சம்பந்தமில்லை.

புழுவாய் ஜன்மித்தால் காதுகளில்லை. ஆதலால் அதுவும் சரீரசம்பந்தமேயல்லாமல் அசரீரியாகிய எனக்குச் சம்பந்தமான தல்ல. ஆதலால்; ஞானேந்திரியங்கள் என்னைப் பிடித்துக் கொண் டிருக்கவில்லை.

விருக்ஷமாய் ஜன்மித்தால் இருபத்து நான்கு தத்வங்களும் இல்லை; இந்த இருபத்து நான்கு தத்வங்களும் சரீரத்திற்கு சம்பந்தமேயல்லாமல். அசரீரியாகிய எனக்கு சம்பந்தமானதல்ல. இந்த இருபத்து நான்கு தத்துவங்களும் என்னைப் பந்திக்கமாட்டா. எல்லா தத்வங்களும் சரீரத்தையே பிடித்துக் கொண்டிருக்கின்றன. ஆனல் விருக்ஷமானது எதை அறியுமென்றுல் ஸ்பர்சத்தை மாத்திரம் அறிகின்றது. விருக்ஷமாய் ஜன்மித்தால் எல்லா தத்து வங்களும் நசித்து அறிவு மாத்திரம் சேஷித்து நித்தியமாய் இருக் கின்றது. சர்ப்பங்களுக்குக் கண்களும் செவிகளும் ஒன்ருயிருக் கின்றன. வௌவால் என்னும் பக்ஷிக்கு பிராண பானங்கள் ஒன்ருயிருக்கின்றன. இவ்விதமாய் அந்தந்த சரீரங்களுக்குத் தக்க படி. உயர்வு தாழ்வு யென்னும் ஸ்தான பேதமுண்டு. மனிதன் செய்யும் புண்யங்களுக்குத் தக்க சரீரம் ஏற்படுகின்றது. ஒவ்வொரு பிறவியின் சரீரங்கள் எடுப்பதற்கு காரணமானவன் மனிதன் ஒருவனேயாவான். மனிதன் எத்தகைய புண்ய பாவங்கள் செய் கின்ருனே. அதற்குத் தக்கப்படி சரீரங்கள் உண்டாகின்றன. ஆனல் மனிதன் தவிர மற்ற வுயிரினங்களுக்கு பிறவிகள் எடுக்கக் கூடிய செயல்கள் கிடையாது. அவைகள் அறிவில்லா பிறவிகள். சரீரத்திற்கு உண்டாகும் சுகதுக்கங்களும் தர்மாதர்மங்கள் என்ற அறிவும் மனிதனுக்கு உண்டு, மற்ற ஜந்துகளுக்குக் கிடையாது. ஆதலால் ஆத்மா என்னும் நான் இந்தச் சரீரத்துக்குள் புண்ய பாபங்களைப் பார்க்கின்றவனுக இருக்கின்றேன்.

### பந்தம் பரியினுடையவும் திருவண்ணமலையினுடையவும் அந்தரார்த்தம்

''காணப்பா கோவிலென்றுந் தீர்த்தமென்றுங்
காசினியிற் செம்பால் விக்ரகமென்றும்
பேணப்பா உலகத்தோர் தங்களைத்தான்
பேய் போல திரிந்தலையப் படைத்தா ரீசன்

நாணப்பா தேவதையைப் பணிந்திட்டாலும்
நதிகளெல்லாந் தேடிப் போய் முழுகினாலும்
ஊணப்பா உன்வீட்டுக்குள்ளிருக்கும்
ஒளியுள்ள வத்துவைத் தானறிந்து காணே"

ஓ சகோதரர்களே! எங்குள்ள தீர்த்தங்களுக்குச் சென்று ஸ்நானம் செய்து அங்குள்ள ஆலயங்களில் இருக்கும் விக்ரஹங்களைத் தரிசித்த போதிலும் மோக்ஷம் (விடுதலை) அடையமாட்டார்கள். விடுதலை என்றால் சகல பந்தத்திலிருந்தும் விடுபடுதல் ஆகும். இதற்கோர் திருஷ்டாந்தம் சொல்லுகின்றோம் கேளுங்கள்.

சென்னை திரு ஒற்றியூரில் ப்ரதிவருஷம் மாசிமாதம் நடந்தேறி வரும் உற்சவத்தில் பத்தாவது நாளில் பந்தம்பரி உற்சவம் நடக்கின்றதென்றும் அதைப் பார்க்க வேண்டுமென்றும் எண்ணங் கொண்டு அனேகஸ்த்ரீ புருஷர்கள் ஆயிரக்கணக்காய் கூட்டங்கூடி அங்கு சென்று பந்தம்பரி அந்த்ரார்த்தம் (இரகசியார்த்தம்) தெரிந்து கொள்ளாமல் பந்தம்பரி என்னும் உற்சவத்தைப் பார்த்து கட்டுச்சாதங்களைச் சாப்பிட்டு புதுப் பாண்டம் வாங்கிக் கொண்டு வருகின்றார்கள். இதன் அந்தரார்த்தம் என்னவென்றால் காம க்ரோத லோப மோஹ மத மச்சர டம்ப தர்ப ஈர்ஷை அசூயை என்னும் பத்து பந்தங்களையும் பறி (கொள்ளை) கொடுக்க வேண்டுமென்பதேயாம். இந்த பத்து பந்தங்களையும் கொள்ளை கொடுத்தால் மோக்ஷ மென்னும் பதவியை அடையலாமென்று காட்டுவதற்காகத் திருஒற்றியூரில் பத்தாவது தினத்தில் எல்லோரும் உங்களிலிருக்கும் ஆசைகளெல்லாம் கொள்ளை கொடுங்களென்பதேயாகும். இதை பூர்வீக பெரியோர்கள். ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

## திருவண்ணாமலையில் தீபத்தின் ரகசியம்

திருவண்ணாமலையின் மீது பெரும் விளக்கேற்றி அதைப் படுதாவினால் மறைத்து வைக்கின்றார்கள். பிறகு மாலை ஐந்தரைமணிக்கு மேல் கிருத்திகை நக்ஷத்திரம் பிறந்தவுடன் ஆலயத்திற்குள் அலங்கரித்து வைத்திருக்கும் ஈஸ்வர விக்ரகத்தைச் சமந்து வெளிப் ப்ரகாரத்தில் கொண்டு வந்தவுடன் ஆகாச மார்க்கமாய் எகிரி ஓடும் பாணத்தைக் கொளுத்தி மேற்படி தீபத்திற்கு நேராய் விட்டவுடன் அதுவரையில் மலையின்மீது படுதாவால் மறைத்து வைத்தி

ருக்கும் தீபத்தினிடம் தயாராக காத்துக் கொண்டிருக்கும் புருஷன் ஆகாச தீபத்தைப் பார்த்தவுடன் மேற்படி திரையை எடுத்து விடுகின்றான். திரையை எடுத்தவுடன் அதுவரையில் ஆலயத்திற்குள் ஒருவரோடொருவர் இடியுண்டு மிதிபட்டுக் காத்திருக்கும் எல்லோரும் இருகைகளையும் குவித்து சிரசிற்குமேல் தூக்கி ஹர ஹர! ஹர ஹர! வென்று எல்லோரும் சப்தமாய்க் கூச்சலிடுவார்கள். அந்தச் சமயத்தில் அதுவரையில் அங்கு காத்திருந்த கள்ளர்களெல்லோரும் புருஷர்கள் தங்கத்தினால் கவசம் போட்டுக் கழுத்தில் கட்டியிருக்கும் தங்கருத்திராக்ஷகண்டிகளையும் ஸ்த்ரீகள் கண்டத்தில் தரித்திருக்கும் கெம்பு ரவை அட்டிகைகளையும் காசி மாலையும் தாலி உருக்களையும் மிகவும் கூர்மையுடைய கத்திரியினால் திருடன் கத்திரித்து தன்புறமாய் நின்றிருக்கும் மற்றொரு திருடன் கையில் கொடுத்து விடுகின்றான். ஸ்த்ரீகளும் புருஷர்களும் தீபதரிசனம் செய்து முடிந்த பிறகு தங்கள் தங்கள் கழுத்திலிருக்கும் ஆபரணங்களைப் பார்த்து என்னுடைய கல்லிழைத்த அட்டிகைபோச்சு என்னுடைய ரவை அட்டிகை போச்சு என் சரட்டு அட்டிகை போச்சு என் தாலியுருப்போச்சு என்று ஸ்த்ரீகளும் என் தங்கருத்ராக்ஷகண்டி கண்டிகைப் போச்சு என்று புருஷர்களும் சற்று நேரம் விசனப்படுவார்கள். அதன்பிறகு மாவிளக்குப் போட்ட பச்சை மாவுகளையும் தேங்காய்களையும் மஹா ப்ரசாதமென்று சொல்லி சுவாமிக்கு நைவேதித்த தேங்காய் மாவுகளை ஒரு பொழுதென்று நொல்லி வயிறு நிறைய புசித்து அதற்கு மேல் பச்சை ஜலம்குடிப்பார்கள். மாவும் ஜலமும் வயிறென்னும் பாண்டத்தில் சேர்ந்து தோசை மாவு போல் நன்றாய்ப் புளித்து விடுவதினால் காலை மூன்று மணிக்கெல்லாம் திருவண்ணாமலையில் வாந்தி பேதி என்று சொல்லுவார்கள். திருவண்ணாமலையில் வாந்திபேதி என்பதற்குக் காரணம் இதுவேயாம். கார்த்திகை தீபத்தின் அந்தரார்த்தத்தைக் குறித்து ஜனங்கள், என்ன சொல்லுகிறார்களென்றால், ஆகாச மார்க்கமாய் ஏவிவிடும் பாணமானது மலையிலுள்ள பெரும் விளக்கைப் போய் கொளுத்துகின்றதென்று ஐதீகம். இன்னும் மற்றொரு விசேஷமும் உண்டு. ஏவிவிட்ட சுரபாணமானது ஜீவாத்மாவாகவும் மலைமேல் ஏற்றி வைக்கும் விளக்கானது பரமாத்மாவாகவும் ஜீவாத்மா பரமாத்மாவிடம் சேருகிறது என்றும் ஐதீகம் காட்டுகிறார்கள்.

திரு ஆலங்காட்டில் பத்தாம் உத்சவம் நடக்கும் போது நடராஜப் பெருமான். காக்ஷி அளிப்பதற்காக வெளியே வரு

கின்றார் என்று மக்கள் திரள்திரளாகச் சென்று பெருமானை சேவிக்கின்றார்கள். இப்படியும் மக்கள் பேரருளாளன் திருவடி அடையும் பாக்கியம் கிடைக்கும் என்ற ஐதிகத்தைப் பெரியோர்கள் மேற்கொண்டு இருக்கிறார்கள். இவைகளெல்லாம் இன்றளவும் நடக்கின்றன.

திருநின்றவூர் பக்தராவி என்னும் பக்தவத்ஸலப் பெருமான் நின்ற கோலமாகவும் மச்சவத்தி ஸமேதமாகவும் எழுந்தருளியிருக்கின்றார். பகவானுக்கு பக்தவத்ஸலன் என்று ஒரு பெயருண்டு. வத்ஸ=கன்றுக்குட்டி. வாத்ஸல்யம்=தாய்ப்பசு காட்டும் ப்ரேமை. கன்றுக் குட்டியைக் காப்பவன் வத்ஸலன். பக்தர்களென்னும் கன்றுகளைக் காப்பவன் கடவுள்—பக்தவத்ஸலன் ஆகின்றான், ஸ்ரீநிவாச விமானம் வருணபுஷ்கரணி அமைந்துள்ள திவ்யதேசம் பக்த வத்ஸலப் பெருமானுக்கு பால்குண மாதம் ஸ்ரவண நக்ஷத்திரம் புண்யதினம் ப்ரஹ்மஉத்ஸவம் நடக்கும்போது பத்தாவது நாள் பக்தர்களுக்கு ஸதாவரம் கொடுப்பதாக வாக்களிப்பதற்கு புஷ்பாலங்காரத்துடன் ஆரோகணித்து புறப்படுகின்றாரென்று பல கோடி மக்கள் பக்தராவிப் பெருமான் அருள் பெறுவதற்கா இன்றளவும் வருகின்றனர் என்பதாகும்.

''காங்க்ஷந்த: கர்மணும் ஸித்திம் யஜந்த இஹதேவத
க்ஷிப்ரம்ஹி மானுஷே லோகே ஸித்திர் பவதி
கர்மஜா''

வினைப்பயனை விரும்புகின்றவர்கள் இம்மையில் பல தேவதைகளைத் தொழுகின்றனர். ஏனென்றால் வையகத்தில் வினைப்பயன் விரைவில் வாய்க்கிறது.

ஆத்ம ஞானத்தைவிட மிக எளிதில் அடையப் பெறுவது கர்மபலன். இம்மை என்றும் மனுஷ்யலோகம் என்றும் சொல்லப் படுவது இந்திரியங்களுக்குப் புலனாகும் இவ்வுலகம். அறிவிலிகள் எது விரைவில் அகப்படுகிறதோ அதில் பற்றுவைத்து அதையே நாடுகின்றனர். ஓர் அரசனோடு இணக்கம் வைப்பது அரிது எனினும் அவ்விணக்கம் எல்லா நன்மையையும் மேன்மையையும் பயக்கும். அரசனுடைய சிப்பந்திகளில் கீழ்நிலையில் இருப்பவர்களிடம் விரைவில் தொடர்பு கொள்ளலாம். ஆயினும் அவர்களிடமிருந்து அடையும் நன்மையும் மிக அற்பமானதேயாம். சர்வேசுவரனை

ஆராதிப்பவர்களுக்கு பக்தி ஞானம் முக்தி முதலியன வரும். சிறு தெய்வங்களை வணங்குபவர்க்கு அதற்கேற்ற கர்மபலன் கிடைக்கின்றது. மக்களுக்கிடையில் மனபரிபாகம் வேறுபடுகிறது அதற்கு ஏற்ப அவர்கள் நாடுகின்ற நலனும் வெவ்வேறு வகைப்பட்டது. செல்வத்தைக் கொடுக்கும் ஸ்த்ரீ தேவியைவிட்டு இவளுக்கு முன் பிறந்த மூதேவியை நாடுவதாகும் என்பதாம்.

## பல தெய்வங்களின் விளக்கம்

"நாட்டினான் தெய்வமெங்கும் நல்லதோர்
அருள்தன்னாலே
காட்டினான் திருவரங்கம் உய்பவர்க்கு உய்யும்வண்ணம்
கேட்டிரே நம்பிமீர்காள் கெருடவாகனனும் நிற்க
சேட்டைதன் மடியகத்துச் செல்வம்
பார்த்திருக்கின்றீரே"

எல்லாவிடங்களிலும் அம்மன் பிடாரி மாரியம்மன் முதலான (தாமஸ) தேவதைகளை ராஜஸருக்கும் தாமஸருக்கும் ஆச்ரயிக்கலாம்படி எம்பெருமான் அங்காங்கு நிலைநிறுத்தியிருக்கின்றான். பரத்தை அடைய விரும்புபவர்க்கு மோக்ஷத்தை அடையும்படி தனது ஒப்பற்ற க்ருபையினால். அரங்க மாநகரென்னும் திருவரங்கத்தை காண்பித்தருளினான். பக்தர்களாகிய நமக்கு, எவ்வகையிலும் குறையில்லை என்று நினைத்திருப்பவர்களே! நான் சொல்லுவதைக் கேட்டீர்களா? கருடனை வாஹனமாக உடைய பெருமான் நிற்கச் செய்தேயும் மாரியம்மன் பிடாரி என்னும் தேவதாந்தரங்களைப் பற்றுகிற நீங்கள். செல்வத்தைக் கொடுக்கும் லக்ஷ்மியை விட்டு மூதேவியிடத்தினின்றும் ஐச்வரியம் பெற நினைத்திருக்கிறீர்கள் போலும். தாரித்திரியம், துரத்ருஷ்டம், உறக்கம் சோம்பல், மூடத்தனம், முதலியவை உள்ளவளை, மூதேவி என்று நிந்திப்பது எல்லோரும் அறிந்த விஷயம், ஆகையாலே, கேவலம் மூதேவி என்பவள் ஸகல கார்யங்களுக்கும் பல அச்லீலங்களுக்கும் காரணமானவள், என்று அறிவீர்களாக. ஓ மனமே, இன்னமும் ஞானத்தை உனக்கு ஊட்டுகிறேன், கேட்பாயாக. வேதங்களும் வைதிக புருஷர்களும் பேசின பேச்சுகளையே பேசுவதனால் எம்பெருமான் மேன்மையை அறியமுடியாது. அவன் திருஉருவச் சேவையும் காணமாட்டோம் என்று அறிவீராக!

## அஹிம்சாதர்மம் கூறுவது மநுஸ்ம்ருதி

''வர்ஷேவர்ஷே ஸ்஽வாமேதேன ஸதம்ஸமா:
மாம்ஸாநிசநகாத்ய ஸ்தயோ: புண்யபலம்ஸமம்

நூறு வருஷங்கள் முறையாகத் தபசு பண்ணுவதும் மாம்ஸம் உண்ணும் பழக்கம் விடுவதும் இந்த இரண்டுக்கும் சமபலம் என்று வேதங்களறிந்த பெரியோர்கள் கூறுவார்கள்.

தபசுநாலேயும் தானத்தினுலேயும் ப்ரஹ்மலோகம் சித்திக்குமென சொல்லலாகாது. மாம்சம் உண்ணுத புண்யாத்மாக்களுக்கு புண்யலோகம் அதிசுலபமாகக் கிடைக்குமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். இதுபோன்ற தர்மங்கள் அநேகமாக பீஷ்மாசாரிகள் தர்மராஜாவுக்கு உபதேசித்திருக்கிருர். ஆகையால், ப்ராணி ஹிம்சையாவது அதை உண்ணும் ஸ்வபாவமாவது மானிடப் பிறவிக்கு விதிக்கவில்லே. இதைப்பற்றி அதிகமாகப் பேசுவதேன்? பசு பக்ஷிஜாதிகளில் கூட உத்தம ஜந்துகள் மாம்சஆஹாரம் ஏற்பதில்லே. அவைகளில் ஸ்ரேஷ்டமான ஜன்மம் கோவு,மான், யானே, அஸ்வம் முதலானவைகள் த்ருணபத்ர தான்யங்கள் மாத்திரம் புஜிக்கின்றன. நீசப் பிறவிகளான, நாய், நரி, புலிகள் முதலான நீச ஜந்துக்கள் போலே மாம்சாதிகள் புஜிக்காதல்லவா? அதே போல் பக்ஷிஜாதிகள் கூட ஹம்ஸபக்ஷி, 'கோகிலம் ஆகிய ஸ்ரேஷ்ட பக்ஷிகள் நீசப்பழக்கம் பழகுவதில்லே. பக்ஷிகளில் காகம், கருடன் கழுகு முதலான நீசபக்ஷிகள் மாத்திரம் துர்ப்பழக்கத்தில் ஈடுபடுகின்றன ஆகவே, அறிவுள்ள மனிதப்பிறவி எடுத்தும் பவித்ரமான வேதாந்தவிசாரம் செய்பவரும் கூட சிந்திக்காமல் அதர்மகார்யம் செய்கிருர்களே, என்ன ஆச்சர்யம்?

## கர்மதத்வம்

''கிம் கர்மகிமகர்மேதி கவயோ஽
ப்யத்ர மோஹிதா:
தத்தே கர்ம ப்ரவக்ஷ்யாமி
யஜ்ஞாத்வாமோக்ஷ்ய ஸே஽சுபாத்''

—கீதை

அர்ஜுனு, கர்மம் எது அகர்மம் எது என்பதில் ஞானிகளே தடுமாற்றமடைகின்றனர். எதைக் கர்மமென்று அறிந்து, கேட்டினின்று விடுபடுவாயோ அதை உனக்குப்பகர்வேன்.

அசுபங்களுக்கெல்லாம் மிகப்பெரியது பிறவிப்பிணி என்பது, தொலையாத இத்தொல்லையைத் தொலைப்பதற்கு வினையின் கூறு முழுதும் விளக்கப்பெற வேண்டும் உடலைக் கொண்டு ஓயாது வேலைவாங்குவதுதானே கர்மம் என்று அவசரப்பட்டு முடிவு கட்டிவிட வேண்டாம்.

கர்மணோ ஹ்யபி போத்தவ்யம்
போத்தவ்யம்ச விகர்மண:
அகர்மணஸ்ச போத்தவ்யம் கஹநா
கர்மணோ கதி:

அர்ஜுனா, கர்மத்தின் போக்கைத் தெரிய வேண்டும். விலக்கப் பட்ட கர்மம் எது என்பது தெரிய வேண்டும். கர்மத்தைக் கடந்த நிலையையும் தெரிய வேண்டும். கர்மத்தின் போக்கு அறிதற்கரியது.

இன்னதைச் செய் என்று சாஸ்திரம் விதித்துள்ளது கர்மம். இன்னதைச் செய்யாதே என்று சாஸ்திரம் விலக்கியிருப்பது விகர்மம்.

கர்மத்தில் அகர்மத்தையும் அகர்மத்தில் கர்மத்தையும் காண் போன் மக்களுள் மேதாவி ஆவான்; அவனே யோகி; அவனே எல்லாம் அறிந்தவன்.

கர்மம் பிரகிருதியின் இயல்பாகும். அகர்மம் ஆத்மசொரூபம். அவிவேகிகள் இரண்டுக்குமிடையில் வித்யாசம் தெரியாது குழப்ப மடைகின்றனர். ரயில் வண்டி ஓடுகிறது. அதில் ஊர்ந்து செல்லும் பிரயாணியொருவன் நிலத்தில் நிற்கும் மரங்கள் தன்னை எதிர்த்து ஓடுவதாகக் காண்கிறான். செயலில்லாத ஒன்றில் ஓடுதல் என்னும் செயல் காணப்படுகிறது. இங்கு அஞ்ஞானத்தால் அகர்மத்தில் கர்மம் காணப்படுகிறது. கடலில் ஓடும் கப்பல் கரையிலிருந்து பார்ப்பவனுக்கு அசையாது நிற்பது போன்று தென்படுகிறது. வானத்தில் சஞ்சரிக்கும் சந்திரனும் அப்படியே காக்ஷி கொடுக் கிறது. ஈண்டும் அஞ்ஞானத்தால் கர்மம் அகர்மமாக விளங்குகிறது. ஆக இயற்கையில் எப்பொழுதுமே கர்மம் கர்மமாகவும் அகர்மம் அகர்மமாகவும் பொருள்படுகின்றன என்று சொல்ல முடியாது. அஞ்ஞானத்தால் ஒன்றின் இயல்பு மற்றொன்றின் மீது சுமத்தப் படுகிறது. அறிவுள்ள ஞானி இதைத் தெளிவுறவேண்டும்

## ஜீவஹிம்ஸாபேதங்கள்

ஓ சுவாமி! ஜீவனில்லாத வஸ்து ஒன்றுமிலும் இல்லையே. தோட்டத்தில் விளையும் கீரை கத்திரிக்காய் முதலான ஸ்தாவர வர்க்கத்தில் ஜீவனில்லையா? அப்போது அவைகளை மாத்திரம் புஜிப்பவர்க்கு ஜீவஹிம்சை இல்லையா?

பதில்— ஓ ஸத்குணஸீலா! அதனிடத்திலும் ஜீவமிருக்கிறது ஆனாலும் அவைகளிடம் தாரதன்மையுண்டு. பல மூலாதிபக்ஷணங் கள் சாஸ்திரங்களில் தப்பாகச் சொல்லவில்லை. நமக்கு சாஸ்திரமே ப்ரமாணம், இதுவுமல்லாமல், பல மூலாதிகளிடம் ஜீவசக்தி இருந்த போதிலும் அவை ஜடம் என்று சாஸ்திரங்களில் பாப மென்று சொல்லவில்லை. அவைகளுக்கு ஜீவ ஜந்துக்கள் போலே மனஸு புத்திசித்தம் முதலான ஞானேந்திர்யம் கர்மேந்திர்யங்கள் இல்லை. இந்திர்யங்கள் எப்போது இல்லையோ அப்போதுஸுகதுக்கங் கள் உண்டாவதற்கு இடமில்லை ஸஸ்யம் என்பது பலபத்ரங்கள் விஷயமாக சொல்லபட்டதேயாகும். சாஸ்திரம் சொல்லுவது விருக்ஷாதிகளுக்கு சம்மந்த பட்டவைகளில்லை. இப்படிச் சொன்னாலும் இதற்கு உதாரணம் ஒன்றுண்டு. ஒருவனை மருத்துவர் மூர்ச்சை அடையச் செய்து கூர்மையான ஆயுதங் களால் சிகிச்சை செய்யும் போது அவனுக்கு ஸுகதுக்கங்கள் தெரிவதில்லையல்லவா? அப்போது அவனிடம் ஜீவன் இல்லாமல் போகவில்லை.

மற்றுமோர் உதாரணம்உண்டு. நமது சாரீரத்தில் நகம்கேசங் கள் சேதிக்கும்போது அதனல் துன்பம் நேரிடுவதில்லை. நககேசங் களும்ஸ்தாவரங்கள் போலவேஉற்பத்தியாகி நாசம் அடைகின்றன அதேபோல் ஸ்தாவரங்களின் ஸ்திதியாகும். ஜீவஜந்துக்கள் அது போலன்று. மனிதர்களிடம் எவ்விதம் இந்தியர்யாதிஸுகங்கள் உண்டோ, அது போலவே அவைகளுக்கும் உண்டு. அவைகளுக்கும் ரதிக்ரீடாஸுகம் புத்ரவாத்ஸல்யம், மரணபீதி, ஸுகாபிலாஷ முதலானவைகளுண்டு. இதுதவிர ஜந்துக்கள் மனிதர்கள் போலவே ஸத்ரீ புருஷசம்மந்தமாக உத்பத்தி ஆகின்றன. ஸ்தாவ ரங்கள் போல் மற்ற உயினங்களுக்கு பீஜ உற்பத்தியில்லை ஸ்தாவர வர்க்கங்கள் முக்யமாக சூர்ய சக்தியினல் விர்த்தியாகின்றன. இதர சஹாயங்கள் (பூமி ஜலம் வாய்வு ஸ்வல்பமாக உண்டு) சூர்யனிடம் இருக்கும் சக்தி ஸ்தாவர வர்க்கங்களிடம் அதிகமாக இருக்கும் கார ணத்தால் அவைகளை புஜிப்பதால் அதிகமான ஞானமுண்டாகிறது,

ப்படி என்றால் சூர்யன் தாமஸ குணங்களை நாசம் செய்வது போல் சாகபக்ஷணத்தினால் உண்டாகும் சக்தி அஞ்ஞானத்தையும் தமோ குணத்தையும் நாசமாகும்படி செய்யும். இதுவும் தவிர ஸ்தாவர ஜீவ சக்திக்கும் மற்ற ஜீவசக்திகளுக்கும் ஓர் அணுவுக்கும் மலைக்கும் உள்ள பேதம் உண்டு. ஒரு விருக்ஷத்தின் கிளைகளை லக்ஷக் கணக்காக சேதித்து நடுவதால் அவைகளெல்லாம் விர்த்தி அடைகின்றன. அதே போல் வேர்களையும் நடுவதால் அவைகள் பெரிய விருக்ஷங்க ளாகின்றன. அதுபோது ஜீவஜந்துக்களின் கர சரணங்களைத் துண்டித்தால் அவைகளிலிருந்து மிருகங்கள் விர்த்தி அடையுமா ஆகாது.

ப்ராணி ஹிம்ஸாஹாரத்தால் உண்டாகும் பாபம் இப்போது காணப்படாவிட்டாலும் அது மற்றோர்பெரியபாபத்துக்குக் காரண மாகும். எப்படி என்றால் ஒருவன் எந்த வஸ்துவை புஜிக்கின் றானோ அதனிடமிருக்கும் ஸாரமானது ரத்தமாகி ஒரு சரீரமாக உண்டாகும். அந்த சரீரதனை அநுசரித்து ஸத்வ ரஜஸ்தமோ குணங்களோடு மனம் வேலை செய்கிறது. ஸ்த்வகுணத்தால் ஞானமும், ரஜோ குணத்தால் கர்மமும், தமோகுணத்தால் அஞ்ஞானமும் உண்டாகும். இதற்கு ஒரு த்ருஷ்டாந்தம் சொல்லுகிறேன். மஹாரண்யத்தில் வசிக்கும் யானையைப் டித்து இரண்டு மூன்று வருடங்கள் அதற்கு புத்தி கற்பித்தத பிறகு மஹா பலமுடைய யானை, மனிதனுக்கு வசப்பட்ட பிறகு அவன் சொல்லும் பணிகளைச் செய்கின்றது. அதுபோல் ஒரு சின்ன ஜந்துவான புலியை நம் ஸ்வாதீனம் செய்ய முடியுமா? ஆனால் இதனிடமிருக்கும் ரகஸ்யம் என்ன வென்றால் யானை பெரிய ஜந்துவாக இருந்த போதிலும், ஸாத்வீகமான ஆஹாரம் புஜிப்ப தால் ஸாத்வீக புத்தியும் மஹா சாந்த குணமும் உண்டாகின்றன. வ்யாக்ரமானது, க்ரூரமான மாம்ஸபக்ஷணம் புஜிப்பதால், அதன் துர்க்குணம் எப்போதும் மாறுவதில்லை, ஆகையால் மோக்ஷம் அடைவதற்கு ஸாந்த குணமே இருக்க வேண்டும். எனவே மும்முக்ஷுகள். முக்யமாக ஸாத்வீக ஆஹாரம் புஜிக்க வேணும். தவறினால் மனஸு எவ்விதமும் ஸ்வாதீனம் ஆவதில்லை. இதுவே மிகப் பெரிய விஷயம்.

இதுமட்டுமல்ல மாம்ஸம் ஸ்த்ரீ புருஷர்களுடைய ஸுக்ல ஸ்ரோணிதங்களால் உத்பத்தி ஆனது. அந்த காரணத்தினால் அது மிகவும் அஸுத்த மானதாகும். இதனுடைய ரகஸ்யம் பற்றிச்

சிறிது கூறுகிறேன். ஸ்ரத்தையுடன் கேட்பாயாக. ஒரு ஸ்திரீ ருது வான நான்கு நாள் வரையில் அவளைத் தொட்டால் ஸ்னானம் செய்ய வேணுமென்பார்கள். அதற்குக் காரணம் என்னவென்றால் ருது காலத்தில் ஸ்ரவிக்கும் ரத்தமானது மஹாதோஷ மென்பார் கள். அவளைத் தொட்டவர்கள் கூட ஸ்னானம் செய்யும் தோஷ மிருப்பதால் அந்த ரத்தமானதை பானம் செய்பவர் அசுத்தமா? இல்லையா? அவர்களை என்னவென்று கூறுவது? ஆனால், ருது காலத்திலுதிக்கும் ரத்தமானது புருஷனுடைய ரேதஸ்ஸில் கலந்து பிண்டோத்பத்தி ஆகின்றது. இந்த விதி மனிதருக்கு உண்டாவது போல் மற்ற ஜந்துக்களுக்கும் உண்டு. இது ஸாதாரணமாக கோவு எருமை ஆடு முதலான உயிரிங் ளுக்கும், கர்ப்ப காலத்தில் யோநித்வாரத்தில் வெளிப் புறமாகக் காணப்படும் இந்த காரணத்தால் மனதைக் கெடுக்கும் ஆகாரம் புஜிப்பவருக்கு தியானத்தில் மனம் நிற்பதில்லை.

## இராக்ஷஸ ஆஹாரம் கூறுவது

இதைக் கொண்டே மது மாம்ஸாதிகள் புஜிப்பவர்கள் ராஜ யோகிகள் ஆகார் என்று கூறி ராக்ஷஸ போக்தா என பெயரிடப் பட்டது. இராக்ஷஸர்களும், இராவண கும்பகர்ணாதிகளும் மஹா தவசிகளாவார்கள். அவர்கள் அணி மாத்யஷ்ட சித்திகள் அடைந் தவர்களே. அவர்கள் மூன்று உலகங்களையும் ஜெயித்தவர்களாவார் கள். நவகோடி நவகோடி சிவாலயங்களை ப்ரதிஷ்டம் அடைந்து பூஜித்தவரே இப்படி இருப்பவரை ஸ்ரீராமதாரக பரப்ரஹ்ம கருணாமூர்த்தி எதற்கு வஞ்சனையோடு விநாசம் செய்ய வேண்டும்? இந்த விஷயம் பற்றிச் சிறிது சிந்திப்போம். பரம பக்தனான ஆஞ்சநேயர் இலங்கைக்குப் போய் வந்து, இலங்கையின் வைப வத்தை ஸ்ரீராமபிரானிடத்து விண்ணப்பித்தார். எனவே, இராக்ஷ ஸர் ஒவ்வொரு வீட்டிலும் நடக்கும் வேத பாராயணம் ஹோமம் சிவார்ச்சனை தியான ஜபங்களை அளவிட்டுக் கூற முடியாது. அவர்க ளெல்லோரும் பரம சிவ பக்தர்கள் என்று அவர்களின் ப்ரபாவம் கூறினார். அப்போது இராமசந்த்ரப்ரபு இப்படியிருக்கும் பரம பக்தர்களை நான் எப்படி ஸம்ஹரிப்பேன் என்று தனுசை கீழே வீசி எறிந்து விட்டார். பக்தவத்ஸலனாகிய இராமசந்த்ரனுடைய அபார காருண்ய குணத்தைப் பார்த்து ஸுக்ரீவன் எந்தவிதமோ இராக்ஷஸ ஸம்ஹாரம் ஆகவேணும் என்னும் மனோபாவத்தால் ஆஞ்சநேயர் முகத்தைப் பார்த்தார். அப்போது புத்திமான் ஆகிய

ஆஞ்சநேயர் சுக்ரீவ மஹாராஜர் நோக்கத்தையும் அறிந்தார். ஸ்ரீராமபிரான் தயாமூர்த்தி என்ற நோக்கத்தையும் அறிந்து ராக்ஷஸர்களின் ஆஹார விஷயம் பற்றி உடனே கூறினர். ஓ மஹாப்ரபு அவர்கள் ஜிவகாருண்யமற்றவர்கள். மிக ஸீலமற்று ப்ராணி ஹிம்சை செய்து புஜிப்பவர்கள் அதர்மங்கள் செய்பவ ரென்று சொன்ன உடனே துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலகனை ஸ்ரீராமமூர்த்தி ஆஹா! ப்ராணி ஹிம்ஸகர்களான துஷ்டர்களை கூர்மையான அஸ்திரங்களைக் கொண்டு அழிக்கிறேன் என்று கீழே எறிந்த தநுசை கரத்தில் ஏந்தி ஸந்தோஷமடைந்தார்.

இந்த விஷயம் பற்றி இங்கு எதற்காக ஆரம்பித்தேன் என்ருல் இப்போதுள்ள ஸாரமற்ற வேதாந்திகளில் சிலர் பரமசிவன் லிங்கத்தை பக்தியோடு கண்டத்தில் தரித்தவர்களும், வேறு சிலர் யந்த்ரங்களை பூஜிக்கின்றவர்களும், இன்னும் சிலர் ஜடா முண்டன காஷாயபஸ்ம ருத்ராக்ஷ தாரிகளா இருந்த போதிலும் ஜீவகா ருண்யம் ஒன்று மட்டும் இல்லாத காரணத்தால் ஜெகதீசுவர னுடைய கருணு கடாக்ஷம் அடைவதற்கு இடமில்லை. இவர்கள் நிச்சயமாக கோர சம்ஸாரத்தில் விழுவார்கள். யமகிங்கரர்கள் இவர்களை கொடுமைப் படுத்துவார்கள். இவர்கள் காமராகாதி களே தவிர மும்முக்ஷுர்களாகார். இவர்கள் துன்ப மடைபவர்களே ஆவார்கள். இவர்கள் ஞானிகளையும் கெடுப்பவராவர்கள் எப்படி என்ருல் காலரா வியாதி வந்தவர்களைத் தொட்டவர்கள் இருவரும் மரணமடைவதுபோல் ஆகும். ஆகையால் ஞானிகள் அறிவிலிகளிடம் வரும்போது மிகஜாக்ரதையாக இருக்கவேண்டும். இவர்களில் வேதாந்திகள் போல் பேச்சைக் கற்றவர்களாக இருக்க லாம். இவர்கள் சாஸ்த்ர அப்யாசங்களில்லாத வைராக்ய பக்தியில் ஈடுபட்ட பரம ஸன்மார்க்க புண்யாத்மாக்களிடம் சென்று ஸார மற்ற வேதாந்த குதர்க்க விவாதங்கள் பேசி, அவர்களின் தியானத் தையும் கெடுப்பார்கள். இவர்கள் விவாதம் என்னவென்ருல் ஜபம் தவம் தியானம் ஏன்? அதனுல் பலன் என்ன? யார் சொன்னது? எந்த சாஸ்திரத்திலிருக்கிறது? ஏன் நாம் விவாஹம் செய்யக் கூடாது? மது மாம்ஸாதிகள் எதற்காக கடவுள் உண்டு பண்ணினுர்? நாம் புசிப்பதற்கல்லவா? நாங்கள் ஞானிகளல்லவா? நாங்கள் புசிப்பதையும் பார்க்க வில்லையா? என்னைப் போன்றவருக்கு மோக்ஷம் வராதா? எங்கள் குரு கூட மாம்சம் புசிக்கிருர் கண்ணப்பர். வால்மீகி முதலானேர் முதலில் துராசாரமாக இருந்தார்களல்லவா? அவர்கள் மோக்ஷ

மடையவில்லையா. இது போல் அநேக விதங்களாகவும் கூறி ஞானிகளைக் கெடுத்து சாதுதூஷணம் செய்து சிலர் பொருளை அபகரிப்பதுமாக இருப்பதால் இதைப் பற்றி மனவருத்தமாகப் பேசுகிறேன்.

## பாகவத வேஷம்

''நொஸலு பக்துடைன நோரு தோடேலய்யே
மனஸு பூதமுவலே மலயுகானி
ஶிவுனிகனியேய நன்னசிக்கெளடகாதகோ
விஶ்வதாபிராம விநுரவேமா''

—வேமன

நெற்றியில் பரமபக்தனைப் போல் திருநாமமும் விபூதியும் தரித்திருந்த போதிலும் வாய் மட்டும் ஓநாய் போல் ஜந்துக்களை தின்பதற்கு வாய் திறந்து கொண்டிருப்பது போல் மனிதன் பிசாசு போல் நீசக்ருதயங்களில் ஸர்வ காலமும் திரிகின்றவன் கடவுளை அறிந்தவனென்பது வெட்கமில்லையா? என்று வேமனயோகி பகர்ந்தார்.

## (கேளுபி நிர்முதா நாரீ)

''ஜாநாமி நரகம் நாரீம்
த்ருவம் ஜாநாமி பந்தனம்''

ஓ ஸ்வாமி ஸ்த்ரீகள் கோர நரகம் என்றும், மோக்ஷத்துக்கு பந்தமென்றும். அப்படிப்பட்டவளை யாரால் நிர்மிக்கப்பட்டதென்று பகர்ந்தீர். ஸ்த்ரீயே ஸமஸ்த ப்ராணிகளுக்கு பந்தகமானவள் என்று சொல்வதால் வாழ்க்கையில் ஸ்த்ரீ சாங்கித்யம் இல்லாவதர்களே பூலோகத்தில் இல்லையே. அப்படிப்பட்ட பந்தத்தில் இருந்து விடுதலை அடைந்து ஸ்த்ரீ புருஷர்கள் உஜ்ஜீவிப்பது எப்படி என்பதைப் பற்றி அடியேனுக்கு விளக்கிக் கூறவேண்டும்.

## க்ருஹஸ்த தர்மம் கூறுவது

பதில்: அப்பா நான் க்ருஹஸ்தாஸ்ரமத்தை எந்த இடத்திலும் தூஷிக்கவில்லை. எப்போதும் ஸ்த்ரீகளை நான் நிந்திப்பதில்லை. நான் ஸ்த்ரீகளை நிந்திப்பதாக நீ கருதுவது எனது உள் கருத்தை அறியாத் தன்மையாகுமே தவிர வேறில்லை. ஏனென்றால் பகவத் பக்தியில் ஸ்த்ரீகளுக்கும் சமஉரிமை உண்டு, என்று கீதாசாரியர் கூறியுள்ளார் த்ரௌபதியிடம் தைவபக்தி இல்லையா? ஆண்டாளும்

மையாரிடம் தைவ பக்தி இல்லையா? சாவித்ரி கடவுள் அனுக்ரஹம் பெறவில்லையா? தமயந்தி இடம் கடவுள் பக்தி இல்லையா? காட்டில் வசிக்கும் சபரி இடம் கடவுள் பக்தி பூர்ணமாக இருந்ததல்லவா? அவ்வையாரும் பெண்மணி தானே? சக்குபாய், மீராபாய் பெண்கள் தானே? இனி புருஷர்களைப் பற்றிக் கூறுகிறேன். கவனமாக கேட்பாயாக. அர்ஜுனன். விபீஷணன். வியாஸர். கௌதமர். சில ஆழ்வாராதிகள் வால்மீகி முதலானோர்கள் குடும்பவாழ்க்கையில் ஈடுபட்டவர்களென்று புராணங்களின் வாயிலாக நான் அறிந்திருக்கிறேன். அப்படிப்பட்ட ஞானமூர்த்திகளாகிய புண்யாத்மாக்களான ஸ்திரி புருஷர்களை நான் எப்போதும் நிந்தித்து பேசுவதில்லை என்று புரிந்து கொள்ளவும். ஆனால் ஒரு விஷயம். பார்ய பர்த்தாக்கள், காமோத்ரேகம் அடைந்து ஒற்றுமையாக வாழ்க்கை நடத்திக் வந்தவர்கள் முதுமைக் காலத்தில் காமோத்ரேகம் குறைந்த போது ஒருவரை ஒருவர் தூற்றிப் பேசித் துன்பம் அடையாமல் நமது வாழ்க்கை நாளெல்லாம் சிற்றின்பத்தில் பகவான் திருநாமங்கள் சிறிதும் சிந்திக்கவில்லையே. நமக்கு மரணம் காலம் நெருங்கிவிட்டது அல்லவா இப்போதாவது, பகவான் பரம பவித்ரமான திருநாமங்களை வாயினுல் பாடி மனத்தினுல் சிந்தித்து. பரகதி அடையலாம் என்று எண்ணி ஆத்மானுஷ்டானங்கள் மனைவி அநுஷ்டிக்கின்ற போது பர்த்தா உதவி புரிய வேண்டும் பர்த்தா அநுஷ்டிக்கிற போது மனைவி உதவி செய்ய வேண்டும். இது போன்ற புண்யாத்மாக்களை நான் எப்போதும் நிந்திப்பதில்லை. ஸ்த்ரீகளை நிந்திப்பது என் தாயை நிந்திப்பதாகும்.

## பர்த்தா பார்யா

ஒரு சிலர் வாழ்நாள் முழுதும் காம பரவசர்களாக மரண காலம் வரையில் எந்த ஸ்தானத்தில் பால் குடித்தானோ அவைகளைப் பார்த்து பார்த்து மோக மடைந்தவர்களாகி அவன் எந்த த்வாரத்தில் பிறந்தானோ, அதே த்வாரத்தை விரும்பி மதிமயங்கி அறிவீனர்களாகி கிடைத்தவர்கள் முதுமை காலத்தில் சிற்றின்பம் செயல்படாத போதாகிலும் ஆத்மா உஜ்ஜீவிக்க வேண்டி ''மானேய் கண்மடவார் மயக்கிற்பட்டு மாநிலத்து, நானே நாநாவித நரகம் புகும் பாவம் செய்தேன்'' என்று கடவுளிடம் விண்ணப்பம் செய்யாமலும், ஓ நரக நாசனுகிய நாராயணு'' பெண்டிரால் சுகங்களிப்பான் பெரியதோர் இடும்பை பூண்டு என்றும் பகவானிடம் ப்ரபக்தி செய்யாதும். ''மறம் சுவர் மதி

ளெடுத்து மறுமைக்கே வெறுமை பூண்டு!' என்றும் நாராயணனை சரணமடையாமல் பார்யா-பர்த்தா என்ற உடல் தொடர்பான ஆசை என்னும் பாசமற்றவர்களாகி ஒருவரை யொருவர் துர் பாஷைகளால் பேசி,இகமே அகமாக அநுபவிக்கும் மஹாபாவிகளை ''பூமிபாரங்கள்'' என்று கூறுவார்கள். ஆகவே அது போன்றவர் களை ''கேநாபி நிர்மிதாநாரீ, என்றும், ''ஜாஹுமி நரகம் நாரீம் த்ருவம் ஜாஹுமி பந்தனம்' என்றும் கூறினேன்.

''ஸந்துஷ்டோ பார்யா பர்தா பர்த்ரா
பார்யா ததைவச
தஸ்மின் நேவ குலேநித்யம் கல்யாணம்
தத்ரவை த்ருவம்'

மனைவியிடம் புருஷனும் புருஷனிடம் மனைவியும். ஏகமனது டையவராய் அந்தரங்கப் பிரியமாக ஸந்துஷ்டர்காளகி ஸத்ய நிஷ்டர்களாக நடத்தும் குடும்பம் சதா மங்களகரமாக இருக்கும். வருஷா காலத்தில் எல்லா இடத்திலிருக்கும் ஜலமானது பள்ள மடுகுகளில் சேருவது போல், ஸாத்வீக குணமுள்ள வீடுகளில் அநேக விதங்களான பெருமையும் உண்டாகுமென்று மநுஸ்ம்ருதி கூறுகிறது, (3—60)

''மாம்ச யோஃவ்யபிசாரேண பக்தி
யோகேந ஸேவதே
ஸகுணன் ஸமதீத்யைதரந்
ப்ரஹம பூயாய கல்பதே''

யார் பரமாத்மவான பகவானை அநந்ய பக்தியோடு ஸேவிப் பானே, அவன் ஸத்வ, ரஜஸ்தமோ குணங்களையும் ப்ரஹ்ம, க்ஷத்திர்ய வைஸ்ய சூத்ராதி வர்ணங்களையும் ப்ரஹ்மா சர்ய, க்ருஹஸ்த, வாநப்ரஸ்த ஸந்யாஸம் என்னும் ஆஸ்ரமங்கள் முதலானவைகளையும் கடந்தவனாகி சுத்தப்ரஹ்மத்தைஅடைந்து பரிசுத்தனாகி நித்யமுத்தனுவான் என்று ஸ்ரீகிருஷ்ண வசனம் கூறுகிறது ஆனால் பத்தி முக்யம் என்பதாகும்.

**ப்ரஹதர்ரணிய உபநிஷத்து137.6 அத். 4வது பிரம்மணம் 5 வது வாக்கியம்**

''யதாகாரி யதாசாரி ததாபவதி; ஸாதுகாரி
ஸாதுர்யவதி பாபகாரி பாபோபவதி
புண்ய: புண்யேநகர்மணுபவதி பாப; பபோந

### பொழிப்புரை

யாரெப்படிச் செய்கிருரோ, யாரெப்படி யாசரிக்கிருரோ அவரப்படியாகிருர்; நல்ல காரியாங்களைச் செய்கிறவர் நல்லவராகிருர். பாபகார்யங்களை செய்கிறவன் பாபியாகிருன். கரும காரியங்களைச் செய்வதனுல் ஆத்மா பரிசுத்தமாகிறது; பாப கருமங்களைச் செய்வதனுல் ஆத்மா பாபமுள்ளதாகின்றது.

### விசேஷஉரை

இவ்வுலகத்தில் எக்குலத்தில் பிறந்து எவராக விருக்கினும் அவரவர்கள் ஆசரிக்கிறபடியும் அவரவர்கள் செய்கிறபடியும் ஆகின்றனர். பாவ எண்ணங்களைக் கொண்டவர்களும் பாவிகளாகிருர்கள் தருமகாரியத்தையெண்ணும் தோறும் தருமகாரியத்தைச் செய்யுந்தோறும் ஆத்மா பரிசுத்த நிலையை அடைகின்றது. ஆகவே பாப கருமத்தை விடுத்து ஆத்மாவைப் பரிசுத்தப்படுத்திக் கொண்டு புண்ணிய கருமத்தை அநுஷ்டித்தும் பரமாத்மாவுடன் வாழ்தல் வேண்டும்.

### (138) கடோபநிஷத்து 3வது வல்லி 5வது வாக்யம்

‘‘யஸ்த்வ விஜ்ஞானவான் பவத்யயுக்தேந
மதஸதா; தஸ்யேந்த்ரியாணி வச்யாநி
துஷ்டாச்வா இவஸாரதே:’’

### பொழிப்புரை

யார் அவிவேகியோ, எப்பொழுதும் அடங்காதமனதுடையவனே அவனுடைய இந்திரியங்கள் தேர்ப்பாகனது துஷ்டக்குதிரைகளைப்போல் வசப்படாதவை.

### விசேஷவுரை

ஜீவாத்மாவாகிய இராஜன் வசித்துவரும் ஸ்தூலதேகம் பஞ்சபூதங்களால் செய்யப்பட்ட ஒரு ரதமாம்; இந்த ரதத்துக்கு மனமென்னும் குதிரை கட்டப்பட்டிருக்கிறது. அக்குதிரையின் கடிவாளத்தை அவிவேகி என்னும் சாரதியிடம் கொடுத்தால்; அந்த அவிவேகியென்னும் சாரதி அந்த தேக மென்னும் ரதத்தையும் அதிலிருக்கும் ஜீவாத்துமா என்னும் ராஜனையும் பஞ்சேந்திரியங்களென்னும் படுகுழிகளில்தள்ளி தத்தளிக்கச் செய்துவிடுவான்; ஆனுல் புத்தி என்னும் சாரதியிடம் கடிவாளத்

தைக் கொடுத்தால் ரதம் சரியாகச் செல்லும். அதைப் போல; மனம் தன் வசப்பட்டிராவிடின் அது ஆத்மாவை தருமமார்க்கத்தை விட்டு நிர்ப்பாக்யமான வேறு கெட்ட மார்க்கத்தில் செலுத்திக் கொண்டு போய் பாபமென்னும் முள் நிறைந்த காட்டில் தள்ளி, முடியாத வேதனைப்படும்படி செய்து விடும்; ஆனதால், எவ்விதத்திலும் மனமும் இந்திரியங் களும் புத்தி விருத்தி அடைவதற்கு வசப்பட்டும் தரும நியமனத் திற்குப் புறம்பாகாமலும் இருக்கவேண்டும்.

## (139) கடோபநிஷத்து 3.13ல்,

''யச்சேத்வாங்மன ஸிப்ராஜ்ஞஸ்தத்
யச்சேத ஞான ஆத்மனி; ஞானமாத்மனி மஹதிநி
யச்சேத்தத் யச்சே சாஸ்த ஆத்மனி''

விவேகியானவன் தன் வாக்கை மனதிலும், மனதைப் புத்தி யிலும் புத்தியை ஆத்மாவிலும் ஆத்மாவை பரமாத்மாவிலும் அடக்க வேண்டும். மனதின் கண்ணுள்ளசிந்தையால் வாக்கையடக் கல் வேண்டும். புத்தியின் கண்ணுள்ள விசாரணையினுல் மனதின் சிந்தையை யடக்கவேண்டும். புத்தியின் விசாரணையைப் புறத் தினின்று தன் ஆத்மாவினிடம் நிறுத்துதல் வேண்டும். இதுவே யோக சாதனையின் கிரமம்.

''நஹிகஸ்சித் க்ஷணமபி ஜாது
திஷ்டத்யகர்மக்ருத்து
கார்யதே ஹ்யவச: கர்மஸர்வ:
ப்ரக்ருதி ஜைர்குணை:

யாரும் ஒரு கணப் பொழுதேனும் செயலாற்றுதிருப்பதில்லை ஏனென்றுல் பிரகிருதியினின்று உதித்த குணங்களால் ஒவ்வொரு உயிரும் தன்வயமின்றிக் கர்மம் செய்விக்கப்படுகின்றது.

சத்வம் ரஜஸ்தாமஸ் ஆகிய முக்குணமயமாயிருப்பதுப்ரகிருதி. அது கர்மஸ் சொருபம் ஆதலால் அதில் கட்டுண்டு கிடப்பவர் கள் கர்மம் செய்தே ஆகவேண்டும். உண்பது உறங்குவது சுவாசிப் பது, ஹிருதயம் அடிப்பது ஆகிய எல்லாம் கர்மம். இயற்கையில் இயங்காதிருப்பது எது? அணுமுதல் அண்டம் வரையில் எல்லாம் அசைகின்றன. அதில் பிணிக்கப்பட்டுள்ள உயிருக்கு கர்மத்தை விடும் சுதந்திரம் கிடையாது.

வைத்திய சாலைக்குள் நோயாளியாக பதிவுசெய்யப் பட்டவன் நோய் தீரும் முன்பு அதைவிட்டுப் போக அனுமதிக்கமாட்டார். நோய் நீங்கிய பின் வைத்திய சாலைக்குள் வேலை இல்லை. அங்ஙனம் அக்ஞானம் நோய்க்கு உட்ப்பட்டவர்கள் பிரகிருதி என்ற வைத்திய சாலைக்குள் இருந்தே ஆகவேண்டும். அப்பொழுது கர்மம் செய்தல் என்ற சிகிச்சைக்கு அவர்கள் உட்பட்டே ஆகவேண்டும்.

ஸந்யா ஸஸ்து மஹா பாஹோ
துःகமாப்து மயோகத:
யோகயுக்தோ முனிர் ப்ரஹ்ம
நசிரேணாதிகச்சதி'' |

**பகவான் உவாச**

அர்ஜுனா, கர்மயோகம் செய்யாது கர்ம ஸந்யாஸம் பெறுதல் எளிதன்று. கர்மயோகம் செய்யும் முனிவனே விரைவில் ப்ரம மத்தை அடைகிறான்,

அர்ஜுனா, அதற்கு ஓர் உதாரணம் கூறுகிறேன், காய் ஒன்று மரத்தில் முறையாக ஒட்டி இருந்தால் மரத்திலிருந்து பெற வேண்டிய சாரத்தையும் வலிவையும் பெற்றுப் பின் தானாகவே மரத்தைவிட்டுப் பிரிந்து பழமாக விழுகிறது. அதேபோல் யோகி யானவன் முறையாக கர்மயோகம் செய்வதால் இந்த சரீரத் தினின்று (ப்ரதிருதியினின்று) பெற வேண்டிய அனுபவங்களைப் பெற்று அதனால் ஞான முதிர்ச்சி அடைந்து ப்ரஹ்ம நிஷ்டனா கிறான். அதுவே முறையான கர்ம சன்யாசமாகிறது. ஆகவே. எல்லோரும் இந்த சரீரம் இருக்கும் வரையில் தேஹேந்திர்யங்களை கொண்டு தர்மாதர்மங்களை அறிந்து கர்மயோகம்செய்ய வேண்டும்.

''யோகயுக்தோ விசுத்தாத்மா விஜிதாத்மா
ஜிதேந்திரிய: |
ஸர்வ பூதாத்ம பூதாத்மா குர்வன்னபி
ந லிப்யதே ||

கர்மயோக நிஷ்டன் மனந்தெளிந்தவன் உடலை வென்றவன். இந்தியர்களை அடக்கியவன் தனதாத்மாவைப்போல் உயிர்களனைத் தையும் காண்பான். அவன் கர்மம் செய்யினும் கர்மத்தில் கட்டுண் பதில்லை.

ஜீவர்களெல்லாம் கர்மத்தில் ஈபடுகின்றவளவு அதில் கட்டுண்டு கிழமை அடைகின்றனர் ஆனுல் கர்மயோகி கர்மம் செய்கின்ற வளவு அதினின்று விடுதலேயடைகின்றுன். நிஷ்காமியமாகக் கர்மம் செய்யப்படுவதால் நிராசை மனத்தெளிவை உண்டுபண்ணு கிறது. ஆசை அகலுகின்றவளவு உடலும் இந்திர்யங்களும் வசப் படுகின்றன. நிராசை நாளடைவில் ஞானமாக வடிவெடுக்கிறது. எல்லா உயிர்க்கும் அந்தர்யாமியாயிருப்பவர் பரமாத்மா ஒருவரே என்ற அனுபவம் அத்தகைய ஞானத்தின் பயனும் இங்ஙனம் கர்ம பந்தத்தை நீக்குவதால் கர்மயோகமே கர்ம ஸந்யாஸமாகப் பரிணமிக்கிறது.

ஒருவனுக்கு எவ்வளவு காலம் திவ்ய சக்ஷுஸ் உண்டாக வில்லேயோ. எவ்வளவு காலம் பொற்குளிகையால் பித்தளே பொன்னுக மாறவில்லேயோ அவ்வளவு காலம் வரையில் "நான் தான் கர்த்தா" என்ற மதிமயக்கம் இருக்கும். அதுவரையில் இந்த நற்காரியத்தை நான் செய்தேன்; அந்த கெட்ட காரியத்தை நான் செய்தேன்; என்ற வித்தியாச மனேபாவம் இருந்து தீரும். இந்த வேறுபாடுற்ற மனேபாவந்தான் சம்ஸாரம் நீடித்திருப்பதற்குக் காரணமாகிய மாயை. நல்வழியில் செலுத்துவதும் ஸத்வகுணம் மேலோங்கி நிற்பதுமாகிய. அவித்யாமாயையில் சரணம் புகுந் தாலோ ஒருவன் ஈசுவரனே அடைவான். ஈசுவரனே நேரில் கண்டு அவருடைய ஸ்வரூபத்தை அறிபவன்தான் உண்மையான முக்தன். அவன் மாயையாகிய ஸமுத்திரத்தை தாண்டுபவன். ஈசுவரனே கர்த்தா. தான் கர்த்தா அல்லன் என்று உணர்பவன் சரீரத்தோடு இருப்பினும் அவன் முக்தனே.

"தேஹோ<sup></sup>ऽயம் மாநுஷோ ஜந்தோ:
பஹுக்ர்மைகஸாதனம்
ஸதா ஸத்கர்ம ஸேவேத துஷ்கர்ம ஸததம்
த்யஜேத்"

எண்பத்தி நான்கு லக்ஷம் ப்ராணி கோடிகளில் இந்த மானவ ஜன்மம் அநேக நற்றவங்களினுல் கிடைத்திருக்கிறது. இந்த ஜன்மத்தில் தர்மாதர்மங்களே அறிந்து கர்மங்களேச் செய்வதற்கு நமக்கு அறிவையும் அதற்குச் சாதனமாக கரங்களேயும் கடவுளே ப்ரணமம் செய்வதற்கு சிரத்தையும் அர்ச்சா மூர்த்திகள் எழுந் தருளி இருக்கும் ஆலயங்களேத் தேடிச் செல்வதற்கு கால்களேயும், அஞ்சலி பண்ணுவதற்கு அஸ்தங்களேயும் திருநாமம் சொல்

வதற்கு வாக்கையும் பகவான் பாத துளசியின் நறுமணத்தை ஆர்ராணிப்பதற்கு நாசியையும் நல்லோர் கதாகாலக்ஷேபங்களைக் கேட்டதற்கு செவிகளையும் பகவான் திருவுருவங்களைப் பார்ப்பதற்கு திவ்ய நேத்திரங்களையும் பகவான் நமக்கு அளித்துள்ளான். திருமாமகள் கேள்வன் திருநாமங்களை நவிலுவதற்கு நாவும் அமைந்துள்ளது.

''எண்ணக் கண்ட விரல்களால்
இறைப்பொழுது மெண்ணகிலாது போய்,
உண்ணக் கண்ட தம்மூத்தவாய்க்கு;
கவள முந்துகின்றார்களே''

திருமால் திருநாமங்களை ஒன்று இரண்டு என்று எண்ணுகைக் காகப் படைக்கப்பட்ட விரல்களாலே (அந்தத் திரு நாமங்களை) க்ஷணக்காலமும் எண்ணமாட்டாமல் புறம்பே சென்று (சரீர போஷணார்த்தமாக) உண்ணு நின்ற தங்களுடைய அசுத்தமான வாயிலே சோற்றுத் திரள்களை அவ்விரல்களினால் தள்ளா நின்றார் களே இதென்ன கொடுமை. தோழர்களே! அரசாங்க முத்திரை யிட்டதாள்கள் எப்படி எல்லாயிடங்களிலும் தகுதி பெறுகிதோ, அதேபோல் மானிடசரீரத்தில் புஜங்களிலும் ப்ருமத்தியமென்னும் நெற்றியிலும் பகவான் திருநாமச் சின்னங்கள் இடுவது பக்த கோடி மக்களில் பாகவத கோஷ்டிகளுக்குத் தகுதிபெற்றவர் களென்றும் காட்டக்கூடிய சின்னங்களாகும்.

''ப்ராணாயதாऽऽத்மநோऽபீஷ்டோ பூதானாமபிதேததா
ஆத்மௌபம்யேந பூதானாம் தயாம்குர்வன் திசாதவ:

ஒருவனுக்கு எப்படித் தனது ப்ராணத்தின் மீது அதிகமாகப் ப்ரீதி இருக்கிறதோ, அதேபோல் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் அதனதன் ப்ராணத்தின் மீது அதிக ப்ரீதி உண்டாகும் ஆகையினால் ஞானிகள் தன்னைப் போல் அனைத்து ப்ராணிகளிடமும் கருணை காட்டுவார்கள்.

## மாம்சபக்ஷர்களும் மதுபானர்களும் நிரக்ஷரகுக்ஷிகளும் மூர்க்கர்களும் பற்றிய விளக்கம்

''மாம்ஸபக்ஷ: ஸுரா பானை மூர்கைச்சா
க்ஷரவர்ஜிதை
பசுபி: புருஷா காரைர்பாராக்ராம்தாऽஸதி மேதிநி''

மாம்ஸபக்ஷர்களாகி சுராபான ரதிக்ரீடர்களாகி நிரக்ஷரக்குக்ஷியர்களாகவும் மூர்க்கர்களாகவும் மானவாகாரமாக உருவெடுத்திருக்கும் பசுக்களை சுமப்பதால் பூமிதேவி பாரத்தைத் தாங்க மாட்டாமல் வருத்தப்படுகின்றேன் என்பாள் ''பூமி பாரங்கள் உண்ணுஞ் சோற்றினை வாங்கி புல்லைத்தின்மினே'' என்பது போல், பூமிக்கு சுமையாயிருப்பவர்களுமான பாவிகள் உண்கிற சோற்றைப் பிடுங்கி விட்டு (எறிந்து) (அறிவற்ற பசுக்களுக்கு உணவான) புல்லைக் கொண்டு அவர்கள்(வயிற்றைதூர்த்து விடுங்கள்)என்பது உத்தம மானவார்த்தையாகும். அநேக நற்றவங்களால் மானிடப் பிறவி எடுத்தும்,அறிவற்ற பசுவுக்குச் சமானமானவனாக ஏன் திரிய வேண்டும்? அதன் காரணம் யாது? என்றால் அவனுக்குப் பூர்வ ஜன்ம அப்யரசம் விலகாமல் தொடர்ந்து வருவதாகும் என்று அறியவும்.

''ப்ராணி ஹிம்ஸாபராணும்து கல்பகோடி சதம்முனே
தத்ரதைல கடாஹேஷு காடம் பத்வா பதத்வயம்''

ஓ பக்தர்களே! ப்ராணிகளை ஹிம்சை செய்கின்றவர்களை கல்ப கோடி வருடங்கள் வரையில் யமலோகத்தில் இமகிங்கரர்கள் எண்ணெய் நன்றாகக் காச்சின கடாயில் மாம்சபக்ஷர்களின் இரண்டு பாதங்களையும் நன்றாகக் கட்டி எண்ணெய்ச் சட்டியில் தள்ளுவார்கள். (எதனால் அவர்களை மட்டும் அவ்விதம் செய்வார்கள்? என்ற கேள்வி எழுமிடத்தில் பதில் கூறுகிறார். ஓ பக்தர்களே! பூலோகத்தில் உயிர்களைவதை செய்வதை விடஅடாதபாபமில்லை.மாம்பட்சர்களைவிடப் பாவிகள் இல்லை என்று பாபத்திற்கேற்ற கடினமான தண்டனை யமலோகத்தில் விதிக்கின்றார்கள் என்பது நிச்சயம்.

## திருமங்கை ஆழ்வார் பாசுரம்

கொன்றேன் பல்லுயிரைக்குறிக்கோளொன்றில்லாமையால்
என்றேனும் இரந்தார்க்கு இனிதாக உரைத்தறியேன்.
குன்றேய் மேகமதிர் குளிர் மாமலை வேங்கடவா
அன்றே வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே

மலைகளிலே தங்கியிருந்துள்ள மேகங்களானவை. நீர்கனத்தாலே, மூழ்கா நிற்பதாயும் குளிர்ச்சி மாறாததாயும், மாபெருமை மிக்கிருப்பதான. ஸ்ரீவேங்கடாஜலத்தை நிருபகமாக வுடையவனே. ''சுக்ல ஸ்ரோணிதங்களாலுண்டான தேகத்துக்குள்ளே வேறாய் பரிசுத்தமான ஆத்மா ஒன்றுண்டு'' என்னும் அறிவு, அடி

யேனுக்கில்லாமையினல் எல்லா ப்ராணிகளையும் ஹிம்ஸித்து புசித்து இந்த நீச தேகத்தை வளர்த்து வந்துள்ளவனுகிய நான் யாரேனும் யாசிக்கும் பரமபாகவதர்கள் வந்தால் தன்கையில் காசில்லாமையினாலே யன்றோ, அவர்களுக்கு இனிமையான வார்த்தைகளாலே ஒரு காலத்திலும், உரைத்தறியேன். ஆகவே, நல்லோரிடம் கடிந்து பேசினவன், மற்றோர் உயிரின் உடலைப் புசித்து என் உடலை வளர்த்து வந்த ஜீவகாருண்ய மற்றவனான என்னை, யமலோகத்தில் என் பாபத்துக்கு ஏற்ற தண்டனை விதிப்பார்கள் என்ற பயத்தால் வந்து உன் திருவடி அடைந்தேன். குளிர் மாமலையில் எழுந்தருளியிருக்கும் வேங்கடவா என்னை ரக்ஷிக்க வேண்டும். எனக்குச் சாமியானவனே யமகிங்கரர்கள் இரக்கமற்ற வர்கள், மிகவும் கொடிய சிக்ஷைகளைப் பண்ணுவார்கள். அப்படிப் பட்ட தண்டனை எனக்குக் கொடுப்பதற்கு முன்னதாகவே உன்திரு நாமத்தை வாயினல் பாடி மனத்தினல் விண்ணப்பித்தேன். என்னைக் காத்தருள வேணும் என்றார்.

## கடோப நிஷத்து

''பயாதஸ்யாக்நி ஸ்தபதி பயாத்தபதி ஸூர்யஹ:
பயாதிந்தரச்ச வாயுச்ச ம்ருத்யுர் தாவதி பஞ்சமஹ''

## பொழிப்புரை

கடவுளது பயத்தினலே தீ வெப்பத்தைத் தருகின்றது. இவரது பயத்தினல் சூரியன் ஒளியைத் தருகிறான். இவரது பயத்தினல் மேகமும் காற்றும் சஞ்சரிக்கின்றன. ஐந்தாவதான மரணமும் சம்பவிக்கின்றது.

## விசேஷ உரை

இந்தப் பிரபஞ்ச வியாபகத்துக்குக் காற்று, மேகம், சூர்யன், தீ முதலியவைகள் இன்றியமையாதவைகளாக இருக்கின்றன. ஆகவே மரணமும் இன்றியமையாததாயிருக்கிறது. மரணம் என்பது இல்லாவிடில் இந்த பிரபஞ்சம் இப்போது அந்நதகோடி தாது கந்தமூல கிருமி கீடக ஜீவப்ராணிகள் சுகமாக குடியிருக்கும்படியான விடாகாது, மரணத்தின் சகாயத்தினுல்தான் முன்னொருக் கால் ஜலமயமாக இருந்த உலகம் இப்போதிருக்கும்படியான மண்ணுலகமாக மாறியது. மண்பாகத்தின் பெரும்பாகம் முன் காலத்தில் கந்தமூல க்ருமி கீடக ஜீவிகளாக விருந்து மரணமடைந்தவைகளின் சத்துக்களே ஆகும்.

## மரணம் பற்றிக் கூறுவது

சிறியோர் இருட்டுக்கு அஞ்சுவதைப் போல, இவ்வளவு உபயோகமுள்ள மரணத்தைச் சாதாரண ஜனங்கள் கண்டு பயப்படுகிறுர்கள். மரண காலத்திலுண்டாகிற பெருமூச்சு சன்னி முக விகாரம், உற்றேர் பெற்றேரின் அழுகை, இழவுச் சடங்கு, பிரேதத்தின் கோரமான கோலம் முதலானவைகளால் மரணம் பயங்கரமானதாகத்தோன்றினும், புத்திமான்கள் மரணத்தருவாயில்பூரண சந்தோஷம் கொள்ளுதல் பிரத்யக்ஷம். ஏனெனில், மரணமானது குடிசையைவிட்டு அரண்மனையில் பிரவேசிப்பதைப் போலவும் கந்தைத்துணியைத் தள்ளிப் புதுவத்திரம் தரித்துக் கொள்வதைப் போலவும். பள்ளிக் கூடத்தை விட்ட பிள்ளைகள் தம் சொந்த வீட்டுக்குப் போவது போலவும்-எப்பக்கங்களிலும் சங்கடங்கள் நிறைந்த இவ்வுலகத்தைவிட்டு எப்பக்கங்களிலும் சந்தோஷம் நிறைந்த சர்வேசுரருடைய சாயுஜ்ய பதவி அடைய வழியாக இருக்கிறது. அது இயற்கைக்குச் செலுத்த வேண்டிய கடனாக இருப்பதால் அதைப் பற்றி அஞ்சுவதால் பாலிய தன்மையும் பலவீனத்தையுமே குறிக்கும். அச்ச முள்ளவன் மரணத்தைக் கண்டு அஞ்சி நடுங்குகிறுன். ஞான முள்ள வீரனே அதை வரவேற்கிறுன். சிறந்த பெரியோர்களெல்லாம் கூறுகிறுர்கள்.

மரணம் எப்போதும் மானிடருடைய சிரசின் மேல் குடி கொண்டிருக்கிறது. ஆகவே மரணத்தைத் துருக்கி தேசத்தார் தமது தலைப்பாகை மூடுதிரையைப் போல் பாவித்து எப்போதும் நினைவு கூரும்படி அணிவார்களாம். துக்கங் கொண்டாடுதல் பல தேசத்தாருக்குப் பல வகையாகவிருக்கின்றது. ஐரோப்பியர் மரணத்தைக் காட்டும் இருட்டான கருப்பு நிறத்தையும் மரித்தவர்கள் சுத்த இடத்திற்குப் போனுர்களென்று காட்ட சீனுவில் வெண்மை நிறத்தையும், எகிப்தில் மஞ்சள் நிறத்தையும், மண்ணிலிருந்தெடுக்கப்பட்டவன் மண்ணுக்கே திரும்புகிறுனென்று காட்ட எத்தியோப்யாவில் கபில நிறத்தையும் உடை ஆடைகளை மரண காலத்தில் உடுத்துகிறுர்கள். மரித்தவர்கள். ஆகாயத்திற்குப் போனுர்களென்றும். துருக்கியின் சில பாகங்களில் நீல நிறத்தையும் மற்ற பாகங்களில் ஒரு பக்கத்தில் துன்பமும் மறுபக்கத்தில் நம்பிக்கையும் தோன்றுவதைக் காட்ட கறுப்பும் நீலமும் சேர்ந்த இந்திர நீலநிற வஸ்திரத்தையும் அணிகிறுர்கள். மரணத்தினுல் மானிடர் தேஜோ ரூபமான பிரம்மத்தைச் சார்ந்தார்கள் என்று காட்ட வடஇந்தியாவில் அனேகர் செங்காவி வஸ்திரங்களைத் தரிக்கிறுர்

கள். மானிடரின் பிரபஞ்ச கர்மங்களும் பாழ்த்தனவென்று காட்ட தென் தேசத்தில் அநேகர் தலைமயிர், மீசை, தாடிகளைச் சிரைத்துக் கொள்ளுகின்றனர். இறந்தவர்கள் தமது பாகமாகிய இருளுடம்பை புடத்தில் வைத்துச் சுத்த சைதன்யரானார்களென்று காட்ட விபூதியையும் வெள்ளை நாமத்தையும் தரிக்கிறார்கள் மற்றும்அநேகர் அநேகவித மரணக்குறிகளை அணிதல் ப்ரத்தியக்ஷம்.

மானிடருடைய ஆசாபாசங்களையும் அகங்கார மம காரங்களையும். அக்கிரம எண்ணங்களையும். தொழில்களை அடக்குவதற்கு வேண்டிய புத்திமதிகளையும் மரணத்தைப் போல அவ்வளவு பக்குவமாய் சொல்ல எவராலும் எவற்றாலும் முடியாது. மரணமென்னும் பெரும் பயம் இல்லாவிடில் அநேகர் தர்மநுஷ்டானங்களையும் தேவபக்தியையும் விட்டு நிரீசுவர கர்விகளாகி உலகத்தாருக்கு அநேகவித நஷ்ட நிஷ்டூரங்களை விளைவிப்பார்கள். ஆகவே முடிசாய்ந்த மன்னரும், மற்று முள்ளோரும், எப்படிப்பட்ட சுத்த வீரர்களாக இருப்பினும், மரணமென்ற மாத்திரத்தில் மதிமயங்குவது சஹஜம். அது அழையாத விருந்தாளியைப் போல ஜடுதியில் வந்து சஞ்சலப்படுத்தி விடும். மானிடரின் ஒவ்வொரு சுவாசமும் அவர்களது கடைசிச் சுவாசமாக முடியினும் முடியும். இழவுக் குறியைக் காட்டும். டும் டும் என்னும் பறையானது மரணம் எல்லாருக்கும் உண்டு. உண்டென்று இனியடிக்கும் பறை உனக்கும் உண்டு என்று விளம்புகின்றது. மானிடர் மரணத்துக்கு) பயந்து சத்காரியங்களிலும் சுவாமி பக்தியிலும் பிரவேசிக்க இந்த உலகத்துக்கே ஒரு உத்தம உபாத்தியாயனைப் போலவும் இருக்கிறது,

யாவற்றையும் நடத்துபவராகிய பரமேச்வரரது கருத்தின்படி தீவெப்பத்தைத் தருகிறது. சூர்ய பிம்பம் ஒளியைத் தருகிறது. மேகம் மழைபெய்கின்றது; காற்று அசைகின்றது. மரணம் உண்டாகின்றது. ஒரு பொருளும் அவரது கருத்தையும் அவரது நியமத்தையும் மீறமாட்டாது. சந்திரன், சூரியன் முதலிய கிரக நக்ஷத்திரங்கள். நீர், காற்று இவை ஜடப் பொருள்களாயிருந்தும் அவருக்கஞ்சின சித்துப் பொருள்களைப் போல தன் செய்கைகளில் சென்று கொண்டிருக்கின்றன. நன்மையையே வடிவாகக் கொண்ட இவ்வழிவற்ற புருஷனது நியமத்தினால் இவையாவும் இவ்வுலகத்துக்கு உபகாரசாதனமான கார்யங்களில் நியமிதமாக ப்ரவர்த்திக்கின்றன.

ருக்வேதம் I.6.189ல்

சன்னோமித்ர: சம்வருண: சன்னோபவது
அர்யமா, சன்னஇந்த்ரோ பிரகஸ்பதி: சன்னோ.
விஷ்ணு உருக்கிரம:

(இதன் பொருள்) இரக்ஷகனும் சிரேஷ்டனும் நியாய காரி யாயும் சுவாமியாயும்சர்வவியா பகனுமுள்ள பரமேசுரவன் நமக்கு சுகத்தைக் கொடுப்பாராக என்றும்.

ருக்வேதம் 213, 22, 46ல்

"இந்த்ரம் மித்ரம் வருணம் அக்னிம் ஆஹு:
அதோ திவ்ய: ஸ்ஸுப்ரணோ கருத்மான்
ஏகம் ஏகம் ஸத்
விப்ராபகுதாவதந்தி அக்னிம் யமம் மாதரிஷ்
வாநமாஹு:"

(இதன் பொருள்) ஈசுவரனை இந்திரனென்றும் மித்ரனென்றும் வருணனென்றும் அக்னி என்றும் சொல்லுகிறார்கள்; மேலும் அவர் ஒருவர். ஆனல் புத்திமான்கள் அவரை அக்னி என்றும் யம னென்றும் மாதரிஷ்ரை என்றும் அநேக விதமாய்ச் சொல்லு கிறார்கள்.

ருக்வேதம் 10 141. 4ல்

"இந்தரவர் பூபிரசஸ்பதிம் ஸுஹ வேஹ ஹவா மஹே"

(இதன் பொருள்) பூஜ்ஜியனும் ஐஸ்வர்யவானும் பலவானும் பெரியவனும் சுவாமியும் ஆகிய பரமேசுவரனை ஸ்மரிக்கின்றோம், என்றும்

"நமோ பிரும்மணே நமஸ்தேவாயோத்வமேவா
ப்ரத்யக்ஷம் பிரும்மாஸி"

(இதன் பொருள்) பரமேசுவரனுக்கு நமஸ்காரம் ஸர்வ சக்தி மானகிய உனக்கு நமஸ்காரம். நீயே உண்மையான எல்லாவற்றி லும் பெரியவன் என்றும் வேதம் சொல்லுகிறது.

வேதங்களில் பகவானுக்கு வழங்கி வந்த பெயர்களுக்கும் சொற்பொருள் (வேத அகராதிகள்) கூறியுள்ளபடி அதன் கருத்தையும் கீழே எழுதுகிறேன்,

## இந்து வேதத்தில் பரமாத்மாவுக்கு கூறப்படும் பெயர்கள் பற்றி விளக்கம்

1. விராட்டு என்ருல்—அநேகவிதமாக ஜகத்தைச் செய்பவன்

2. அக்கினி என்ருல்—ஞானஸ்வரூபனுயும், சர்வஜ்ஞனுயும், அடைவதற்கும், அறிவதற்கும் பூஜிப்பதற்கும் தக்கவனுயும் இருப்பவன்.

3. விசுவன் என்ருல்—ஆகாசாதி பூதங்கள். யாரிடத்திலிருந்து பிரவேசிக்கின்றனவோ அவன்.

4. ஹிரண்ய கர்ப்பன் என்ருல்—சூரியன் முதலிய தேஜஸுக்களை கர்ப்பத்திலுடையவன்.

5. வாயு என்ருல்—சராசரமான ஜமத்தைப் பிரளயம் செய்பவன் அல்லது தாங்கிக் கொண்டிருப்பவன்; பலவானுக்கெல்லாம் பலவான்.

6 தைஜஸன் என்ருல்—தனக்குத்தானே பிரகாசமுள்ளவன்; சூரியாதி தேஜஸுக்களைப் பிரகாசிக்கச் செய்பவன்.

7 ஈசுவரன் என்ருல்—சத்தியம், ஞானம் முதலிய ஸமஸ்த ஐசுவரியத்தையுமுடையவன். ஆளுபவன் அரசன்.

8. ஆதித்தன், என்ருல்—நாசமில்லாதவன்

9. பிராக்கியன் என்ருல்—ஞானி; ஞானிகளுக்கெல்லாம் சிரேஷ்டன். எல்லாப் பொருள்களையும் உள்ளபடி அறிகிறவன்,

10. மித்திரன் என்ருல் =எல்லாருக்கும் நண்பன்.

11. வருணன் என்ருல்—சிஷ்டர்களையும் முமுட்சுக்களையும் தருமாத்துமாக்களையும், ஸ்வீகரிப்பவன்; சிரேஷ்டர்கள் அடையத் தகவன்; சிரேஷ்டன்

12. அரியமா என்ருல் — எல்லாருடைய கருமங்களின் உண்மையான வியவஸ்தையையும் அறிந்து பாபிகளுக்கும் புண்ணியர்களுக்கும் பலன்களை நியமிப்பவன்.

13. இந்திரன் என்ருல்—எல்லா ஐசுவரியத்தோடும் கூடினவன்.

14. பிரகஸ்பதி, என்ருல்—எல்லாரிலும் பெரியவனுயும், ஆகாசாதிகளுக்கும் பிரம்மாதிகளுக்கும் குருவாயும் அதிபதியாயும் இருப்பவன்,

15. பிரஜாபதி என்ருல் — ஸமஸ்த ப்ராணிகளுக்கும் யஜமானன்.

16. விஷ்ணு என்ருல்—சராசரமாகிய ஜகத்தெல்லாம் வியாபித்திருப்பவன்.

17. உருக்கிரமன் என்ருல்—மிகுந்த பராக்கிரமத்தையுடையவன்.

18 பிரம்மா என்ருல்—எல்லாவற்றிலும் பிரகாசித்துக் கொண்டு எல்லாவற்றிற்கும் பெரியவனுயிருப்பவன்.

19. குபேரன் என்ருல்—ஆகாசாதிகளுக்கு ஆச்சாதிகன்.

20. ஆத்மா என்ருல்—எல்லா ஜகத்திலும் வியாபித்திருப்பவன்.

21. பரமாத்மா வென்ருல் ஜீவாத்மக்களிலெல்லாம் சிரேஷ்டன்

22. பரமேசுவரன் என்ருல், ஈசுவரர்களுக்கெல்லாம் ஈசுவரன்; ஐசுவரியத்தையுடையவர்களெல்லாரிலும் உயர்ந்தவன்.

23. ஸவிதா, என்ருல்—சமஸ்தமான ஜகத்தையும் உற்பத்தி பண்ணுபவன்

## தேவன் என்னும் பதத்தின் பொருள்

24. தேவன் என்ருல் (1) ஸ்வயம்பிரகாசனுய் எல்லா ஜகத்தையும் ஜொலிக்கச் செய்கிறவன் (2) தனது ஆனந்தத்தில் கிரீடிக்கிறவன் அல்லது ஜகத்தினை கிரீடையாகச் சிருஷ்டித்தவன். அல்லது ஜகத்தின் கிரீடைக்கு ஆகாசமாயிருப்பவன் (3) எல்லாரையும் ஜெயிப்பவன் யாராலும் ஜயிக்கப்படாதவன் (4) பாபபுண்ய விவகாரங்களை உபதேசிக்கின்றவன். (5) எல்லா பிரகாசத்துக்கும் ஆதாரனுயிருப்பவன் (6) எல்லாராலும் துதிக்கப்படத்தக்கவன். (7) ஆனந்தஸ்வருபனுய் எல்லாரையும் ஆனந்திப்பவன். (8)சந்தோஷிப்பவன் (9) பிரளயத்தில் எல்லாரையும் அவ்யக்தத்தில் ஒடுக்குபவன். (10) சர்வாபீஷ்டங்களும் நிறைந்தவனுய் சிஷ்டர்களால் விரும்பப்படத்தக்கவன். (11) எல்லோரையும் அடைந்து எல்லோராலும் அடையவும், அறியவும் தக்கவன்,

## பஞ்சபூததேவதையின் பொருள்

25 பிருதிவி என்றால் ஆகாசாதிகளிலெல்லாம் விஸ்தரித்திருப்பவன்.

26. ஜலம், என்றால் அவ்யக்கத்தினின்றும் பரமாணுக்களை ஒவ்வொன்றாய் சேர்க்கவும், பிரளயத்தில் அவைகளைப் பிரிக்கவும் சக்தியுள்ளவன் அல்லது ஜ—என்பதினால் எல்லாவற்றையும் உண்டாக்குபவன்; ல—என்பதினால் எல்லாவற்றையும் தாங்குபவன்.

27. ஆகாசம் என்றால் எல்லாவிடத்திலும் எக்காலத்திலும் எல்லாவற்றையும் ப்ராகாசிக்கச் செய்பவன்.

28. அன்னம் என்றால்—சராசரமான ஜகத்தை பக்ஷித்து ஜீர்ணிப்பவன்.

9 அன்னாதன் என்றால்—சராசரமான ஜகத்தைக் கிரகிப்பவன். அத்தா என்பதற்கும் அதே பொருள்.

30. வசு என்றால்—ஆகாசாதி பூதங்கள் வசிப்பதற்கு இடமானவன்; எல்லா பூதங்களிலும் வசிப்பவன்.

31. ருத்திரன் என்றால்—துஷ்டகாரியங்களைச் செய்பவர்களை அழச்செய்பவன்.

## சந்தியா வந்தனதேவதையின் பொருள்

32. நாராயணன் என்றால்—எல்லா ப்ராணிகளும் வசிக்கும் ஸ்தானம். எவனிடமிருந்து எல்லாப்ராணிகளும் ஜனிக்கின்றனவோ ஜனித்தவை மறுபடியும் எவனை நாடி எப்பொழுது சேருகின்றனவோ அவனே நாராயணன்.

33. கேசவன் என்றால்—நிரவதிக சுகத்தை வஹிக்கப்பட்டவன்.

34. மாதவன் என்றால்—ஞானத்திற்கு ப்ரபுவானவன்.

35. கோவிந்தன் என்றால்—வாக்கினால் ஸ்தோத்தரிக்கப் படுபவன். அல்லது ஜீவகோடிகளாகிய பசுக்களைக் காப்பவன்.

36. மதுஸூதனன் என்றால்—ஞானத்தினால் பக்தர்களுடைய கர்மபலாபேக்ஷையைப் போக்குபவன்,

37. திரிவிக்கிரமன் என்ருல்—மூன்று லோகங்களிலும், வியாபித்திருப்பவன்.

38. வாமனன் என்ருல்—மங்களஸ்வரூபத்திஞல் பிரகாசிப்பவன்.

39. ஸ்ரீதரன் என்ருல்—ஸர்வஸம் பத்துகளையும் தரித்துக் கொண்டிருப்பவன்.

40. ஹிருஷிகேசன் என்ருல்—இந்திரியங்களுக்குப் ப்பிரபுவானவன்.

41. பத்பநாபன் என்ருல்—ஸர்வஜகத்காரண சம்பன்னன்,

42. தாமோதரன் என்ருல்—சர்வலோகங்களையும் தனக்குள்ளாக உடையவன்.

43. ஸங்கர்ஷணன் என்ருல் ஸர்வஜீவர்களையும் ஆகர்ஷிப்பவன்.

44. வாசுதேவன் என்ருல் - ஸர்வபூதங்களையும் தனக்குள்ளும் தான் ஸர்வ பூதங்களுமாக இருப்பவன்.

45. பிரத்யும்னன் என்ருல்—அத்தியந்த பிரகாச சம்பனன்.

46. அநிருத்தன் என்ருல்—பக்தர்களால் கிரஹிக்கப்படுபவன்

47. நரசிம்ஹன் என்ருல்—பாவிகளைத் தண்டித்து ஞானிகளுக்கு மோக்ஷம் தருபவன்.

48. அச்சுதன் என்ருல்— நாசரகிதமானவன்.

49. ஜநார்தனன் என்ருல்—ஜனங்களால் புருஷார்த்தத்துக்கு வேண்டப்படத்தக்கவன்.

50. உபேந்திரன் என்ருல்—பரமஐஸ்வர்யஸம்பன்னன்.

51. ஹரிஎன்ருல்-பக்தர்களுடைய பாபங்களைப் போக்குபவன்

## நவக்கிரஹ தேவதையின் பொருள்:

52. சூரியன் என்ருல்—சராசரமான ஜகத்துக்கு ஆத்மா.

53. சந்திரன் என்ருல் —ஜீவர்களையும் , முக்தர்களையும் ஆனந்திப்பிக்கின்றவன்,

54. மங்களன் என்றால்—தான் சுபரூபனாகி எல்லாருக்கும் பத்தைக் கொடுப்பவன்.

55. புதன் என்றால்—தான் ஞான (அறிவு) சொரூபனாய் எல்லாருக்கும் அறிவைத் தரக் காரணனாயிருப்பவன்.

56. சுக்கிரன் என்றால்—பரிசுத்தனாகி எல்லாரையும் பரிசுத்தப் படுத்துகிறவன்.

57. சனீசுவரன் என்றால்—தான் தைரியனாகி உலகத்தின் தைரியத்திற்குக்காரணனாயிருப்பவன்.

58. ராகு என்றால்—ஏகாந்த சொரூபனாகி எதனுடனும் சேராமல் துறவிகளின் துறவுக்குக் காரணனாயிருப்பவன்.

59. கேது என்றால்—ஜகத்துக்கு வாசஸ்தானமாகி ரோகரதெனாய் முமுக்ஷுகளின் ஜனனமரணங்களை நாசப்படுத்துபவன்.

## யாகயக்கிய தேவதையின் பொருள்:

60. யக்யன், என்றால்—பிரம்மாதிகளாலும் பூஜிக்கப்படுபவன் யக்யமென்பது விஷ்ணுவுக்கு பெயர். விஷ்ணுவென்றால் வியாபகன்: ஆகையால் யக்யனென்றால் வியாப்யனென்றும் பொருள்,

61. ஹோமன் என்றால்—கொடுக்கவும், வாங்கவும் தக்கவன். உபதேசத்தைக் கொடுப்பதிலும் பக்தியைக் கொடுப்பதிலும் பரமேசுவரனை விட உத்தமனில்லை யாகையால்; அவனுக்கு ஹோமனென்ற பெயர் வழங்கியது.

62. பந்துவென்றால்—எல்லா உலகங்களையும் ஆக்கினையால் கட்டித்தத்தம் மார்களில் சுற்றும்படி நடத்துபவன் உறவினரைப் போல உலகங்கள் ஒன்றுக்கொன்று சகாயகாரியாயிருக்கச் செய்பவன்.

63. பிதா என்றால்—பிரஜைகளைத் தகப்பனைப் போலக் கிருபையுடனும் ப்ரீதியுடனும் ரக்ஷிப்பவன்.

64. மாதா என்றால்—தாயைப்போல ப்ரஜைகளை அபிமானித்து அத்யந்தப் பிரீதியும் கிருபையும் செய்பவன்.

## தத்வசாஸ்திரங்களில் வழங்கும் பெயர்கள்:

65. சத்யன் என்றால்—நித்யனாயும் அழிவற்றவனாயும் இருப்பவன்.

66. ஞானன் என்றால்—முக்காலத்தையும் அறிந்தவன்.

67. அநந்தன் என்றால்—தேசகால வஸ்துக்களால் அபரிச்சின்னன்; அகண்டமானவன்.

68. ஆகந்தன் என்றால்—எல்லாம் நிறைந்தவனாய் சந்தோஷதனாய் முமுக்ஷுகளுக்கு நித்யாநந்தத்தைக் கொடுப்பவன்.

69. சச்சிதானந்தன் என்றால்—சத்திய சொரூபன் ஞான சொரூபன். ஆனந்த சொருபன்.

70. சுதன் என்றால்—தான்சுத்தனாகி ஜீவர்களின் எல்லாக் குற்றங்களையும் நீக்குபவன்.

71. புத்தன் என்றால்—அறிவுக்கு எல்லையாயிருப்பவன்.

72. முக்தன் என்றால்—தான் முக்தனாகி எல்லாருக்கும் முக்தியைக் கொடுப்பவன்.

73. நித்யன் என்றால்—என்றுமுள்ளவன் எவராலும் உண்டாக்கப்படாதவன்.

74. கணேசன் என்றால்—அண்டங்களின் கூட்டங்களுக்கெல்லாம் ஈசன்.

75. விசுவேசுவரன் என்றால்—ஜகத்துக்கெல்லாம் ஈசன்

76. கூடஸ்தன் என்றால்—யாரிடத்தில் எல்லா வியவகாரங்களிலும் வியாப்தனாகி அவைகளுக்கு ஆதாரனாயிருக்கின்றானோ, எவனுடைய சொரூபத்தில் எவ்வித விகாரமுமில்லையோ அவன்.

## புராண இதிகாச தேவதையின் பெயர்:

77. சக்தி என்றால்—எல்லா பதார்த்தங்களையும் ரசிக்கும் சக்தியுள்ளவன்.

78, லட்சுமி என்றால்—எல்லா உலகங்களையும் உண்டாக்கிப் பார்க்கின்றவன். ஜகத்தில் அவயங்களை ஒன்றைப்போல மற்றொன்றில்லாதபடி படைத்து ப்ரகாசிக்கச் செய்பவன். வேதாதி சாஸ்திரங்களை ஞானிகளுடைய தரிசனத்துக்கு ஏற்றவாறு செய்திருப்பவன். சகல சுகங்களையும் தருபவன்.

79. ஸரஸ்வதி என்றால்—சகலவித ஞானங்கள் விளங்கப் பெற்றவன்.

80. நியாயகாரி என்றால்—பக்ஷபாதமற்றவன் பாபபுண்யங்களுக்குத்தக்கபடி பலனை அளிப்பவன்.

81. தயாளு என்றால்—அபயங் கொடுத்தல் உள்ளப்படி குணதோஷங்களை அறிதல், இரக்ஷித்தல், துஷ்டகர்மங்களைச் செய்வோரைத் தண்டித்தல், எல்லாரிடத்திலும் ப்ரீதி, கிருபை செய்தல் ஆகிய குணங்களையுடையவன்.

82. அந்தரியாமி, என்றால்—ஜகத்தின் உள்ளும் புறமும் எங்கும் வியாபித்து எல்லாவற்றையும் நியமத்தில் வைப்பவன்.

83. தருமராஜன், என்றால்—தருமத்தால் எப்போதும் பிரகாசிப்பவன் தருமத்தைப் பிரகாசிக்கச் செய்பவன்.

84 சிவன், என்றால்—எப்போதும் கல்யாண குணங்களோடு இருப்பவன்.

85. பகவான் என்றால்—ஞானவைராக்யாதி குணங்களை நித்யமுமுடையவன்.

86. மனு என்றால்—ஜகத்தை அறிபவன் வேதாதி சாஸ்திரங்களாலும் சிஷ்டர்களாலும் அறியப்பட்டவன்.

87. விசுவம்பரன் என்றால்—ஜகத்தை எல்லாம் தரிசித்து போஷிப்பவன்.

88. காலன் என்றால்—ஜகத்தின் எண்ணிக்கை, அளவு, முதலியவற்றை உள்ளபடி அறிபவன்.

89. பிரியன் என்றால்—சிஷ்டர்களையும் முமுக்ஷுகளையும் தனது ஆனந்தத்தால் சந்தோஷப்படுத்துகிறவன்.

90. சங்கரன் என்றால்—சுகத்தைக் கொடுப்பவன்

91. சூக்ஷுமன் என்றால்—எல்லாவற்றிலும் பெரியவன்.

92. சுயம்பு என்றால்—சுயமாக இருப்பவன்.

93. மஹான் என்றால்—எல்லாவற்றிலும் பெரியவன்.

இவ்விதமாய்ப் பரமாத்மாவின் குணகர்ம சுவபாவங்களை அனுசரித்துப் பல நாமங்கள் அவருக்கு வேதங்களில் வழங்கியிருப்பது மன்றி. பிரபஞ்ச சம்மந்தமான குணங்கள் அவரிடமில்லையென்பதை விளக்குகின்ற பல நாமங்களும் உண்டு.

அவையாவன:

94. அஜன் என்றால்—பிறப்பில்லாதவன்.

95. நிராகரன் என்றால்—ரூபமில்லாதவன்.

96. நிரஞ்சனன் என்ருல்—மாயையும் அவித்தையு மற்ற வன்.

99. அத்வைதியன் என்ருல்—ஒப்புயர்வில்லாதவன் ஸஜாதி விஜாதி ஸ்வகத பேத மற்றவன்.

98. நிர்க்குணன் என்ருல்—ஜன்மம் அவித்தை ஸத்துவம் முதலிய ஜகத்தின் குணமற்றவன்.

99. நிர்ப்பயன் என்ருல்—யாரிடத்திலும் பயமில்லாதவன்.

100. அநாதி, என்ருல்—ஆதியற்றவன் எவற்றிற்கும் ஆதியா னவன்.

101. அசிந்தியன் என்ருல்—விஷயா சக்தியுள்ளவர்களால் நினைக்கவும் அறியவும் படாதவன்.

102. அப்ரமேயன், என்ருல்—இவ்வளவு சக்தியுடையவ னென்று அளவிட்டுச் சொல்லக் கூடாதவன்.

103. அப்பிரமாதி, என்ருல்—பிராந்தியற்றவன்.

104. அகாயன் என்ருல்—சரீரமற்றவன்,

105. அவிரணன் என்ருல்—புண்ணற்றவன்.

106. அஸ்நாவிரன் என்ருல்—நாடி நரம்பற்றவன்.

107. அபானனென்ருல்—பாவமற்றவன், பாவனன்.

108. நிர்விகாரன் என்ருல் ஜகத்தின் பதார்த்தால்களைப் போல வளர்ச்சி தேய்வு முதலிய மாறுதலில்லாதவன். இப்படி ஒரே பரமாத்மாவுக்கு அவரது அநந்த கலியாணகுணகர்மங்களைக் கருதி ஆயிரக்கணக்கான பெயர்களிட்டு அழைத்து வந்தார்கள். இதன் அந்தரங்கமான அருத்தத்தை அறியாதவர்களாகிய சில வைதீகர்கள் அநேக தேவர்களையும் தேவதைகளையும் வணங்கப் பட்டவர்களென்று எண்ணுகிருர்கள்; ஆகவே அதைப்பற்றி இதன டியில் கிஞ்சித்தெழுதுவோம்.

முதலாவது

தேவன் என்னும் சொல்லின் சொற்பொருளை விசாரிப்போமா கில் அது வேதங்களில் பல விடங்களில் பல அருத்தங்களில் உபயோ கப்படும் காரணம் விசிதமாகும். தேவன் என்னும் பதத்தின் பகுதிக்கு—தானம் கொடுத்தல், போதித்தல், விளையாடுதல் முதலி யன முக்கியமான பொருள்கள். பரமாத்மா எல்லா உலகங்களையும் படைத்து அவைகளைப் பிராணி கோடிகளின் உபயோகத்திற்குத்

தானமாகக் கொடுத்திருப்பதாலும். எல்லாவற்றையும் தனது சக்தியால் ஆதரித்து பிரகாசிக்கச் செய்திருப்பதாலும், சிருஷ்டியின் விமரிசையினுலும், அந்தரியாமித்தாலும். மனிதர்களுக்கு அவரது ஞானத்தையும், ஆக்கினைகளையும், இடைவிடாமல் போதித்து வருவதாலும், சிருஷ்டி. ஸ்திதி, சங்காராதிகளை ஒரு விளையாட்டாக நடத்தி வருவதாலும், தேவனென்ற பெயர் வேதங்களில் பரமாத்மாவுக்குப் பலவிதமாக உபயோகப்படுத்தப் பட்டிருக்கிறது.

தேவர்கள், அல்லது தேவதைகள் என்ற பெயரை இந்த தேசத்தில் இப்போது பலவாருக வழங்கி வருகிருர்கள். வேதங்களிலும், புராணங்களிலும், இச்சொற்கள் பலவிடங்களில் காணப்படினும். இச்சொற்களின் பொருளின்னதென்பதைப் பெரும்பான்மையோர் நன்குணராமல், பலவித பொருந்தாத பொருள்களைக் கூறிக் கொண்டிருப்பதனுல், அன்ய மதஸ்தர்களும் அவைகளின் சொருபத்தை விசாரியாமலே, இந்துக்கள் பல தெய்வங்களைப் பூஜிப்பவர்களென்று பழித்து வருகிருர்கள். இச்சொற்கள் வேதங்களில் வழங்கப் பட்டிருக்கும் பொருளுக்கும், புராணங்களில் வழங்கப் பட்டிருக்கும் பொருளுக்கும், வெகுவித்தியாசம் உண்டு. வேதங்களில் யக்ய மந்திரங்களையும், யக்கிய கருமங்களையும், தேவதைகள் என்று சொல்லியிருந்தாலும் மாதா, பிதா, ஆசாரியன், ஞானி முதலியவர்களையும், பஞ்சேந்திரங்களையும். மனம், புத்தி முதலிய அந்தக்கரணங்களையும், தேவதைகளென்று கூறப்படுகிறது. சூரியன் முதலிய லோகங்களும் தேவர்களாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

இந்திராதி தேவர்கள் வியஷயத்தில் மாத்திரம் வேதங்களில் சொல்லப்பட்டிருப்பதற்கும் புராணங்களில் சொல்லப்பட்டிருப்பதற்கும், பேதமிருப்பதாகக் காணவில்லை. திரு மூர்த்திகளென்று சொல்லப்படும் பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், ஆகிய பெயர்களைக் குறித்து வேதங்களில் ஒருவிதமாயும், புராணங்களில் ஒருவிதமாயும் சொல்லிருப்பது படித்தவர்களுக்கு ஸ்பஷ்டமாகும்.

வியவகாரத்தில் சொல்லப்படும் தேவதைகள் 33 ஆவர். அவர்களின் விவரம் வசுக்கள். 8. ருத்திரர். 1I ஆதித்தர். 12. இந்திரன் 1. பிரஜாபதி. 1. ஆக தேவதைகள். 33. அஷ்டவசுக்களாவன; 1. அக்னி. 2. பிருதிவி. (பூமி), 3. வாயு, 4. அந்தரிக்ஷம், (பூமிக்கும்

வானத்திற்கும் இடையிலுள்ள வெளி) 5. ஆதித்தன் (சூரியன்), 6. தியௌ (வானம் அல்லது சொர்க்கம்), 7. சந்திரன், 8. நக்ஷத்திரம். எல்லாப்பதார்த்தங்களும். இவைகளில் வசிப்பதால் இவைகளுக்கு வசுவென்ற பெயர் வந்தது. ஏகாதசருத்திரர்களாவன;— மனிதனுடைய சரீரத்தில் வியாபித்திரா நின்ற பிராண, அபான வியான, சமான, உதான, நாக, கூர்ம, கிருகர, தேவதத்த, தனஞ்செயனென்று சொல்லப்படும் 10 வாயுக்களும் ஜீவாத்மாவுமாம். இப்பதினொன்றும் மானிடதேகத்தை விட்டுப்பிரியுங்கால் பந்து ஜனங்களையெல்லாம் அழும்படிச் செய்வதால் இவைகளுக்கு ருத்திரரென்று பெயர் வந்தது. துவாதச ஆதித்தர் ஆவன; 12—மாதங்கள், இவைகள் மனிதனுடைய ஆயுளைக் கிரகித்துக் கொண்டு போவதால் இவைகளுக்கு ஆதித்தரென்ற பெயர் வழங்கியது, இந்திரனென்பது மேகத்திற்கும் அதில் உண்டாகும் இடிக்கும் பெயர். இந்திரனென்பதற்கு ஐசுவரியத்தோடு கூடியவன் என்று பொருள். மேகம் மனழ ரூபமாய் பூமியில் பிரஜைகளுக்கு ஐசுவரியத்தைக் கொடுப்பதால் மேக இடிகளுக்கு இந்திரனென்ற பெயர் வழங்கியது. பிரஜாபதி என்பது யக்யத்திற்கும் பசுக்களுக்கும் பெயர். யக்யத்தால் வாயு மேகம் முதலியவை சுத்தமடைந்து பிரஜைகள் இரக்ஷிக்கப்படுகின்றார்கள். பசுக்களால் பிரஜைகள் சுகமாக ஜீவிக்கின்றார்கள். ஆகையால், யக்யமும் பசுவும் பிரஜைகள் இரக்ஷிக்கப்படுவதற்குக் காரணமாயிருப்பதால் அவைகளுக்குப் பிரஜாபதி என்ற பெயர் வழங்கப்பட்டது.

இங்கு தேவர்களென்று சொல்லப்பட்ட 33—சிருஷ்டிகளும் ஈசுவரசிருஷ்டியில் அடங்கியிருந்த போதிலும் உலக ரக்ஷணைக்கும் சுகத்துக்கும் மிகுந்த பிரயோஜனகாரிகளாக இருக்கின்றமையால் அவைகளின் குணங்களையும் கருமங்களையும் நோக்கியும் இவைகளில் ஈசுவரருடைய கருணையே குடி கொண்டிருப்பதால். இவைகளை தேவதை போலப் பாவித்துக் கொண்டும்; இவைகளுக்கு இனமானவைகளையும் கூட்டிப் பெருக்கி முப்பத்துமுக்கோடி தேவதைகளாக்கி ஒட்டலங்காரமாக வர்ணித்தார்கள். இந்த வர்ணனையின் தத்துவத்தை அறியாதார், இந்துக்கள் முப்பத்து முக்கோடி தேவர்களை வணங்குபவர்களென்று எண்ணுகிறார்கள். இம்முப்பத்து முக்கோடி தேவதைகளாக வர்ணித்த சிருஷ்டிகள் கேவலம் பரதந்திரமும் அபூர்ணமு மான படைப்புகள். பரமாத்மா ஒருவரே படைக்கப்படாத பூரணரும் சுதந்திரருமானவர். ஆகவே,

(37) கேனோபநிஷத்து

1-வது கண்டம் 5வது வாக்யம்

"யத்வாசா நப்யுதிதம் யேநவாகப்யுத்யதே
ததேவ ப்ரஹ்மத்வம் வித்திநேதம் யதித முபாஸதே"

யார் வாக்கினல் முற்றும் விளங்கப்படாரோ. யாரால் வாக்கு விளக்கப்படுகிறதோ, அவரே பிரமமென்று நீயறியக் கடவாய். உலகத்தார் உபாசிக்கும் பரிமிதப் பொருள்கள் ஒரு பொழுதும் பிரமமன்று.

வாக்கு வார்த்தை சொல்லும் சக்தி யாரால் பெறப்படுகிறதோ அவர்தான் பிரமம். அவரால் தான் வாக்கு விளங்குகின்றது. ஆனல் அவர் வாக்கினல் விளக்கப்படார், உலகத்தார் இதுவென்று நிச்சயித்து எந்தப் பரிமிதப் பொருள்களை உபாசிக்கின்றனரோ அவை அவரன்று, சிலர் நீர், காற்று, தீ, கல், மிருகம், பறவை, மரம், கொடி, இவைகளை உபாசிக்கின்றனர். சிலர் சந்திரன் சூரியன் முதலிய கிரகங்களையும் நக்ஷத்திரங்களையும் உபாசிக்கின்றனர். சிலர் தேவர்களையும் தேவிகளையும் மனதினல் கற்பனை செய்து கொண்டு அவற்றிற்கு பிரதி மூர்த்திகளைச் செய்து உபாசிக்கின்றனர்; சிலர் உலகத்தில் விசேஷ சக்திபெற்றிருந்த மனிதர்களைக் கடவுளென்று நம்பி வழிப்படுகின்றனர். ஆனல், இவைகளொன்றும் கடவுளன்று, இவற்றின் வழிபாடு கடவுள் வழிபாடாகாது.

(38) கடோபநிஷத்து

2-வது வல்லி 18வது வாக்யம்

"நஜாயதேம்ரியதேவா விபச்சிந்நாயம்
குதச்சிந்நபபூவகச்சித்"

இந்தப் பரமாத்மாவுக்குப் பிறப்பில்லை. இறப்புமில்லை; இவர் எல்லா மறிந்தவர். இவர் ஒன்றிலிருந்துண்டாவதுமில்லை, ஒன்ருவதுமில்லை.

ஜனன மரணங்களாகிய விகாரங்களற்றவரும், குறைவும் குற்றங்களும் இல்லாதவரும், தூய்மையுள்ளவரும் பாபமற்ற வருமாகிய பரமாத்மாவிடனிடத்திலிருந்து இவை யாவும் உண்டாயிற்று; ஆனல் இவைகளில் தாஞென்றுமல்லர். பால் எப்படித் தயிருகின்றதோ, மண் எப்படி வேறுருவத்தைக் கொண்டு எப்படிக்

குடமாகின்றதோ. பொன் வேறுநிலையைப் பெற்றுஎப்படி குண்டலமாகின்றதோ, அதுபோல அவர் ஒரு பொருளாகப் பரிணமிக்கிறதில்லை. கயிற்றினிடத்துப் பாம்பென்னு மயக்கமும் கானலினிடத்து நீரென்னு மயக்கமும் எப்படி உண்டாகிறதோ, அதுபோல; கடவுளிடத்தில்ஒரு மயக்கம் நமக்குத் தோன்றி இவ்வுலகம் விளக்கத்தைப் பெற்றிருக்கிற தென்பதுமில்லை அவர் இந்த உலகத்தையெல்லாம் படைத்தார். உலகம் பொருண்மையால் கடவுளிலும் வேருனதே. அவர் அசித்துப் பொருளுமன்று. அவர் நம்மால் தொழப்படதக்கவரும், உபாசிக்கப்படதக்கவருமாக இருக்கிமுர். நாமனைவருமோ, அவரது சேவர்களும் உபாசகர்களுமாக விருக்கிறோம்.

(39) கேனோப நிஷத்து

1-வது கண்டம்2வது வாக்கியம்

ஶ்ரோத்ரஸ் யஸ்ரோத்ரம் மநஸோமநோ
யத்வாசோ ஹவாசம் ஸஉப்ராணஸ்ய
ப்ராணச்ச க்ஷுஷச்சக்ஷு

யார் செவிக்குச் செவியும் மனதுக்கு மனதும். வாக்குக்கு வாக்குமாவர் பிராணனுக்குப் பிராணன் கண்ணுக்குகண் ஆவர்.

பரமேசுவரனிடத்திலிருந்தே கண் காது வாக்கு மனது பிராணன் இவை அதனதன் சக்தியைப் பெறுகின்றன; மேலும் அவரை ஆதாரமாகக் கொண்டே அச்சக்திகளையெல்லாம் தனது சக்தியுடன் சேர்க்கக் கூடியனவையாக இருக்கின்றன; ஆனதினுற்முன் அவர் செவிக்குச் செவியென்றும், மனதுக்கு மனதென்றும், வாக்குக்கு வாக்கென்றும், கண்ணுக்குக் கண்ணென்றும், சொல்லப்பட்டார். அவர் கண்ணுக்கு கண்ணுயினும் தானே கண்ணல்லர்; காதுக்கு காதாயினும் தானே காதல்லர். மனதிற்கு மனதாயினும், அவர் மனதல்லர். அவர் அபரிமித ஞானசொரூபி. அவர் யாவற்றிற்கும் காரணர்; மேலும் ஆதாரமானவர்.

(40) சுவேதாஸ்வதரம்

6-வது அத்யாயம் 8 வது வாக்கியம்

நதஸ்ய கார்யம் காரணஞ்ச வித்யதே
நதத் ஸமச்சாப்யதி கச்சத்ருஸ்யதே
பராஸ்ய ஸக்திர் விவிதைவஸ் ரூயதே
ஸ்வபாவிகிஜ்ஞாந பலக்ரியாச

அவருக்கு உடலுமில்லை. பொறியுமில்லை; மேலும் அவருக்கு ஒப்பானவரும் மேலானவரும் காணப்படார் விசித்திரமும் சிறந்தது மான அவரது வல்லமை பற்றி எங்கும் கேள்விப்படுகின்றோம். அவரது ஞானமும் வல்லமையுமான செய்கைகள் இயற்கை யானவை.

உடல் ஒரு யந்திர விசேஷம்; ஒரு விசேஷமாகிய வேலை பரமேசுவரர் உடலாகிய ஒரு யந்திரமன்று; உடலைப்போன்ற யந்திரத்தில் கட்டுப்பட்டவரன்று. அவர் யாருடைய காரியமு மன்று; யாவும் அவருடைய காரியமே, அவர் ஒன்றாகிய காரணஸ்வ ரூபர். அவருக்கு உடலில்லை, பொறியில்லை. ஆனால், அவர் யாவற்றையும் பார்க்கிறார்; அறிகிறார். அவர் ஒருவரே யாவற்றிலும் மேலானவர். அவருக்கு ஒப்பானவர் ஒருவருமில்லை. அவருக்கு மேலானவருமில்லை அவர் யாவற்றையும் சிருஷ்டித்தவர்; எல்லா பொருள்களும் அவரது படைப்பு. அவர் இவ்வுலகமாகிய பேரரசுக்கு அரசன். யாவரும் அவரது குடிகள். அவர் நமது சிறந்த தந்தை 'நாமனைவரும் அவரது குழந்தைகள் அவர் நமது தலைவர்' நாம் அவரது கட்டளைக்குட்பட்ட வேலைக்காரர்கள். யாவும் அவரது நியமனத்திற்குட்பட்டிருக்கின்றன. அவரது நியமப்படி உண்டாகி அவரது நியமப்படி அழிகின்றன. ககோளத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிற ககோள ஞானமுடையவரென்ன பூமியினது கருப்பத்திற்குள்ளிருப்பதைத் தேடியறிகிற பூதத்துவ வேத்தை என்ன. உடலினது நியமங்களை நிரூபிக்கும் சாரீரகவிதான வேத்தை என்ன. அசித்துப் பொருள்களினது தத்துவங்களை நிர்ணயிக்கும் அசித்துப் பொருள் நூலில் வல்ல பண்டிதர்களென்ன ஆத்மதத்துவத்தைப் பரிசீலிக்கும் நுண்ணிய அறிவுள்ள புத்தி மான்களது கூட்டமென்ன, யாவரும் அவரது வியப்பான கருதி முடியாத வல்லமையையே கோஷிக்கின்றனர். அவர்கள் யாவரிடத் திலுமிருந்தே அவரது மேன்மையான வல்லமையின் விரிவுள்ள வர்ணனை எங்கும் கேட்கப்படுகின்றது.

நாம் எப்படி பொறி வழியாக ஒன்றையறிந்து சிறுகச்சிறுகப் புத்தியுக்திகளால் பரம்பரைக்கிரமத்தில் ஒவ்வொரு விஷயத்தை யும் ஆராய்கிறோமோ அது போலவன்று. அவரது பலமென்னும் செய்கை. அவர் இயற்கையாகவே தமது மகிமையால் யாவற்றையும் அறிகிறார். மேலும் அவர் தமது ஒரு நினைப்பாகியபலத்தினால் தமது நல்நோக்கங்களை முடிப்பிக்கிறார். ஒருவிஷயத்தையறிவதற்காகப்

பொறிகள் முதலிய வேறொன்றின் துணையும்அவருக்கு வேண்டிய தில்லை மேலும் தமது வல்லமையை விளங்கச் செய்யவும் அவருக்கு வேறொரு உபகரணமும் அவசியமில்லை. அவரது ஞானக்கிரியையும் பலக்கிரியையும் இயற்கையானவை. யாரிடத்திலிருந்து ஞானத் துடன் கூடிய இவ்வெண்ணிறந்த உயிர்கள் உண்டாகின்றனவோ, அவரது ஞானம் எவ்வளவு வியக்கதக்கது! மேலும் யாரிடத்தி லிருந்து இப்பொருள்களெல்லாம் உண்டாகி அதற்குரிய வல்ல மையைப் பெறுகின்றனவோ அவரது வல்லமை எவ்வளவு பெருமை யுடையது!

(41) சுவேதாசுவதர உபநிஷத்து

6வது அத்யாயம் 9வது வாக்யம்

நத்ஸ்ய கச்சித் பதிரஸ்தி லோகே
நசெசிதாநைவச நஸ்யலிங்கம்;
ஸகாரணம் கரணாதிபாதி போநசாஸ்ய
கச்சிஜ்ஜ நிதாநசாதிப:

உலகத்தில் அவருக்கு யாதொரு தலைவருமில்லை. நியந்தாவு மில்லை. அவருக்கொரு அவயமும் இல்லை. அவர் யாவற்றிற்கும் காரணர். மனதிற்குத்தலைவர். அவரைப் பெற்றோரும் இல்லை.

அவர் நித்யர்; நிரவயவர், ஸ்வதந்திரர், பிறப்பற்றவர் மிகப் பெருமையான ஆத்மா; ஆகவே. அவர் பல அவதாரங்கள் எடுத்த தாகவும், அவருக்குத் தாய் தந்தை சகோதரர் மனைவிமக்கள் இருந்ததாகவும், பரதந்திரமும் அபூரணமுமான மானவ ஜாதி யாரைப் போலச் சுகதுக்கங்களை அனுபவித்ததாகவும் எண்ண இடமில்லை. அப்படி எண்ணுவது வேத விரோதமாகும்.

(49) நசோபநிஷத்து

4-வது வாக்யம்

அநேஜதேகம் மனஸோஜ வீயோனந
நத்தேவா ஆப்நுவன் பூர்வமர்ஷத்
தத்தாவதோ ந்யாநத் யேதிதிஷடதி
த்தஸ்மிந் நபோமாரிஷ்வாததாதி

கடவுள் ஒருவர். அவர் அசைபவரல்லர். மனதை விட அதிக விரைவாகச் செல்பவர். பொறிகளுக்கு முன்செல்லுகிற இக்கடவுளை

பொறிகளிலொன்றும் அடையமாட்டாது. அவர் ஸ்திரமாக விருந்தும் விரைவாகச் செல்லுகிற மனமுதலிய பொறிகளைக் கடந்து செல்லுகிறுர். காற்று அவரிடத்து இருந்து கொண்டு உயிர்களுக்கு உடல்களினது அசைவைத்தருகிறது.

ஒரு இடத்திலிருந்து வேருெரு இடத்திற்குப் போகிருரென்று நினைக்கிறதற்கில்லை. ஆகையால். அவர் அசலர். அவர் அசைவதில்லை. அவர் அசலாராயிருந்தும் மனதைவிட விரைவாகச் செல்பவர், மனது அவரை முற்றும் பற்றமாட்டாது. பொறிகளனைத்தும் அவரைக் கிரகிக்கமாட்டா. விரைவாகச் செல்லுகிற மனதும் மற்ற இந்திரியங்களனைத்தும் அவரைப் பற்றுதற்கு எவ்வளவோ முயற்சி செய்கின்றன. அவர் ஸ்திரமாக இருந்தும் இவற்றை எல்லாம் கடந்து செல்லுகிறுர். காற்று உயிர்களுக்கு உடல்களினது எல்லா அசைவுகளையும் தருகின்றது. காற்றில்லாவிடின் உடல் சிறிது காலத்துக்குள்ளாகவே, ஒழுங்கற்று விழுந்துவிடும். ஆனுல் காற்று இந்த சக்தியை யாரிடத்திலிருந்து பெற்றதோ அவரில்லாவிடின் அது வேறு யாரிடத்திலிருந்து இந்தச் சக்தியைப் பெற்று அதன் மூலமாக உயிர்களினது உடலைக்காக்க கூடியதாக இருக்கிறது? அதனுற்ருன் அவரிடத்திலிருந்து கொண்டு காற்று உயிர்களுக்கு உடலினது அசைவுகளனைத்தையுந் தருகின்றது என்று சொல்லப் பட்டது.

## நான்கு வர்ணத்தின் தர்மம்

''ப்ராஹ்மண க்ஷத்திர்யவிசாம் சூத்ராணும் சபரந்தப
கர்மாணி ப்ரவிபக்தானி ஸ்வபாவ ப்ரபவைர்குணை''
—கீதை.

அர்ஜுனு ப்ராம்மண க்ஷத்திரிய வைசிய சூத்திரர்களுடைய வர்களென்பது அவரவர்கள் செயல்களைப் பொறுத்தது எனப்படும். குணத்துக்கு தகுந்த செயல்கள் செய்கின்றனர். கர்மத்தினின்று சுபாவம் மாறுகிறது. கருமமும் சுபாவமும் இணைபிரியாதவைகள். சுபாவம் எப்படியோ அப்படி வருணமும் மாறுகிறது. ஒரு மனிதன் எந்த வர்ணத்தைச் சேர்ந்தவன் என்பதை அவனுடைய சுபாவத்தினின்றும் கருமத்தினின்றும் தெரிந்துக்கொள்ளலாம். சுபாவமோ மிக சூஷ்மமானது, எளிதில் அதைத் தெரிந்துக் கொள்ள முடியாது. ஞானிகளுக்கு மட்டும் அது கண்ணுடிப் பெட்டிக்குள் வைத்துள்ள வஸ்து போன்று நன்கு விளங்கும். பின்பு கர்மமோ ஸ்தூல

மானது. ஒருவன் செய்கிற கர்மத்திலிருந்து அவனுடைய வருணத்தைத் தெரிந்துக் கொள்ளலாம். வருண பேதத்தை பகவான் சிருஷ்டி செய்யவில்லை. உயர்வு தாழ்வை பகவான் உண்டு பண்ணவில்லை. நமது இந்தியாவில் இந்துக்களிடம் மேலோன் கீழோன் என்ற வேற்றுமை இருக்கும் வரையில் நமது இந்திய நாடு சிறந்த நாடு ஆகாது என்று கருதுவாரும் உளர்.

சிருஷ்டி பேதமில்லை. உடலில் அவயவ பேதம் உண்டு. ஒருவன் செயலுக்கேற்ற பிறவி உண்டு. அவைகளில் குழந்தை என்றும், யுவனென்றும், விருத்தனென்றும், பேதம் உண்டு, ஆண்பால், பெண்பால் என்ற பேதம் உண்டு. ஒருவனது மன பரிபாகத்திலும் புரிகின்ற செயலிலும் பேதம் உண்டு. அதனுல் வர்ணபேதம் என்று சொல்லப்படுகிறது. இது சிருஷ்டி முழுதிலும் அமைந்திருக்கிறது. அப்படி ஒருவன் செயலுக்கேற்ற சிருஷ்டி செய்யாது இருக்க முடியாது. எடை முள் போலிருக்கும் பகவான் ஒரு முனை சாய்ந்திருக்க முடியாது. அப்படி இருப்பின் பகவான் என்பதற்குப் பொருளாகாது. பிறவி பேதங்கள் என்பது இந்தியாவில் மாத்திரம் இருக்கிறது என்று எண்ணுபவர் இயற்கையின் பாங்கை உள்ளபடி அறிந்து கொள்ளவில்லை எனலாம். ஆகவே குணத்தினுல் வந்த வர்ண பேதத்தையும், செயலுக்கு ஏற்ற பிறவி பேதத்தையும் அங்கீகரிப்பதைத் தவிர வேறு ஒன்றும் செய்ய முடியாது.

உலகில் எங்கும் வர்ணபேதம் இருக்கிறது. ஆனுல் மேல் நிலைக்கு வந்திருப்பவன் கீழ்நிலையிலிருப்பவனை அலக்ஷ்யப்படுத்தலாகாது. அப்படி அலட்சியப்படுத்தும் சமூகம் விரைவில் கீழ் நிலைக்கு வந்து சேரும். இக்கோட்பாடு எல்லா சமூகங்களுக்கும் பொதுவானது.

சமோ தமஸ்தப: சௌசம் க்ஷாந்திந்திரார் ஜவமேவச
ஞானம் விக்ஞான மாஸ்திக்யம் ப்ரஹ்ம கர்மஸ்வ
பாவஜம்,

அகக்கரணங்களை யடக்குதல், தவம், தூய்மை, பொறுமை, நேர்மை, சாஸ்திரஞானம் சுவானுபவஞானம், ஈசுவர நம்பிக்கை—இவையாவும் இயல்பாயுண்டாகிய பிரம்மஞான கர்மங்களாகும்.

ஒருவன் பிறந்த குடியை முன்னிட்டு ஒருவனை பிராம்மணன் என்கிறது பொருத்தமாகாது. ஒருவன் மனபரி பாகத்தையும்

வாழ்க்கை முறையையும் பார்த்து ஒருவனை பிராம்மணனென்கிறது வேதாந்தம். எந்தக் குடியில் எக்காலத்தில் வேண்டுமானாலும் பிராம்மணன் தோன்றலாம். ஏனென்றால் பிறப்பு உரிமையில் பொருளொன்றுமில்லை. மனபரிபாகமும், செயலும் முக்யமானவை. வேதாந்தம் விளக்குகிறபடி. பிராம்மண இயல்பையடையப் பெற்றவர்களை உலகில் காண்பது அரிது. ஆனால் அந்நிலையை அடைய மனிதன் முயல வேண்டும்.

கட்டுப்பாடான வாழ்க்கையே வடிவெடுத்தவன் பிராம்மணன். மனவடக்கமும் பொறிகளின் அடக்கமும் இயல்பாக அவனிடத்து அமைந்திருக்கும். பரத்தை நாடித் தவம் புரிதல் ஒன்றே அவன் தொழில், தவத்தால் அவனது மனம், மொழி மெய் ஆகிய திரிகரணங்களும் தூய்மையடைகின்றன. புறவுலகினின்று அவனுக்கு ஏற்படும் இடுக்கண் களிடத்து பிராம்மணன் பொறுமையே வடிவெடுத்தவனாகிறான். துன்புறுத்துவார் யாரையும் அவன் நொந்துக் கொள்ளான். தனது சிந்தையிலும் சொல்லிலும் செயலிலும் அவன் நேர்மையே வடிவெடுத்தவனாகிறான். சாஸ்திரஞானத்துக்கும் சுவானுபவ ஞானத்துக்கும் அவன் களஞ்சியமாக வேண்டும். சாஸ்திரத்தின் உட்கருத்தையும் பிரபஞ்சத்தில் உயிர் வாழ்க்கையின் தத்வத்தையும், அவனே உள்ளபடி அறிய வல்லவனாக வேண்டும். ஆஸ்திக்யம் அல்லது ஈசுவர நம்பிக்கை அவனுக்கு இருக்க வேண்டும்; கடவுளுக்கென்றே தான் வாழ்தலும் பிராம்மணன் என்னும் செயல்கள் அவனிடம் இருத்தலும் வேண்டும். பிராம்மணனென்னும் சின்னங்கள் இருக்கவேண்டும். உடலை அலங்கரிப்பதோ கள்ளக் கோலம் பூண்டு இருப்பதோ பிராம்மணத்துக்குப் பொருந்தாது அனைத்து உயிர்களிடத்திலும் அன்பு காட்ட வேண்டும். பாரமார்த்திக வாழ்க்கைக்கு நல்ல எடுத்துக் காட்டாக இருக்கும் பிராம்மணன் தொகை அதிகரிக்குமளவு, உலகத்துக்கு க்ஷேமமுண்டாகும் என்பது நிச்சயம்.

விவிக்த ஸேவிலக்வாசீ யதவாக்காய மானஸ:
த்யான யோகபரோ நித்யம் வைராக்யம் ஸமுபாச்ரித:

—கீதை.

தனித்திருந்து உண்டி சுருங்கி, மனம் மொழி, மெய்யையடக்கி யாண்டும் தியான யோகத்தில் திளைத்திருந்தும் வைராக்யம் பூண்டவனு விஷயப் பற்றுடன் கூடிய லௌகிக புத்தியுடைய ஒரு

வன் பலபேருடன் சேர்ந்திருந்து காலங்கழிக்க விரும்புகிறுன். பேச்சுக்கு ஆள் இல்லாவிட்டால் பைத்தியம் பிடித்தவன் போன்று அவன் ஆகிறுன். யோகிக்கோ தனித்திருக்குமளவு பெருமகிழ்ச்சி யுண்டாகிறது. புதிதாக தனித்திருந்து பழகுபவனுக்கு, மனதைப் பரிசிலனை பண்ண இயலுகிறது. உணவு உடலைப் பேணுவது போன்று ஏகாந்தம் மனபரிபாகத்துக்குப் பயன்படுகிறது. சாதனத்தில் முதிர்ந்தவன் தனித்திருக்கும் போது ஆத்மபோதத்தில் திளைத்திருக்கிறுன். மிகைபட்ட உணவு உடலுக்குச் சுமையாகிறது; சோம்பலையும் உண்டு பண்ணுகிறது. குறைப்பட்ட உணவு பலவீனத்தில் கொண்டு சேர்க்கும் அளவுடன் உண்பவன் யோகியாகிறுன். மனதில் தெளிவும் உடலில் ஊக்கமும் அதனுல் உண்டாகிறது. யோகியின் ஆணைக்கு உட்பட்ட சித்த விருத்திகளே அவனுடைய உள்ளத்தில் உண்டாகின்றன. மனது அடங்கி இருப்பதற்கு அது அறிகுறியாகும். அவன் மிகைப்படப் பேசான். பயன்படாத புன்மொழிகள் அவன் வாயினின்று வர மாட்டா. மொழியை அடக்கியதன் பயன் அதுவாம். நல்லசாதகனது உடல் யாண்டும் அசைவற்றிருக்கும். அனுவசியமாக அது இயங்காது. ஆத்ம சொரூபத்தில் மனது மகிழ்ந்து குவிந்திருப்பது தியானமாகிறது. உலகவியவகாரம் பண்ணுவது சாதாரண மனிதனுக்கு எவ்வளவு இயல்பானதோ அவ்வளவு இயல்பானது தியானம் பண்ணுவது. வைராக்யம் என்பது பற்றின்மை. இம்மையிலும் மறுமையிலும் உள்ள விஷய இன்பங்களில் பற்றுவைக்காதிருப்பது யோகத்துக்கு உற்ற உபாயம்.

## நான்கு வகையினரில் சிறந்தவர் யார்?

''தேஷாம்ஞானி நித்ய யுக்த ஏகபக்திர் விசிஷ்யதே
ப்ரியோஹி ஞானினோ S த்யர்த்த மஹம் ஸசமமப்ரிய:''

நான்கு வர்ணத்தாருள் இடையரு யோகம் பூண்டு மாருத பக்தி பண்ணும் ஞானி மேலானவன்; ஏனென்ருல் நான் ஞானிக்கு மிகப்பிரியமானவன். அவனும் எனக்குப் பிரியமானவன்.

மஹாவிஷ்ணுவுக்கு ''சிஷ்டேஷ்ட:'' என்பது அறிஞர்களால் விரும்பப்படுபவன் என்று ஒரு பெயர் உண்டு. பக்தியின் மிகுதியால் பக்தனுக்கு இந்த ஞானம் வருகிறது.

போற்றுதலுக்கு உரியவர் பரமாத்மா ஒருவரே என்று ஞானி அறிகிற படியால் அவரிடத்து மாருத பக்தி உண்டாகிறது. தன்னைத்தான் விரும்புவது உயிர்களின் இயல்பு. பின்பு தன் உயி

ருக்கு உயிர் இறைவன் என்பதை சுவானுபவத்தில் அறிபவன் ஞானி. ஆகையால், அவன் இறைவனிடத்து அத்தகைய உறவு பூணுகிறுன். பகவத் தரிசனம் பெற்ற பிறகு ஒருவன் தானே தெய்வப் பேற்றியுடையவனுக மாறிவிடுகிறுன். மெய்யடியார்கள் பகவத் விஷயத்தில் அவகாஹிக்க வேணுமென்று நெஞ்சில் நினைத்த போதே கால் தடுமாற்றமும். நெஞ்சழிவுங், கண் சுழலலும், என்ற படி ஸர்வேந்திர்யங்களுக்கும் சோர்வு பிறக்கும் ஆதலால் அப்படிப் பட்ட நிலைமை எம்பெருமானருளாகும்; என்பதாம்.

## கடவுள் ஆட்டுவிக்கிருர் என்ற கருத்தில் வரும்பயன்

''தமேவசரணம் கச்சஸர்வ பாவேன பாரத
தத்ப்ரஸாதாத் பராம் சாந்திம் ஸ்தானம் ப்ராப்ஸ்யஸி சாஸ்வதம்''

—கீதை.

அர்ஜுனு, எல்லாப்பாங்கிலும் அவனையே தஞ்சமடை. அவனருளால் மேலாம் சாந்தியும் நிலைத்துள்ள வீடு பேறும் பெறுவாய்.

எல்லாபாங்கிலும் அவனையே தஞ்சமடைதல் ஜீவாத்மாவினது செயற்கரிய செயலாகும். உடலை தன்னுடையது என்று கருதுதல், தன் செயலுக்குத்தான் கர்த்தாவென்று நினைத்தல், உலக நடை முறையில் தனக்குத்தனி அந்தஸ்து ஒன்று உண்டு என்று எண்ணுதல் இவையாவும் ஜீவபோதத்தை வளர்க்கின்றன. அது தஞ்சமாகாது. கடலில் அலை இருப்பது போன்று ஜீவாத்மாக்கள் பரமாத்மாவில் இருக்கின்றன. அலைக்குச் சொந்தமான நீர் கிடையாது. ஜீவனுக்குச் சொந்தமான சரீரம் கிடையாது. அலைக்கிருக்கின்ற வடிவம் வேளைக்கு ஒன்று. தேகத்துக்கு இருக்கிறவடிவமும் அத்தகையது. அலையின் செயலோ உண்மையில் கடலின் செயல். கடலுக்கு அன்னியமாக அலையிருக்க முடியாது. ஜீவனுடைய செயல்களெல்லாம் உண்மையில் ஈசனுடைய செயல்கள், ஈசனுக்கு அன்னியமாக ஜீவர்கள் இல்லை. இப்பேருணர்ச்சியில் நிலைபெற்றிருப்பது தஞ்சமாகும்.

பாண்டவர் விதுரர் திரௌபதி குசேலர், முதலாயினேர் கிருஷ்ணனைத் தஞ்சமடைந்திருந்தனர். உடன் பிறந்த சகோதரர்கள் தசரதராமனைத் தஞ்சமடைந்தனர். குகன், சுக்ரீவன், விபீஷணன்,முதலாயினேர் அவனைத் தஞ்சமடைந்தனர். அங்ஙனம்

அடைக்கலம் புகுந்தவர்க்கு அமைதி உடனே உண்டாயிற்று, கைகேயி, வாலி, இராவணன் முதலியவர்கள் அடைக்கலம் புக வில்லை; அவர்கள் பெரும் துன்பத்துக்கு ஆளாயினர்.

ஈசனுடைய அருள் என்னும் காற்று சதா வீசிக்கொண்டு இருக் கிறது தங்களை முற்றும் ஈசனிடம் ஒப்படைத்தவர்கள் அக் காற்றைப் பயன்படுத்தும் மாலுமிகளுக்குச் சமமானவர்கள். காற்றைப் பயன்படுத்திக் கப்பலை செலுத்தும் மாலுமிக்குக் கஷ்ட மில்லை. அருளைப் பயன்படுத்தும் அன்பனுக்கு. அல்லல் இல்லை. அவன் கருமம் செய்வதற்கிடையில் கருமபந்தம் கலைகிறது. சாந்தி யும் முக்தியும் அவனுக்கு வாய்க்கின்றன.

## பகவான் காட்டும் நலம்தான் யாது?

''மன்மனு பவமத்பக்தோ மத்யாஜிமாம் நமஸ்குரு
மாமே வைஷயஸிஸத்யம் தேப்ரதிஜானே
ப்ரியோSஸிமே''

என்பால் மனம் வைத்து. என்னிடம் பக்தி பூண்டு என்னை ஆராதித்திடுவாய். என்னை வணங்கு. என்னையே அடைவாய். உனக்கு உறுதி கூறுகிறேன். எனக்கினியான் நீ.

சத்தியம் சொல்லுகிறேன் என்று சத்யப் பொருளாகிய பகவான் பகருகிறுர்.

க்ருஷ்ணனுஸ்மரண தேவ பாபஸங்காத-பஞ்ஜர:
சதா பேதமாயாதி கிரிர்-வஜ்ரஹதோ யதா

கிருஷ்ணனைத் தொடர்ந்து நினைப்பதாலேயே பாபக் கூட்ட மாகிய இரும்புக்கூடு மலையானது இந்திரனுடைய வஜ்ராயுதத் தால் எப்படி நொறுங்குமோ அப்படியே சுக்கு நூருக உடைந்து போகும்.

''சர்வம் கலுஇதம் ப்ரஹ்ம'' ''நேக நாநாஸ்திகிஞ்ச''
''ப்ரஹ்மமெவேதம் ஸர்வம்'' ''ஆத்மைவேதம்ஸர்வம்''
''அஹமேவ இதம்சர்வம்''

மஹாவாக்யங்களில் சொல்லியதுபோல் அகண்டாகார ஏக விருத்தியை யடைந்தாலல்லது ஏகத்வஞானம் அடைய முடியாது. ஓம் என்னும் பரமசிரேஷ்டமான மந்திரத்தின் ரகஸ்யத்தைத் தெரிவிக்கிறேன் கேளுங்கள்,

"ப்ராணந் ஸர்வாந் பரமாத்மனி ப்ரண
மயதீ இதிப்ரணவ:"

என்னும் அதர்வசி உபநிஷத்வாக்ய ரீதியாய் ப்ராணிகளைபரமாத்ம ஸ்வரூபத்தில் லயிக்கச்செய்கிற சாமர்த்தியமிருப்பதால் "ப்ரணவம்" என்று சொல்லப்படுகின்றது.

"யயா ஸவப்னம் பயம் சோகம் விஷாதம்மதமேவச
நவிமுஞ்சதி துர்மேதாத்ருதி ஸாபார்த்ததாமஸி"

தமோகுணமும், அக்ஞான இருளும், ஒன்றோடொன்று சேர்ந்தவைகளாகின்றன. தமோகுண உறுதிக்குத்தக்க சான்று திருதராஷ்டிர மன்னன் ஆவான். அவன் பிறவியிலேயே குருடன். தெளிந்த அறிவும், நல்ல விவேகமும் இன்மைக்கு அவன் அந்தகனாயிருந்தது புறச்சின்னமாகும். துரியோதனன் முதலாயினோர் அவனுக்கு புதல்வர்களாயிருந்ததும் பொருத்தமானது. ஏனென்றால், அக்ஞானத்தினின்றே கேடுகளனைத்தும் உதிக்கின்றன. குருட்டு அரசனுக்கு ராஜ்யத்தில் பெரும்பற்றுதல் இருந்தது. தன் புதல்வர்களின் கையை விட்டு தனது இராஜ்யம் தனது புதல்வர்களுக்கில்லாமல் போய் விடுமோ என்ற அச்சம் அவனுக்கு அடிக்கடி உண்டாயிற்று. தனது புதல்வர்கள் புரிந்த அடாத செயல்களை அரசன் கேள்வியுற்று துயரத்தை அடைந்தான். ஆனால் புதல்வர்கள்மீது அவன் தீவிரமான நடவடிக்கை ஒன்றும் எடுத்துக் கொள்ளவில்லை. தனது புகழுக்கும் புதல்வர்களுக்கும் பங்கம்வந்து விடுமென்று அரசன்மனம் கலங்கினான். ஆனால், பீஷ்மர், துரோணர், கிருஷ்ணன் போன்றவர்களது புத்திமதியைக் கேட்க அவன் ஆயத்தமாயில்லை. எப்படி இருந்தாலும் தானே பேரரசன் என்ற செருக்கும், அவன் புதல்வர்களே அரசாளவேண்டுமென்ற எண்ணமும் அவனது உள்ளத்தில் நிறைந்திருந்தன. ஆகவே தமோகுணம் படைத்தவர்களில் திருதராஷ்டிரனும் ஒருவனாவான்.

திருதராஷ்டிரன் போன்ற மக்கள் பலரை இன்று நாம் சமூகத்தில் காணலாம். முன்னோர்கள் தேடிவைத்த செல்வம் அவர்களுக்குச் சொந்தமானதாயிருக்கிறது. ஆனால், நல்லறிவும், முயற்சியும் அவர்களிடத்து இல்லை. அந்த அளவில் குருட்டரசன் புதல்வர்கள் குருடரேயாவர். உண்பதும் உறங்குவதுமே அவர்களுக்கு முக்கியமான தொழில்களாகும். என்றும் செல்வத்தை முறையாகக் காக்கவும், வளர்க்கவும் அவர்களுக்குத் தெரியாது. எனவே, நாடு

நமது கைவிட்டுப் போய்விடுமோ என்ற அச்சம் அவன் உள்ளத்தை உறுத்தியது. செல்வத்தில் சில பகுதி விரயமான பிறகே அவர்களுக்கு விஷயம் விளங்கிற்று. பின்பு அதைக் குறித்து அவர்கள் துன்பத்தில் அழுந்திவிட்டார்கள். ஒட்டகம் முட்செடியைப் பெருவிருப்பத்தோடுதின்கிறது. முள்தைத்து அதன் உதடெல்லாம் ரத்தம் சொட்டினாலும் அது முள்ளைத் தின்பதை நிறுத்துவதில்லை அது போலவே விஷயப்பற்று இருப்பவர்களின் போக்கும் அமைகிறது.

### பகவான் சொன்னது

காலோऽஸ்மி லோகக்ஷயக்ருத் ப்ரவ்ருத்தோ லோகான்
ஸமாஹர்துமிஹப்ரவ்ருத்த:
ருதேऽபித்வாம் நபவிஷ்யந்தி ஸர்வேயேऽவஸ்திதா:
ப்ரத்யனீகேஷு யோதா:''

உலகங்களை அழிக்கவல்ல காலன் நான். உலகங்களை சங்கரிக்கத் தலைப்பட்டிருக்கிறேன். (அர்ஜுன) நீபோரினின்று பின் வாங்கினலும், உன்னை எதிர்த்துள்ள சேனைகளில் அணிவகுத்து நிற்கும் போர் வீரர்கள் எல்லாரும் வாழமாட்டார்கள்.

### ''நீ யார்'' என்ற கேள்விக்கு ''நான் வல்லமை வாய்ந்த காலம்'' என்ற பகவான் விடைவருகிறது

'உம் செயல் யாது? என்ற கேள்விக்கு, உலகங்களையும் உலக மக்களையும் எடுத்து விழுங்குவது தம் பிரவிருத்தி என்று கண்ணன் சொல்லுகிறார். உலகத்தில் தோன்றியவைகளைச் சிறிது சிறிதாக அவர் சதா விழுங்கிக் கொண்டிருப்பது போன்று, பெருவாரியாக சிலவேளைகளில் பகவானுக்கு அனைத்தையும் விழுங்கவேண்டிய அவஸ்யம் ஏற்படுகிறது. விழுங்கவேண்டியவைகளில் மகாபாரத யுத்தமும் ஒன்றாக அமைகிறது. ஏன் அப்படி நடக்கவேணும் என்ற கேள்வி எழுமிடத்தில் அவையாவும் ஈசன் செயல். எந்த வேளையில் உலகை எப்படி அழிக்கவேண்டுமோ அப்படி அவர் அழிக்கிறார். சிறியது பெரியது ஆகிய எல்லாம் அவர் செயல் என்று அறிபவன் அவரை உண்மையில் போற்றுகிறான். பின்பு, பயங்கரமான எச்செயலைக்கண்டும் அவன் நடுங்குவதில்லை. பீஷ்மர் துரோணர், கர்ணன் முதலிய போர் வீரர்கள் அனைவரும் அழியப்போவது திண்ணம் என்று கூறி அர்ஜுனனுக்கு அப்பொழுது பகவான்

தனது அகண்டவுருவத்தைக் காட்டினர், பாட்டனரையும், ஆசாரியரையும், கொல்லுதல் தகுமோ என்று தயங்கிய தனஞ்ஜயனுக்கு அச்செயல் தன்னுடையதல்ல என்ற தேற்றம் இப்பொழுது பகவானல் ஏற்படுகிறதேயொழிய வேறில்லை. கர்ணன்மடிவதும் தன்னைப் பொருத்ததன்று என்று அர்ஜுனன் தெளிவு பெற்றன்.

அர்ஜுனன் யுத்தத்தில் இறங்காவிட்டாலும் யுத்தத்திற்கு வந்திருக்கும் வீரர்கள் அனைவரும் மடிவது நிச்சயம். அப்படியானல் அர்ஜுனன் யுத்தத்தில் தலையிடுவானேன்?

ஜீவர்கள் செயல் புரிதலை அல்லது புரியாதிருத்தலை முன்னிட்டு பகவானுடைய காரியம் எவ்விதத்திலும் மாறுதல் அடைவதில்லை. அவனது திட்டத்தில் ஒழுங்கும், உறுதியும் உண்டு. அதில் கலந்து கொள்கிற ஜீவனுக்கு எல்லா நன்மையும் உண்டு. துஷ்டர்களைத் தண்டிப்பது ராஜதர்மம். ஆகவே அதன் பொருட்டு அர்ஜுனன் யுத்தத்தில் இறங்குவது அவனுக்கு முதற்கடமையாகும். அவ்விதச் செயலுக்கும் அவன் தகுதியுடையவனகிறன். எப்போதும் நற்செயல் புகழைத் தருகிறது. நன்மைக்கு இடைஞ்ஜலாயிருப்பவனே பகைவன் ஆகிறன்; அவனை வெல்லுவது நன்மைக்காகப் பாடுபடுவதாகும். தான் மட்டும் நன்மை செய்தால் போதாது. இடையூறு உண்டு பண்ணுபவனை எதிர்ப்பது ராஜதர்மம், தர்மத்தை நன்கு கடைப்பிடிப்பவர்க்கு இம்மையுமுண்டு; மறுமையுமுண்டு, முக்தியுமுண்டு; அதில் முதலாவது இகலோக வாழ்க்கையில் சிறப்புண்டு. ஆக செல்வம் நிறைந்த ராஜ்யத்தோடு கூடிய இகலோக வாழ்க்கையும் தர்மத்தின் பலனும். அது முத்திக்கும் படிப்படியாக எடுத்துச் செல்லவல்லது.

அதர்மத்தில் மூழ்கிய எதிரிகளை மாய்க்க பகவான் திட்டம் போட்டுள்ளார். அர்ஜுனன் அதிக சிரமம் எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை. ஒப்புக்கு தனஞ்ஜயன் போர் புரிந்தாலும் போதுமானது. ஆயினும் அவனைப் பற்றிய உண்மை என்னவென்றல் அவன் இடதுகையாலும் நன்கு அம்பு எய்ய அவன்வல்லவன். துணிந்து சண்டை செய்வானனல் யாரையும் தோற்கடிக்க வல்லவன். அத்தகையவன் இந்த சிறந்த சந்தர்ப்பத்தைக் கை விடலாகாது, தேவர்களையும் வெல்லவல்ல துரோணர் பீஷ்மர் முதலியவர்களை வென்றன் என்ற கீர்த்தியானது அர்ஜுனன் பகவான்கையில் கருவியாயிருந்ததால், எளிதில் வந்தமைந்தது. தக்க வேளையில் தக்க கடமையைச் செய்கின்றவனுக்கு எல்லா மேன்மைகளும் எளிதில் வாய்க்கின்றன,

## பகவான் உவாச

அர்ஜுன, துரோணரையும் பீஷ்மரையும் கொல்லுவது தர்மத்துக்கு முரண்பட்டதன்று என்று முன்னமே பகர்ந்திருக்கிறேன். இனி அவர்களைக் கொல்லமுடியுமா என்ற ஐயம் உனக்கு எழுகிறது. ஏனென்றால், துரோணர் தெய்வீக அஸ்திர சஸ்திரங்களையுடையவர்; மேலும் குரு பீஷ்மருக்கோ அவர் விரும்பினாலொழிய மரணம் வராது. இதுவரையில் அவரை யாரும்வென்றது கிடையாது. ஜயத்ரதனுடைய தலையை யார் பூமியில் வீழ்த்துகிறானோ அவனுடைய தலைவெடித்துப் பூமியில் விழும்படி ஜயத்ரதனுடைய தந்தை கடும் தவம் புரிகிறார். ஆக அதுவும் கஷ்டத்துக்கு ஏதுவான யுத்தம். இனி கர்ணன் விஷயமும் அப்படியே இருக்கிறது. அவன் இந்திரனிடத்திருந்து சக்தி, என்னும் ஆயுதத்தைப் பெற்றிருக்கிறான். கர்ணன் அதை யார்மீது ப்ரயோகித்தாலும் அது வீண்போகாது. அர்ஜுனனைக் கொல்லுதற்கென்றே அவன் அதை ஆயத்தப்படுத்தி வைத்திருக்கிறான். இந்த நெருக்கடிகளை நினைத்து அர்ஜுனன் அஞ்சிவருந்துவது இயல்பு. அக்ஞானத்தினால் ஞானம் மூடப்பட்டுக்கிடப்பவன் உலக வாழ்க்கையில் பந்தப்பட்டு மோகமடைந்து இருக்கும் பார்த்தனுக்கு, பகவான் தனது அகண்ட விஸ்வரூபம் காட்டினபோது, மெய் உணர்வுபெற்று ஞானக்கண்ணால் எங்கும் நிறைந்தவன் இறையவன் என்பதைக் கண்டான். இருகரங்களைக் கூப்பி அஞ்சலி செய்த வண்ணமாக, ஓ பரமகாருண்ய பராபரமான தயாபரனே! உம்மை ஓர் அவதாரபுருஷனாகவும், துஷ்ட நிக்ரஹ நிமித்தமாகவும் உதித்தவனென்று அறியாமல் உம்மைமைத்துனரென்றும், ஹே, கிருஷ்ணா என்றும் தோழனென்றும் அழைத்தேன்.

## அர்ஜுன உவாச

''ஸகேதி மத்வா ப்ரஸபம் யதுக்தம் ஹேக்ஷ்ண
ஹேயாதவ ஹேஸகேதி
அஜானதா மஹிமானம் தவேதம் மயா ப்ரமா
தாத் ப்ரண யேன வாபி''

உமது பெருமையை யறியாது. தோழனென்றும், கிருஷ்ணா என்றும், யாதவா என்றும், கூட்டாளி என்றுப் பணிவின்றிம் பகர்ந்தேன். ஸாங்கேத்யம் ''பாரி ஹச்சஞ்ச ஸ்தோபம் ஹேளனமேவவ வைகுண்ட நாம கிரஹணம் அசேஷகரம்விதும்'' ஹேளனமாக.

உமது திருநாமங்களைச் சொன்னாலும், எது பாபமெல்லாம் பறந்து போகும். என்பதை அறிவேன். "கிருஷ்ணு! உமது திவ்விய சொருபத்தை உமது அருளால் எனக்கு ஞானக்கண் கிடைத்தமை யால் நான் பார்க்கிறேன். எங்கு திரும்பிப் பார்த்தாலும், எல்லாம், உன்னுடைய சொருபமாகவே காணப்படுகிறது. ஆகையால், நாலாபக்கங்களிலும், உனக்கு நமஸ்காரம் செய்வது பொருத்த மாகும். கிருஷ்ணு! நீர் ஒப்பற்ற பெருமையுடையவர். இந்த சரா சர லோகத்துக்குத் தந்தையும், போற்றுதற்குரிய வரும், குரு வுக்குக் குருவும் ஆகிறீர். மூவுலகிலும் உமக்கு ஒப்பானவர் இல்லை. உம்மிலும் மிக்கார் யாவர்?

அர்ஜுனன், பகவான் மஹிமையை அறியும் போது. போற்று தற்குரிய பொருள் என்பது புலப்படுகிறது. பக்தனுக்கும் பக வானுக்கும் உள்ள இணக்கம், தடைப்படுவதில்லை. தந்தைக்கும், மகனுக்கும், பிரிக்கமுடியாத தொடர்புண்டு. ஆனால், பயபக்தி யால் பிள்ளை பிதாவிடத்துச் சம உரிமை கொண்டாடுவதில்லை. அது போல், அர்ஜுனன் பராபக்தியில் ஈசுவரனைத் தனக்கு அத்யந் தம் நெருங்கிய அன்பனாகக் கருதுகிறான். அது கிருஷ்ண பரமாத்மா விடம் கோபஸ்திரீகளுக்கு இருந்த பக்தி போன்றது. ஆனால், அவர் கள் கிருஷ்ணனை எப்பொழுதும் கோபிகாநாதன் என்று கருதி யழைத்தனரே தவிர, ஜகந்நாதன் என்று கருதி அழைத்ததில்லை.

**அர்ஜுனன் எத்தகைய வடிவத்தைக் காணவிரும் பினனே அந்த வடிவத்தைப் பகவான் காட்டினர்.**

**அர்ஜுன உவாச**

"அத்ருஷ்டபூர்வம் ஹ்ருஷிதோऽஸ்மி த்ருஷ்ட்வா
பயேனச ப்ரவ்யதிதம் மனோமே.
ததேவ மே தர்சய தேவரூபம்
ப்ரஸீத தேவேச ஜகன்னிவாஸ"

தேவா, முன்பு காணாததைக் கண்டு மகிழ்ந்தவனாயிருக் கிறேன். மேலும் மனது அச்சத்தால் நடுங்குகிறது. முன்னைய இனிய வடிவத்தையே காட்டுக. தேவேசா! ஜகந்நிவாஸா அருள் புரிக என்றான். ஓ, ஜகத் ரக்ஷகா. பலியினிடம் (குட்டனாக) வாமனனாகச் சென்றவனே! "ஸைலோऽபி பூஜ்யோऽபவத்" என்றது போல். கோவர்த்தனகிரியை ஆயர்களால் பூஜிக்கச் செய்தவனே! அவர் களால் படைக்கப்பட்ட கறியும், தயிரும் கலந்து அனைத்தையும்

புஜித்த பிறகு எனக்குப் பசி தாங்க முடியவில்லை என்று யசோதை யின் இடம் வந்து அம்மா எனக்குப் பசியாக இருக்கிறது. எனக்கு அன்னமிட வா என்று அழைத்தவன்.

**பாசுரம்: யசோதை கூறுவது**

“கேட்டறியாதன கேட்கின்றேன்
கேசவா கோவலரிந் திரற்கு.
காட்டிய சோறுங் கறியுந் தயிரும்
கலந்துடனுண்டாய் போலும்.
ஊட்டமுதலி லேனுன்றன்னைக் கொண்டு
ஒரு போதுமெனக் கரிது.
வாட்டமிலா புகழ் வாசுதேவா
உன்னையஞ்சு வனின்று தொட்டும்.”

—பெரியாழ்வார்.

கண்ணபிரானே உன் விஷயமாக இதுவரை நான் கேட்டறியா தவற்றை இன்று கேட்கப் பெற்றேன்; அவற்றைச் சொல்லுகின் றேன் கேள்; கோபாலர்கள் மழையின் பொருட்டாக. இந்திரனைப் பூஜிப்பதற்காக, அனுப்பிய சோற்றையும், அதுக்குத்தக்க கறியை யும், தயிரையும், ஒன்று சேரக் கலந்து உண்டவனன்றோ நீ; இப்படி புஜிக்கவல்ல பெருவயிற்றுளனான உன்னைப் பற்றி பலபேர் சொல்லக் கேட்டேன். அது போல் உனக்கு நாடோறும் அவ்வுளவு சோற்றை ஊட்டத்தக்க கைமுதல் (அல்லது) கைச்சரக்கும் பெற்றிலேன். ஹே! கண்ணபிரானே! உன்னைப் போன்ற பிள்ளையை வைத்துக் கொண்டு ஒரு வேலையும் எனக்கு ஆற்ற முடியாது;

ஹே, கோவிந்தா உன்னைப்பற்றி இன்று முதலாக அஞ்சுகின் றேன் என்ற யசோதையைப் போலவே நானும் உன் விஷயத்தில் அஞ்சுகிறேன். உமது அகண்ட ஸ்வரூபம் கண்டு என் உடல் நடுங்கு கிறது. உமதருளால் ஞானக்கண் பெற்று உமது உருவத்தைப் பார்த்தமையால் நீர் பரவஸ்து வென்றும், அறிந்தேன். ஆனால், என் ஊனக்கண் பார்த்து இருக்குமாகில் ஜீவனானது சரீர வியோக மாகுமேயன்றி உடலில் தரித்திருக்காது. உருத்திரர், ஆதித்தியர், வசுக்கள்—சாத்தியர், விசுவேதேவர். அசுவனிதேவர் மருத்துக்கள். ஊஷ்மபர், கந்தர்வர், யக்ஷர், அசுரர், சித்தர் இவர்கள் அனைவரும் வியப்படைந்து உம்மையே பார்க்கிறார்கள்.

ஊஷ்ம்பர் என்ருல் உஷ்ணமாயிருப்பதை பானம் செய்பவர்கள் என்று பொருள்ப்படுகிறது. ஓ தேவர் தலைவா, அச்சமூட்டும் கோரப் பற்களுடன் ஊழித்தீக்கு ஒப்பான உனது முகங்களைக் கண்டதும் எனக்கு திசைகள் தெரியவில்லை; அமைதியும் அடைந்திலேன், உமது அலகில்லா ஜோதி திசைகளை விழுங்கிவிட்டது. ஆகவே, மீண்டும் நான் அமைதியடைதற் பொருட்டு, சாந்த ரூபத்தைக் காட்டியருள்வீராக! என்ருன்.

## பகவான் உவாச

அர்ஜுன! இப்படிப்பட்ட எனது கோரரூபத்தைக் கண்டு உனக்குக் கலக்கமும் மயங்கிய மனநிலையும் வேண்டாம். உனது அச்சம் நீங்கி மகிழ்ந்த மனதுடன் திரும்பவும் எனது பழைய வடிவத்தைக் காண்பாயாக என்று வாசுதேவர் அர்ஜுனனுக்குக் கூறிவிட்டு சொந்த வடிவத்தை அப்படியே காண்பித்தார். மஹாத்மாவானவர் இனிய வடிவத்தைக் காட்டினர்; அஞ்சினவனைத் திரும்பவும் தேற்றினர்.

## அர்ஜுனன் உவாச

"துஷ்வேதம் மானுஷம் ரூபம் தவஸௌம்யம்
ஜனர்த்தன
இதானிமஸ்மி ஸம்வ்ருத்த: ஸசேதா: ப்ரக்ருதிம்கத:

ஜனர்தன, உமது இந்த இனிய மானுட வடிவங் கண்டு இப்பொழுது, நான் மனம் தெளிந்து என் இயல்பை அடைந்தவனய் இருக்கிறேன்.

## பகவான் உவாச

அர்ஜுன, மாருத பக்தியாலேயே இவ்விதம் என்னை உள்ளபடி உணரவும், காணவும், அடையவும் கூடும். இதுவே அனன்ய பக்தி எனப்படும்.

ஈசுவரனிடம் நமக்கு எவ்வளவு தீவிரமான பக்தி இருக்க வேண்டுமென்பதை நாம் அறிந்துகொள்ள வேண்டும்? தனது கணவனிடம் ஒரு கற்புடைய மாதுக்கு இருக்கும் அன்பு, தான் புதைத்து வைத்த பணத்தினிடம் ஒரு லோபிக்கு இருக்கும் ஆசை, உலகப் பொருள்களைப் பெற வேண்டுமென்று பற்றுள்ளவர்கள் கொள்ளும் ஆவல், இந்த மூன்றும் ஒன்று கூடினுற் போன்ற தீவிர பக்தியானது ஈசுவரனைக் காண வேண்டியதற்காக நம் மனதில் உதித்திருக்குமானல் அப்போது நாம் நிச்சயமாக அடைவோம்.

''சரத்தாவானஸூ யஸ்ச
ச்ருணுயாதபி யோநர: |
ஸோऽபி முக்த: சுபான் லோகான்
ப்ராப்னுயாத் புண்யகர்மணும்'' ||

ஊக்கம் கொண்டு அவமதிக்காது இதைக் கேட்கவாவது செய்யும் மனிதனும் விடுதலையுற்று நல்வினையாளர் எய்தும் நல்லுலகங்களை அடைவான்.

உணவை அலக்ஷ்யப்படுத்துபவன் தனதுடல் வாழ்வை அலக்ஷ்யப்படுத்துகிறுன். உணவுப் பொருளின் தத்வத்தை அறிந்து ஒருவன் உணவு உண்கிறுன். மற்றொருவன் அதன் தத்வம் தெரியாது விருப்புடன் அதைப் புசிக்கிறுன். அறிந்தவன் அறியாதவன் ஆகிய இருவரும் உணவினின்று பெறும் நன்மை ஒன்றேயாம். அதேவிதத்தில் கிதாவாக்யம் (சாஸ்திரம்) சிரத்தையோடு கேட்டுத் தெரிந்து கொள்பவன் எல்லா நன்மைகளையும் அடைகிறுன். பிறர்க்கு எடுத்துப் புகட்டுவதால் அது ஒருவன் மனதில் நன்கு பதிகிறது. பக்தி விஸ்வாசத்துடன் கேட்பதால் இன்னொருவன் மனதில் அது பதிகிறது. இருவரும் கீதா தத்வத்தை அறிந்து கொண்டவர் ஆகின்றனர். மனதுக்கு ஊட்டும் நல்லெண்ணங்களுக்கு சமஸ்காரங்கள் என்று பெயர். பகவத் விஷயங்களைக் கேட்பது சமஸ்காரங்களுள் சிறந்த சம்ஸ்காரமாகிறது. பக்தி சிரத்தையுடன் கேட்பவன் கீழ்மையினின்று விடுதலையடைந்து முன்னேற்றமடைவது உறுதி. ஒருவன் செய்யும் பணியில் மனவுறுதியுடன் செய்வது சித்தியடைவதாகும்.

### பகவான் உவாச

''அச்ரத்ததாணு: புருஷா தர்மஸ்யாஸ்ய பரந்தப
அப்ராப்ய மாம் நிவர்தந்தே
ம்ருத்யு ஸம்ஸம்சார வரத்மனி''

அர்ஜுனு, (ஜீவாத்துமா பரமாத்துமாவை அடையும் படியான, உண்மை வழியை, அறியும்படியான மார்க்கத்தில்) இந்த தர்மத்தில் சிரத்தை இல்லாத மனிதர்கள், என்னை அடையாது, மரண சம்சார மார்க்கத்தில், உழல்கின்றனர்.

—10—

அர்ஜுனு, நிலத்திலே துள்ளி வீழ்ந்து வருந்துகின்ற மீனுனது அருகில் நீர் இருக்கிறது என்பதை அறிந்து கொள்ளாவிட்டால், அந்நீருக்குள்ளே, அது திரும்பித் துள்ளிக் குதிகாவிட்டால், அது படும் துயரத்துக்கு முடிவில்லே. மனிதனுக்கு சர்வதுக்க நிவர்த்தி செய்வது பரஞானம், அதற்கு ஏதுவான நெறியைச் சிரத்தையுடன் பின்பற்றுதல் வேண்டும், அப்படிப் பின் பற்ருதவர்கள் பிறவிப் பிணியில் வருந்துவார்கள் என்பது நிச்சயம்.

''அவஜானந்தி மாம்மூடாமானுஷீம் தனுமாச்ரிதம்
பரம் பாவமஜானந் தோ மமபூத மஹேச்வரம்''

(அர்ஜுனு) என்னுடைய பரசொருபத்தையும், நான் உயிர்களுக்கெல்லாம் ஈசனுயிருப்பதையும் அறியாத மூடர்கள், என்னே ஒரு மானுட வடிவம் எடுத்தவன் என்றெண்ணி என்னே அவமதிக்கின்றனர்.

பகவான் கர்மத்திலும் வடிவத்திலும் கட்டுப்படாதவன் ஜடாகாசத்தை எப்பொருளும் சிதைப்பதில்லே! பின்பு அதற்கப் பாலுள்ள சிதாகாசம் சிதைவுபடுகிறது என்பது பொருந்தாது. அது, நித்ய—சுத்த—புத்த முக்தஸ்தவ பாவமுடையது. எல்லாருக்கும் பொதுவாக அந்தர்யாமியாயிருக்கின்ற பரமாத்துமா உடலில் எங்ஙனம் வாழ வேண்டுமென்பதை மக்களுக்குக் காட்டுதற் பொருட்டே ஓர் அவதார புருஷராக தேகத்தைத் தரிக்கிருர். இதை அறியாதவர் பகவான் எடுத்த அவதாரத்தை மக்கள் உள்ள போது உணர மாட்டாமல் அக்ஞானமென்னும் மயக்கமடைகிருர்கள்.

''ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம்வ்ரஜ
அஹம்த்வா சர்வபாபேப் யோ மோக்ஷயிஷ்யாமி
மாசுச:

எல்லா தர்மங்களேயும் பரித்தியாகம் செய்துவிட்டு என்னே ஒருவனேயே சரணமடைவாயாக. நான் உன்னே எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுவிக்கிறேன். வருந்தாதே.

பக்தன் எப்பொழுதும் தன் தெய்வத்தைச் சார்ந்திருகிருன். தனக்கு வரும் நன்மை கேடுகளெல்லாம் கடவுளது ஆணே. ஆகையால் ஒரு செயலே நன்று என்றும் பக்தன் பொருள்படுத்துவதில்லே. தர்மம். அதர்மம் ஆகிய இரண்டும் ஈசன் செயல் என்ற புனித நிலேயை அடைவனவாகின்றன. பரிபூரண சரணுகதியின் தன்மை

எப்படிப்பட்டது? களைப்படைந்தவன் அன்றைய வேலையை முடித்துவிட்டு பிறகு தன் சரீரத்தைச் சுத்தம் செய்ய வேர்வையை அலம்பிக் கொண்டும் தலையணையின் மீது சாய்ந்து கொண்டும் நிம்மதியாய்ப்படுத்துக் கொண்டும் இருக்கின்ற ஆனந்த நிலையைப் போன்றதாகும். துயரமும், துன்பமும் நீங்கியவன் மேலான இன்பத்தை அடைகிறான்.

## விசிஷ்டாத்துவைத சித்தாந்தம்

இந்த விசிஷ்டாத்துவைத சித்தாந்தத்தை பாரதவருஷத்தில் பிரபலமாக்கினவர் ஸ்ரீராமாநுஜாச்சாயார். இவர் கி.பி. 1017 வருஷம் அல்லது கலியுகாப்தம் 4118க்கு பிங்கள வருஷம் சித்திரை மாதம் சென்னைக்கு 26 மைல் தூரத்திலிருக்கும் ஸ்ரீபெரும் பூதூரில் பிறந்தவர். இவர் தந்தையார் கேசவ சோமயாஜி, யஜுர்வேதி. ஆபஸ்தம்ப சூத்திரத்தைச் சார்ந்தவர். இவர் தாயார் காந்திமதி தேவியார். இவர் தனது பதினைந்து வருஷம் வரையில் தம் வீட்டிலேயே வேதாந்தங்களை வாசித்துக் கொண் டிருந்தார். பிறகு காஞ்சீபுரத்துக்குப் போய் யாதவப் பிரகாசர ரிடம் தத்வசாஸ்த்திரங்களை வாசித்து அவரது ஸ்வரூப அத்து வைத சித்தாந்தம் தமக்கு சம்மதிகொடாமையால் அவரை விட்டு (1) பகவத்போதாயனர். (2) திரமிடாசாரியார் (3) டங்கா சாரியார் அல்லது. பிரம்மாநந்தி (4) குஹதேவாச்சாரியார் (5) ஆசாரிய பாருசி (6) ஆசாரியகபர்த்தி (7) ஸ்ரீநாத முனிகள், (8) யாமுனசாரியரை நாடிவர; அங்கு வந்து சேருவதற்குள் அவர் பரமபதத்திற்கு எழுந்தருளவே, அவருடைய முக்யசிஷ்ய ராகிய மஹாபூரணசாரியரென்னும் பெரிய நம்பிகளை ஆச்ரயித்து விசிஷ்டாத்துவைத சித்தாந்தத்தை தெள்ளத் தெளியக் கற்றுக் கெண்டார். இவர் முதலில் இல்லறத்தில் இருந்தாலும் தம் பதினெட்டாம் வயதில் அதை விட்டு சந்நியாச ஆசிரமத்தில் புகுந்து உலகத்தாருக்கு இந்த விசிஷ்டாத்துவைத சித்தாந்தத்தை போதித்து தமது 120வது வயதில் பரமபதமடைந்தார். இவரி யற்றிய பிரம்ம சூத்திரத்தின் (1) ஸ்ரீபாஷ்யம். (2) வேதாந்ததீபம் (3) வேதாந்தசாரம் (4) வேதார்த்த சங்கிரகம் (5) கீதாபாஷ்யம் (6) கத்யத்திரயம் (7) நித்யகிரந்தம் என்பவை. இவை ஆழ்ந்த கருத்துகளுள்ள தத்துவ சாஸ்திரங்கள். இந்த விசிஷ்டாத்துவைத சித்தாந்தத்தைப் பலர் பல பெரிய கிரந்தங்களாக எழுதி இருக் கின்றனர். சாதாரண வாலிபர்களும் சுலுவில் அறிந்துய்யுமாறு இங்கு சங்கிரஹமாகவும் வினவிடையாகவும் பதிப்பிக்கின்றமை,

நாம் (ஒரு விசிஷ்டாத்துவைதியை பார்த்து) ஐயா—விசிஷ்டாத்துவைத மென்றுலென்ன? (என்று கேட்டால் அவர் சொல்லும் விடையாவது)

அது விசிஷ்ட+அத்துவைதம் என்ற இரண்டு பதங்களால் ஆகிய வார்த்தை; அத்துவைதம் எனில்; இரண்டற்றது=ஒன்றேயுள்ளது; விசிஷ்டமெனில்=சித்து, அசித்து இவைகளை சரீரமாக இருக்கிறதென்னும் விசேஷணத்தைக் காட்டுவதாம்; விசிஷ்டத்துவைதமெனில், சித்து—அசித்து சேர்க்கையினுல் பிரகாசிக்கும் இரண்டற்ற ஒன்றுன பரபிரம்மம் உண்டென்று ஸ்தாபிக்குல் சித்தாந்தமேயாம்.

நாம்—இந்த விசிஷ்டாத்துவைத சித்தாந்தத்தின் முக்கிய கருத்தென்ன?

வி—பரப்ரம்மம் ஒருவரே நித்யமாக இருக்கிறுர் என்பதாம்.

நாம்—அவர் எப்படிப்பட்டவர்?

வி—அவர் நித்தியமாயும், சத்தியமாயும் ஞானமாயும், ஆநந்தமாயும் விபுவாயும்; சர்வஞ்யராயும் சர்வசக்தியுடையவராயும் பிரபஞ்சத்தின் உபாதான காரணராயும் சஹகாரி காரணராயும் இருக்கிறுர்.

நாம்—அவருடைய நாமங்கள் எவை?

வி—வேதங்களில் அவரை சத்து என்றும், விஷ்ணு வென்றும், நாராயணனென்றும், வர்சுதேவனென்றும், புருஷோத்தமரென்றும் பின்னும் பல பெயர்களாலும் புகழப்பட்டிருக்கின்றன.

நாம்—அவர் எப்படிப்பட்டவர்?

வி—(சித்து) = ஆத்மா (அசித்து)=அனுத்மா என்னும். நித்யப் பொருள்களோடு சதா சேர்ந்திருக்கிறுர் இந்த சேர்க்கையினுல் மாத்திரம் அறியக் கூடியவராக இருக்கினும்; அவர் பரகிருதி ஸ்வரூபியல்லவர், அவர் சித்து அசித்துக்களுக்கு வேருகவும், ஞானுத்மாவாகவும் இருக்கிறுர்.

நாம்—பரமாத்மா ஒருவரே நித்தியமானவரென்று முன் சொன்னீரல்லவா? இப்போது சித்தும் அசித்தும் நித்தியப் பொருள்களென்று சொல்லுகிறீரல்லவா. இது எப்படி சாத்தியமாகும்?

வி—பரமாத்துமா ஒருவரே. நித்தியரும், சுதந்தரமுமுடை; யவர்; மற்றவை சித்தும் அசித்தும் பரதந்திரமும் உடையவை.

இந்த சித்தும், அசித்தும், பரபிரம்மமுமாகிய மூன்றும் தனித்தனி யானவைகளாக இராமல் ஒரு பதார்த்தமும் அதன் குணங்களும் கலந்திருப்பது போல; அதாவது - ஒரு கடிதத்தில் அதன் வடிவமும் வருணமும் சேர்ந்திருப்பது போல பரமாத்மா சித்து அசித்தோடு சேர்ந்திருக்கிருர்.

நாம்—இம்மூன்றின் சம்பந்தத்தைப் பற்றி வேதங்களில் என்ன சொல்லப்பட்டிருக்கிறது.

வி—பரப்பிரம்மமாகிய சரீரிக்கு. சித்தும் அசித்தும், சரீரமாக இருகிறதென்றும்; சரீரி இல்லாமல் சரீரமும் சரீரம் இல்லாமல் சரீரியும் இருத்தல் அசம்பாவிதமென்றும் சொல்லப்பட்டிக்கிறது.

நாம்—உபநிஷத்துக்களில் சரீரத்தைப் பற்றிச் சொல்லி இருக்கிறதற்கு இது தானு பொருள்?

வி—உபநிஷத்துகளில் சரீரம் என்னும் பதத்தை மானுஷீக சரீரத்தைப் போன்றவைகளைப் பற்றிச் சொன்னதல்ல; சரீரியின் விலக்ஷணத்தைப் பற்றியே சொல்லப்பட்டிருக்கின்றது. சாரீர மென்ருல் அபிரதக் சித்தமென்றும். அது சேர்க்கையினுல் அபிரதக் சித்தி என்றும்; அதாவது எக்காலமும் பிரிக்கக் கூடாம லும்; சதாகாலமும் சேர்ந்திருப்பதால் சித்து அசித்து ஈசுவரன் என்பவைகள் எப்போதும் பிரிக்கக் கூடாதபடி சேர்ந்து இருக்கிற தென்பது கருத்து.

நாம்—இந்த மூன்றுக்குள் பேதா பேதங்களுண்டோ?

வி—அவுபாதிக மாயாகிருத வித்தியாசங்கள் தவிர வேறு வித்தியாசங்கள் இல்லை. சித்து அசித்து ஈசுவரனுகிய மூன்றும் ஒன்ருெடொன்று சேர்ந்திருப்பது சத்தியம்; அந்த சம்பந்தத்தினுல் தான் பிரம்மத்தை அறியக் கூடும், இதை ஏகத்துவமென்று வேதங்களில் சொல்லப்பட்டிருகின்றது. இந்த சித்து, அசித்து ஆகிய இரண்டுக்கும் இடையில் ஈசுவரன் நடுநாயகமாக இருந்து பிரகாசிக்கின்ருர்.

நாம் — இந்த சித்தாந்தம் அத்துவைத சித்தாந்தத்தை ஸ்தாபிக்கிற உபநிஷத்துக்களுக்கு விரோதமாயிருக்கிறதல்லவா

வி—இல்லை. அசித்து சித்து ஈசுவரருண்டென்னும் சித்தாந்தத் தையும், இந்த அசித்தும் சித்தும் பரபிரம்மத்துக்கு சரீரமாக இருக்கின்றனவென்று ஸ்தாபிக்கிற உபநிஷத்துக்களும் இருக்

கின்றன; ஆகவே. உபநிஷத்துகளில் ஒன்றுக் கொன்று வியதிரேக மான வாக்யங்கள் இருப்பன ப்ரத்தியக்ஷம், அசித்தும் சித்தும் சேர்க்கையே பரபிரம்மத்தின் இலக்ஷணமென்றும். பிரம்மம் இவ் விரண்டிற்கும் நடுநாயகமாக இருக்கிற தென்றும் கொள்ளும் பக்ஷத்தில் உபநிஷத்துகளின் கருத்துகளைச் சமரசப்படுத்தலாம்.

நாம் —வேதங்களில் பரபிரம்மம் நிர்க்குணமானதென்று சொல்லியிருக்கிறதல்லவா?

வி—ஆம். ஆனல் பரபிரம்மமாகிய நித்திய வஸ்து நிர்க்குண மானதென்பதல்ல, ஆனல், மானவ ஜாதியாருக்கு இருக்கும்படி யான பிராக்கிருத சம்பந்தமான பரதந்திரமும் அபரிபூரணமான ஹேயகுணங்களும் இல்லை என்பதே கருத்து.

நாம்--குணங்களென்றுல் என்ன?

வி–பிரகிருதி சம்பந்தமான சத்வ ரஜஸ் தமசென்பவைகளே. இப்படிப்பட்ட பிரகிருதி சம்பந்தமான குணங்கள் பரபிரம்மத் துக்கு இல்லை.

நாம்—பிரம்மத்துக்கு பெயரும் இல்லை யல்லவா?

வி—ஆம். ஆனல் அவரை அக்கினி இந்திராதி சாதாரணப் பெயர்களாலும் விஷ்ணு, நாராயணன். வாசுதேவன் என்னும் அதிவிசேஷப் பெயர்களாலும் பிரஜைகள் பிரார்த்திக்கலாம்.

நாம்—பரபிரம்மத்துக்கு ரூபமும் இல்லையல்லவா?

வி—ஆம். அதற்கு ரூபம், வருண முதலானதுகளுமில்லை. அது எங்கும் நிறைந்தும் எங்கும் பிரவேசித்தும் எல்லையற்றும் இருப்ப தால் எவ்வித ரூபமுமில்லை. ஆனல் அந்தப் பரபிரம்மத்திற்கு இச்சை யுண்டானல் எந்தவித ரூபமாகிலும் எந்தவித வருணத் தோடும் அவதாரமெடுக்கலாம்.

நாம்—இப்படி அவதாரமெடுப்பது கர்மத்தினலா?

வி—இல்லை

நாம்—இப்படி எடுக்கும் அவதாரம் பிராகிருத சம்பந்தமா?

வி—இல்லை. சுத்தசத்துவ குணத்தோடு கூடியது.

நாம்—இந்த அவதாரத்தால் என்ன பிரயோஜனம்?

வி—ஸ்வருபமற்ற பிரம்மத்தைப் பற்றி மனதினல் தியானிப் பது கஷ்டமாகையால் யோகிகள் தியானிக்கும் பொருட்டு யாதா வது ஒரு அவதாரமாக விளங்குகிருர்,

நாம்—அசித்து எப்படி இருக்கிறது?

வி—அது காலம், மூலப் பிரகிருதி, சுத்த சத்வம் என மூன்று விதங்களாக இருக்கிறது.

நாம்—காலமென்றால் என்ன?

வி—அது எங்கும் நிறைந்து நிரந்தரமாக எல்லா வித மாறுதல்களைச் செய்யும் காரணமேயாம். ஆனால் கண்ட காலம் என்பது கிரஹாதிகள் ஒன்றை யொன்று சுற்றுவதனலாகும் ஓரை, நாள், யுகம், கல்பங்களைப் போன்றவை. நிரந்தரமானவைகளல்ல.

நாம்—மூலப்பிரகிருதி அல்லது இயற்கை என்றால் என்ன?

வி—ஒரு பாத்திரத்திற்கு களிமண் எப்படி உபாதான காரணமோ, அப்படி மூலப்பிரகிருதியே இந்தப் பிரபஞ்சத்துக்கு உபாதானகாரணம். அது சித்து என்னும் ஜீவாத்மாவுக்கும், பரமாத்மாவுக்கும் வித்யாசமானது, எங்கும் எப்போதும் ஆதியந்த மற்றும் தனி யோகமானதா இருக்கிறது. அப்படி இருக்கினும் அது பரபிரம்மத்துக்குக் கீழ்ப்பட்டதாம்.

நாம்—இந்த மூலப் பிரகிருதிக்கு வேதத்தில் வேறு பெயர்களுண்டோ?

வி—இந்த இயற்கையாகிய மூலப்பிரகிருதிக்கு அவியக்தமென்றும் பிரகிருதியென்றும் பிரதான மென்றும் தாமஸம் அக்ஷரம் பிரம்மம் என்றும் மாய்கை யென்றாதி பெயர்களால் வழங்கிவரப்படுகிறதன்றியில் அது சத்துவ ராஜஸ தாமச குணங்களுக்கு நடுநாயகமாக இருக்கிறது.

நாம்—அது முதலில் எவ்விதமாக மாறுகிறது.

வி—முதலில் மஹத்தாக (புத்திஸ்வரூபமாக) மாறுகிறது.

நாம்—இந்த மஹத்திலிருந்து உண்டாகும் மாறுதலெது?

வி—அஹங்காரம்

நாம்—இதில் பேதங்களுண்டோ?

வி—சாத்வீகம் வியவஹாரிக அஹங்காரம், இராஜஸம் அல்லது தியாஜஸ அஹங்காரம், தாமஸ் அஹங்காரம் அல்லது பூதாதி அஹங்காரமென மூன்று பேதங்களுண்டு.

நாம்— அஹத்தினுடையவும் அஹங்காரத்தினுடையவும் சுபாவங்களெவை?

வி—பூமியிலிருந்து வெட்டி எடுக்கும் களிமண்ணானது ஒரு பாத்திரத்தைச் செய்வதற்கு முந்திப் பலவித வேறுபாடுகளுக்கு உட்படுவது போலவே இந்தப் பிரபஞ்சத் தோற்றம் ஆவதற்குள் பலவித மாறுபாடுகளைப் பெறுகிறது.

நாம்—சாத்விக அஹங்காரத்திலிருந்து எது உற்பத்தியாகின்றது?

வி—மனம் அல்லது அந்தக் கரணம் கிராணம், ஜிஹ்வை, சக்ஷுஸ, துவக்கு, சோத்திரம் என்னும் ஞானேந்திரியங்களும் உண்டாகின்றன.

நாம்—தாமஸ்அஹங்காரத்திலிருந்து எது உற்பத்தியாகின்றது?

நாம்—கந்தம் ரஸம் ரூபம் ஸ்பரிசம் சப்தம், என்ற பஞ்ச பூதங்களின் லக்ஷணங்களாகிய பஞ்ச தன்மாத்திரைகளுண்டாகின்றன.

நாம்—பஞ்ச பூதங்கள் எவை?

வி—ஆகாயம், வாய்வு, தேஜஸு, அப்பு. ப்ருதிவி என்பவைகளே.

நாம்—இராஜச அஹங்காரத்தினால் என்ன பிரயோஜனம்?

வி—சாத்துவிக அஹங்காரத்துக்கும் தாமச அஹங்காரத்துக்கும் அதாவது ஈசுவரனுடைய இச்சையின்படி எல்லாவற்றையும் உண்டாக்கிய மூலப்பிரகிருதிக்கும் மஹத்துக்கும் உதவி செய்கிறது.

நாம்—இந்தப் பிரபஞ்சம் மண்ணுலகமாக மாறுவதற்கு முன் மூலப் பிரகிருதி என்ன விதமான இருந்தது?

வி—பிரபஞ்சம் மாற்றமாவதற்கு முன்பு மூலப்பிரகிருதி ரூபமற்றதாயும், பார்க்கக்கூடாத அணுரூபமாயும் சூக்ஷமாவஸ்தையிலிருந்தது.

நாம் — சுத்த சத்வமென்றுலென்ன?

வி—ரஜஸ்தமஸ்ஸுக்கள் கலவாமல் கேவல சத்துவமாய் நித்தியமாய் ஞானநந்த ஜனகமாய் கர்மத்தாலன்றிக்கே கேவலம் பிரம்மத்தின் இச்சையாலே விமான கோபுரமண்டப பிராஸாதாதி ரூபங்களாய் பரிணமிக்கக் கடவதாய் நிரவதிக தேஜோரூபமாய் நித்ய முக்தராலும் ஈசுவரனாலும் பரிசோதிக்க வரியதாய் அதியத்புதமாயிருப்பதாம்.

ந—சித்து என்றுலென்ன?

வி—அதுவே ஜீவாத்மா. அது அசித்துக்கும் ஈசுவரனுக்கும் வேருனதாயும்; எவராலும் சிருஷ்டிக்கப்படாமல் நித்தியமாய் அஜடமாய், அணுவாய் ஆநந்தரூபமாய், அவ்வியக்தமாய் அசிந்தியமாய், நிரவயவமாய் நிர்விகாரமாய் ஞானுசிரயமாய் ஈசுவரனுக்கு நியாமகமாய், காரியமாய் சேஷமாய் இருப்பதுவேயாம்.

ந—இந்த ஜீவாத்மாவில், பேதமுண்டோ!

வி - நித்தியர் முத்தர் பிரம்மானந்தர் நித்தியானந்தர் என்று சொல்லும்படி சதாபிரம்மானந்தத்திலிருப்பவர்களே. அவர்கள் பிராகிருத கர்மாதி கஷ்டங்களற்று வைகுண்ட லோகத்தில் சதாவசிதந்து அநந்தர், கருடர் விஷ்வகசேனுதிகளாகப் பிரகாசிப்பார்கள்.

(2) முக்தர் யாரென்ருல் சம்சார பந்த மற்றுப் பரமசுகத்தை அனுபவிப்பவர்களே;

(3) பத்தர் யாரென்ருல், சம்சார கஷ்டங்களில் விழுந்து கர்ம பந்தம் உள்ளவர்களே?

நாம் - பரப்ரம்மமே சகலத்துக்கும் கர்த்தா வென்று முன் சொன்னீர். ஆனுல் இப்போது மூலப்ரகிருதியே உபாதன காரணமாக இருந்தாலும் அந்த மூலப் பிரகிருதியின் சரீரமாகிய பரபிரம்ம மில்லாவிட்டால் பிரபஞ்சம் உண்டாக மாட்டாது. ஆகவே; ஒரு ஆபரணத்துக்குப் பொன்னே முக்கிய ஆதாரமாயிருப்பதைப் போலவும், பரப்பிரமமே மூலப்பிரகிருதியானது சூக்ஷ்மாகாரமாகவும் ஸ்தூலாகாரமாகவும் இருக்கிறது. ஸ்தூலாகாரஸ்திதியினுல் ஜகத் உண்டாகிறது, இந்த தத்வத்தின்படி சூக்ஷ்மாகாரமான மூலப்பிரகிருதியே ஒருகாரியத்துக்கு காரணமாக இருக்கிறது. இந்த தத்வத்தின் படியே பொன்னும் களிமண்ணும் ஆபரணத்துக்கும் பானைக்கும் முக்யக் காரணமாக இருக்கின்றன. ஆகவே முன் ப்பிரகிருதி பரபிரம்மத்துக்குச் சரீரமாகவும், பரபிரம்மம் மூலப்பிரகிருதிக்குச் சரீரமாகவும் இருக்கிறது.

நாம்—தங்கத்துக்கும், தட்டானுக்கும், களிமண்ணுக்கும் குசவனுக்கும், வித்யாச மிருப்பது போலவே. உபாதான காரணத்துக்கும், கருவி காரணத்துக்கும் ஒன்றுக்கொன்று வித்தியாசம் இருக்கிறதல்லவா? ஆகவே பரப்பிரம்மம் எப்படி உபாதான காரணமாகவும் கருவி காரணமாகவும் இருக்கக் கூடும்?

வி—பரப்பிரம்மமே சருவி காரணமாக இருக்கிறார். அவரது இச்சையினால் மூலப் பிரகிருதி பிரபஞ்சமாக மாறுகிறது. காலமும் பரபிரம்மத்தின் சரீரமாய் இருப்பதினால் அந்தக் காலமும் சஹ காரணமாக இருந்து பிரபஞ்ச சிருஷ்டிக்கு உதவி செய்கிறது.

நாம்-இந்த மண்ணுலகம் மூலப் பிரகிருதியின் மாற்றத்தினு லுண்டாகிறதாகில் பரப்பிரம்மத்தைச் சிருஷ்டி கர்த்தா வென்று எப்படிச் சொல்லலாம்?

வி—சிருஷ்டி என்ற வார்த்தைக்கு உலகத்தார் தப்பர்த்தம் கொண்டிருக்கிறார்கள். பரபிரம்மம் ஆதியந்த மற்றிருக்கிற மூலப் பிரகிருதியிலிருந்து பிரபஞ்சமாக மாற்ற இச்சிக்க அந்த மூலப் பிரகிருதியானது அவர் ஆக்கினையின்படி தனக்குள்ளிருக்கும் சத்துக்களால் பிரபஞ்சமாக மாறுகின்றது. இந்த மாற்றத்துக்கே சிருஷ்டி என்று உலகத்தார் பெயரிட்டிருக்கிறார்கள், சர்வ சூன்யத்திலிருந்து ஒன்றை சிருஷ்டிப்பது சாத்தியமல்ல.

நாம்—கேவல மூலப்பிரகிருதியின் மாற்றமாகிய இந்த சிருஷ்டி எத்தனை வகைப்படும்?

வி—இரண்டு அல்லது மூன்று வகைப்படும்.

நாம்—அவை எவை?

வி—சமஷ்டி (சாதாரண) சிருஷ்டி என்றும் வியஷ்டி (விசேஷ) சிருஷ்டி என்றும் இரண்டு வகைப்படும்.

நாம்—சமஷ்டி சிருஷ்டி என்றாலென்ன?

வி—ஈசுவரனுடைய இச்சையின் மஹத்து அஹங்காரம் முத லான மாற்றங்களே.

நாம்—வியஷ்டி சிருஷ்டியாவதென்ன?

வி—பஞ்ச பூதங்களுண்டான பிறகு அவைகள் ஒன்றுக்கொன்று சேர்ந்து கர்ம சம்பந்தத்தினாலே. பிரபஞ்சத்தில் சுரர் அசுரர் திரியக் கென்னும் பிராணிகள் ஸ்தாவரமென்றும் தாது கந்த மூலாதி தேகங்களுண்டாவதே.

நாம்—மூன்று வித சிருஷ்டியென்ன?

வி—பிரகிருதி சிருஷ்டி அதாவது சமஷ்டி சிருஷ்டியைப் போல மஹத்துஅஹங்காரங்கள் மாற்றமேயாம். இது பிரம்மஅல்லது. ஹிர ண்ய கர்ப்பமென்று ஒவ்வொரு மஹா கல்பத்தில் ஆரம்பிக்கிறது.

2வது நியனமதி சிருஷ்டி அதாவது வியஷ்டி சிருஷ்டியைப் போல பிரம்மாவின் ஒரு தினமாகிய ஒவ்வொரு பிரம்மகல்பத்தில் மாறும் சிருஷ்டியாம்.

3வது நித்திய சிருஷ்டி அதாவது கர்மானுசாரமாய் [பிரதி தினமும் நடக்கும் ஜடதேக சிருஷ்டியாகும்.

நாம் — கல்பமென்றால் என்ன?

வி—கல்பமென்றால் காலத்தின் மத்ய காலம்

நாம் — அதை விவரமாகச் சொல்லும்?

வி—மஹாகல்பம் பிரம்ம கல்பமென்று இரண்டு கல்பங்களுண்டு. இந்த கல்பங்கள் நான்கு யுகங்களாகிய மன்வந்தரங்களால் ஆக்கப்பட்ட காலமேயாம்.

நாம் — நான்கு யுகங்களின் விவரமெப்படி?

வி—4,32,000 வருஷங்கள் கொண்டது கலியுகம் 8,64,000 — வருஷம் கொண்டது துவாபரயுகம். 12,96,000— வருஷங்கள் கொண்டது திரேதாயுகம். 17,28,000—வருஷங்கள் கொண்டது கிருதயுகம். இந்த நான்கு யுகங்களாகிய 43,20,000 வருஷங்கள் கொண்டது ஓர் மஹாயுகம்.

நா—மன்வந்தரமென்றால் என்ன?

வி—எழுப்பத்தொரு மஹாயுகம் கொண்டது ஒரு மனுவின் வயது. அந்தக் காலத்துக்கே மன்வந்தரம் என்று பெயர். இப்படிப் பட்ட மன்வந்தரங்கள் பதினான்கு.

நாம்—பிரம்ம கல்பமென்றால் என்ன?

வி—பிரம்மாவின் ஒருநாள் சக்தியோடு கூடிய பதிநான்கு மன் வந்தரங்களாம் அதாவது 1,000—மஹாயுகங்கள்.

நாம் — மஹாகல்பமென்றாலென்ன?

வி—பிரம்மாவின் 360 நாள்கள் கொண்டது ஒரு பிரம்ம வருஷம், இப்படிப்பட்ட நூறு பிரம்ம வருஷங்கொண்டது ஒரு மஹா கல்பம் அதாவது மானிட வருஷங்கள். 31104,000,00,00,000 கொண்டவையே.

நாம்—இப்போது மஹாகல்பத்தின் எந்த பாகத்தைச் சேர்ந்திருக்கிறோம்?

வி—இந்தபிரபஞ்சம் மூலப்பிரகிருதியிலிருந்து மண்ணுலகமாக மாறிப் பாதி காலமாகி விட்டது. அதற்கு பரமென்று பெயர் இப்போது ஆரம்பித்திருப்பதற்கு அபரமென்று பெயர். அதாவது பிரம்மாவின் 51 வது வயது. ஆரம்பித்திருக்கிறது. இதுவரையில் ஆறுமநுக்களாண்டு கடந்து · இப்போது ஏழாவது மநுவாகிய வைவஸ்வதமநு ஆண்டு வருகிறுர். மேலும் 71 மஹாயுகங்களில் 27 மஹாயுகங்கள் சென்று. இப்போது 28வது மஹாயுகத்திலிருக்கிறோம். இந்த மஹாயுகங்களில் மூன்று சாதாரண யுகங்களும் சென்று இப்போது நான்காவது ஆகிய கலியுகத்தின் 4999 வருஷத்திலிருக்கிறோம்.

நாம் — பிரளய மென்றுலென்ன?

வி—இந்த பிரபஞ்சமானது இப்போது இருக்கும்படியான ஸ்திதியைவிட்டு சூக்ஷமஸ்திதியைப் பெறுவதேயாம். இதில் பிராகிருத பிரளயம், நைமித்திகப் பிரளயம் என நான்கு வகுப்புகளுண்டு.

நாம்—பிராகிருதப் பிரளயமென்றுல் என்ன?

வி—இந்தப் பிரபஞ்சம் இப்போதிருக்கும் ஸ்திதியை விட்டு சூக்ஷமமாக மாறி மூலப் பிரகிருதியோடு கலந்து சத்துவ ராஜச தாமச குணங்களற்றுப் போவதேயாம். இந்த பிராகிருதப் பிரளயம் ஒவ்வொரு பிரம்மாவின் காலத்திற்கு ஒரு தடவை அல்லது மஹாகல்ப காலத்தில் சம்பவிக்கும்.

நாம் — நைமித்திக பிரளய மென்றுல் என்ன?

வி—இது ஒவ்வொரு பிரம்ம கல்பத்தின் கடைசியில் சம்பவிக்கிறது. இதில் சூரியாதி லோகங்கள் மாறி பூதியங்களாகிப் புராதன ஸ்திதியை பெறுவதேயாம்.

நாம் — நித்திய பிரளய மென்றுலென்ன?

வி—இது பிரதி நிமிஷமும் சம்பவிப்பது. இதனுல் பிரபஞ்ச பிராணி சமூஹங்கள் மடிந்து மாறி விடுவதேயாம்.

நாம்— ஆர்தியந்திகப் பிரளய மென்றுலென்ன?

வி—ஜீவாத்மாவுக்கும், பிரகிருதிக்கும் இருக்கும் சம்பந்த மாற்றுப்போதலே. இது ஜீவன் முக்தியடையும் போது சம்பவிக்கிறது

நாம் இந்த உலகம் அழியாதென்று சொல்லியிருந்தீர்களே ஆனால் பானைகள் உடைக்கப்பட்டுப் போவதும்; நதிகள் வற்றிப் போவதும் மற்றப் பொருள்கள்கரைந்து காணமல் போவதும் பிரத்தியக்ஷமல்லவா?

வி—உருவத்தோடு கூடிய உலகம் நித்யமென்று சொல்லவில்லை. உருவமுள்ள எந்த வஸ்துவும் ஒரு காலத்தில் கெட்டு பட்டுப் பாழ்த்துப் போயே தீரவேண்டும்; ஆனால் அவற்றின் சூஷ்ம ஆதார சத்துக்கள் மாத்திரம் நசித்துப்போகா. இந்த சூக்ஷம சத்துக்களுக்கு சிருஷ்டி சம்ஹாரமில்லாமையால் எப்போதும் இருக்கும்; பிரளய காலத்தில் சத்துவ ராஜச தாமசாதி குணங்கள் தம்தொழில்களைச் செய்யாமல் அடக்கமாக இருந்து பிரபஞ்சம் பிரகாசிக்கும் போது மாத்திரம் தம்தம் தொழில்களைச் செய்ய ஆரம்பிக்கின்றனர்; பானை உடைக்கப்பட்டு அது தூளாகி விடலாம். ஆனால் அதன் அணுரூபமான சத்துக்கள் மாத்திரம் என்றும் இருக்கும். இந்த ஹேதுவைப் பற்றிப் பிரபஞ்சம் நித்யமென்று சொல்லப்பட்டது.

நாம் — ஜனனமரணமென்றுலென்ன?

வி—ஜீவாத்மா ஒரு தேகத்தில் பிரவேசிப்பதே ஜனனம். அந்த தேகத்தை விட்டு நீங்குவதே மரணம். ஜீவாத்மா ஒரு தேகத்தில் பிரவேசிக்கும். அப்படி பிரவேசிப்பதே மறுஜனனம். ஜனன மரணம் மறுஜனனங்கள் மாறுதலுக்கேற்ற தேகத்தைச் சேர்ந்ததே யொழிய மாறுதலற்ற ஜீவாத்மாவுக்கு கிடையாது.

நாம் — ஜீவாத்மா மரணமற்றும் நித்யமாயும் பரிசுத்த மாயுமானதாகில் பிரகிருதிரூபமான தேகத்தில் சம்பந்தப்பட்டுச் சுக துக்கங்களை அனுபவிக்க வேண்டியதேன்?

வி—கர்மத்தினல் ஜீவாத்மா பிரகிருதி தேகத்தில் சம்பந்தப் பட்டுக் காரண சரீரியாகிச் சுகத் துக்கங்களை அனுபவிக்கின்றது. ஜனன மரண மறுஜனனங்களுண்டாவதற்குக் காரணம் கருமமே.

நாம் — கருமமென்றுலென்ன?

வி—கருமமென்றல் ஜீவாத்மா மனசாகறியறியச் செய்த தொழிலின் பலனேயாம். ஈசுவரனுக்குச் சந்தோஷமுண்டாகும் படி செய்வது நல்ல கர்மம்.

நாம்—ஜீவாத்மாவின்செய்கையினல்எப்படி கர்ம முண்டாகும்

வி—அக்ஞானம் அல்லது அவித்தையினல் உண்டாகிறது. அது அநித்ய ஞானம், விபரீத ஞானமென இரு வகைப்படும்.

நாம் — அநித்திய ஞானமென்றுலென்ன?

வி—ஒரு வஸ்துவின் லக்ஷணத்தை [வேறொரு வஸ்துவினிட மிருப்பதாக மலேக்கச் செய்வது.

நாம்– விபரீத ஞான மென்றுலென்ன?

வி—ஒரு வஸ்துவை வேறொரு வஸ்துவாக பாவிக்கச் செய்வ தேயாம்.

நாம்—அவித்தையினுல் கர்ம முண்டாவ தெப்படி?

வி—ஜீவாத்மா ஜடதேகமே தானென்றும், இந்த ஜடதே கத்தைச் சார்ந்த ஜனன மரணுதிகள் தன்னுடையதென்றும்; பிர மித்துக் கொள்ளுவதினுலேயாம். இந்த அக்ஞானத்தினுல் காமக் ரோத லோபாதிகளுண்டாகி இவைகளினுல் ஜீவாத்மா கர்மங் களுக்குட்படுகின்றது. இப்படிவந்த கர்மங்கள் வாசனையினுல் வேறு கர்மங்களையும் அக்ஞானத்தையும் உண்டாக்குகின்றன. மேலும் ஜீவாத்துமா ருசி என்று இச்சையால் வேறு பிராகிருத பதார்த்த சம்பந்தத்தினுல் அக்ஞான முண்டாகி இந்த அக்ஞானத் திஞும் கர்மமுண்டாகிறது. இப்படி கருமமானது அவத்தை வாசனை ருசி பிரகிருதி சம்பந்தத்தினுல் (கருமமானது) குறிப்பான காலவரையின்றி வண்டி உருளைபோல் சுழன்று கொண்டே இருக்கின்றது.

அதைப் பற்றியே இந்த கர்மத்தைப்பற்றியும் ஜீவாத்மாவின் ஜடதேக சம்பந்த காரணதேகத்தைப் பற்றியும் பிரவாஹநித்தி என்றும் சொல்லப்பட்டது. அதாவது நதியோட்டத்தின் அறுப் புக்கு ஆரம்பகாலமில்லாதது போல் பிரளயகாலத்திலும் ஜீவாத்மா வோடு சூக்ஷமசத்தாகக் கூடிக்கொண்டிருக்கிறது.

நாம்—ஜீவாத்மா பாபகர்மங்களைச் செய்யாதிருக்கும்படி ஈசுவரன் தடுக்கக்கூடாதா?

வி—ஈசுவரன், ஜீவாத்மா சமூஹத்தாருடைய பொது க்ஷேமத் தைக் கருதி "நன்மை செய்; தீமை மற" என்ற நற்பிரமாணத்தைக் கொடுத்திருக்கிறுர். இந்த ஆக்கினையின்படி நடக்கவேண்டியது ஒவ்வொரு ஜீவாத்மாவின் நீங்காக்கடமை. ஜீவாத்மாக்களுக்கு இது விஷயத்தில் சுதந்திரம் கொடுத்திருப்பதால், பரதந்தரரைப் போல் பாபகர்மங்களை அனுஷ்டிப்பவர் அவற்றின் பலனை அனுப விக்க வேண்டும்.

நாம்—பாபகர்மத்தினுலுண்டாகும் பலன்என்ன?

வி– இவ்வுலகில் கஷ்டஜீவனத்தையும் பிறகு நரகத்தையும் அனுபவிப்பதேயாம்.

நாம்—நரகமென்றாலென்ன?

வி—துஷ்கர்மமாகிய பாவத்தினுல் ஜீவாத்மா எமலோகத்தில், கஷ்டத்தை அனுபவிப்பதேயாம்.

நாம்—நரகத்தில் ஜீவாத்மா கஷ்டப்படும்போது அதற்குச் சரீர முண்டோ?

வி—உண்டு. ஜீவாத்மா ஸ்தூலதேகத்தை விட்டுப்பிரிந்த உடனே சூக்ஷ்மசரீரத்திலிருந்து யாதனுதேகத்தையடைகிறது.

நாம்—சத்கருமத்தின் பலனென்ன?

வி—இவ்வுலகத்தில் சுகவாழ்வையும். பிறகு சுவர்க்கலோக போகத்தையும் அனுபவிப்பதேயாம்.

நாம்—சுவர்க்கமென்றாலென்ன?

வி—சூக்ஷ்மசரீரத்திலிருந்து மாறிய சுகதேகத்தைப்பெற்று ஜீவாத்மா ஊர்த்வலோகத்தில், யாதொரு விசனமுமற்றுச்சுகமாக வாழும் ஸ்திதியேயாம்.

நாம்—ஊர்த்வலோகங்களென்றாலென்ன?

வி—புவர்லோகம் (அதாவது பூமிக்கும் சூரியனுலகமுதல் துருவநக்ஷத்திர லோகத்துக்கு இடையிலுள்ள லோகம்) மஹர் லோகம், ஜனர்லோகம், தபோலோகம், சத்தியலோகங்கள், என்றால் துருவலோகமுதல் பிரம்மாண்டலோகம் வரையிலுள்ள புண்ணிய லோகங்களே.

நாம்—ஜீவாத்மா நரகம் அல்லது சுவர்க்கலோகத்தில் எத்தனைக் காலமிருக்கும்?

வி—தம் தம் கர்மம் முடிகிறவரைக்கும் இருக்கும்.

நாம்—பிதுர்லோகம், விஷ்ணு லோகம், சிவலோகம், மென்றா லென்ன?

வி—இவைகள் ஊர்த்வ லோகத்தின் சில பாகங்களே.

நாம்—இவற்றை விட வேறு பிரம்மாண்டங்களுமுண்டோ?

வி—சுவர்க்கம், நரகம், சூரியலோகம். சந்திராதி லோகங் களான பதினுன்கு லோகங்களுமுண்டு.

நாம்— இந்த ஒவ்வொரு பிரம்மாண்டத்துக்கும் ஹிரணிய கர்ப்பரென்னும் பிரம்மாண்டமுண்டோ?

வி—உண்டு?

நாம்—இந்த பிரம்மாண்டங்கள் நித்தியமானவையா?

வி—ஒவ்வொரு பிரம்மாவின் முடிவுகாலத்தில் இந்த பிரம் மாண்டங்கள் சூக்ஷ்மரூபமாக மாறிவிடும்.

நாம்—கர்மமானது வேறு பிரம்மாண்டங்களிலுமுண்டோ.

வி—உண்டு.

நாம்—எல்லாபிரம்மாண்டங்களும் ஒரே பிரளயகாலத்துக்குட் பட்டவையா?

வி—ஒவ்வொரு பிரம்மாண்டத்துக்கும் ஒவ்வொரு பிரளய முண்டு.

நாம்—ஒம்வொரு பிரம்மாண்டமும் ஒன்றுக்கொன்று வித்யாச மானவையா?

வி—ஆம். பஞ்சபூதங்களுடன் மஹத்தும், அஹங்காரமும் கூடி வித்தியாசப்பட்டிருக்கின்றன.

நாம்—இந்த பிரம்மாண்டங்கள் ஒவ்வொன்றுக்கும் தனித்தனி ஈசுவரருண்டோ?

வி—ஒரே பரபிரம்மம் எல்லாபிரம்மாண்டங்களிலும் பூரண மாக இருந்து ஆண்டுவருகிறுர்.

நாம்—இந்த பிரம்மாண்டங்களெல்லாம் ஒரே மூலப் பிரகிருதி யிலிருந்து உண்டானவையா?

வி—ஆம், மூலப்பிரகிருதியானது ஆதியும் அந்தமுமற்றது. அதில் மாற்றம் என்னும் சக்தி பிரவேசிக்க அனேக பிரம்மாண் டங்கள் உண்டாகின்றன.

நாம்—நரகமோ அல்லது சுவர்க்கமோ அனுபவித்த பிறகு ஜீவாத்மாவுக்கு என்ன சம்பவிக்கிறது?

வி—அது சுவர்க்கங்களை அனுபவித்த தேகங்களை விட்டுவிட்டுத் தம் தம் கர்மாநுசாரத்துக்கேற்ற தேகத்தில் பிரவேசித்து மோக்ஷ மடைகிறவரையில் பிரவர்த்தித்து கடைசியில் மறுஜனன மற்றதா கிறது.

நாம்—சத்கர்மங்களினுல் ஊர்த்தவ லோகங்களில் சதாசுகப் பட்டுக்கொண்டிருக்கலாமா?

வி—இல்லை. கர்மபலத்துக்குதக்க படி ஒரு லோகத்தில்தான் சுக மடையக்கூடும்.

நாம்—ஊர்த்வலோகத்தில் யாரிருக்கிறார்கள்? அவர்கள் அங்கு செய்யும் காரியமென்ன?

வி ஹிரணியகர்ப்பர், ருத்திரர், இந்திரர், அக்னி முதலான தேவர்களிருக்கிறார்கள். அவர்களில் ஹிரணியகர்ப்பர். பிரஜாபதி யின் மூலியமாக சிருஷ்டி காரியங்களையும். மற்றவர்கள் தம் தம் காரியங்களையும் செய்து கொண்டிருப்பார்கள்.

நாம்—அந்த தேவதைகள் பரபிரம்மத்துக்கும் மேலான காரி யங்கள் செய்யும் சக்தியுடையவர்களா?

வி—இல்லை. அவர்கள் பரபிரம்மத்துக்குக் கீழ்ப்பட்ட சில்லரைத் தேவதைகளே.

நாம்—அந்த சில்லரைத் தேவர்கள் அங்கு சதாவாழ்ந்து கொண்டிருப்பார்களோ?

வி—இல்லை. ஒவ்வொரு மஹாகல்ப்பத்தின் முடிவிலும் எல்லா சில்லரை தேவதைகளும் தங்கள் தேகங்களை விட்டுவிட்டு மோக்ஷத்தைஅடைவார்கள்.

நாம்—அப்படியானால் மறுபடியும் மஹாகல்பத்தில் எந்த தேவதைகளிருப்பார்கள்?

வி—கர்மபலத்தினால் இந்திராதி தேவர்களாகும்படி ஜீவாத் மாக்கள் அந்தஸ்தைப் பெறுவார்கள்.

நாம்—மோக்ஷம் எத்தனைவகை?

வி—கைவல்லியம் என்றும், பிரம்மானந்த கைவல்லியம் என்றும் இருவகையாம். கைவல்லியம் என்றால் ஜீவாத்துமா தனது நிஜஸ்திதியில் பரபிரம்மத்தைப் போலவே பரிகர சுகத்தையடை வது. இதற்குச் சாயுஜ்யபதவி என்று பெயர்.

நாம்—சாயுஜ்ஜியமென்றால் ஜீவாத்துமா பரபிரம்மத்தில் லயமான ஸ்திதியல்லவா?

வி—அல்ல, ஜீவாத்துமா எந்தக்காலத்திலும் பரபிரம்மத் துடன் பூரணமாகச் சேருகிறதில்லை. சாயுஜ்ஜிய மென்பதனால் ஜீவாத்துமா பரபிரம்மத்தைப் போலவே பரிபூரண சுகத்தை அடை கிற ஸ்திதி. இதில் சாலோக்கியமும் சாரூப்பியமும் சேர்ந்ததாகக் கொள்ளலாம்.

நாம்—சாலோக்யமென்ருலென்ன?

வி—ஒரே இடத்தில் ஒருபொருளுடன் வசித்தலாம்.

நாம்—சாருப்பியம் என்ருலென்ன?

வி—சாருப்பியம் என்ருல் சுத்தசத்துவத்திஞலானதும் ஈசுவர னுக்குச் சமானமான சரீரத்தைப் பெற்றதுமேயாம்.

நாம்—ஜீவாத்மா முத்தியையடைந்த பிறகு பந்தஸ்திதியை யடையுமா?

வி—இல்லை. அது உலக நன்மையைக்கருதி அவதாரமெடுத்தால் எடுக்கலாம். ஆனல் அந்த அவதாரங்களில் அவைகளுக்கு பிரா கிருத கர்மங்களில்லை.

நாம்—மோக்ஷமென்பது சுவர்க்கலோகத்தைப்போல ஒரு குறிப் பிட்ட இடத்தில் சுகமடையும் ஸ்திதியா?

வி—வைகுண்டம் என்னும் பரமபதத்தில் அனுபவிக்கும் ஸ்திதியே, அந்தப்பரமபதம் பிரகிருதி சம்பந்த மற்று சுத்த சத்து வத்தாலாகிய மேலான இடம், கைவல்லியமும் பிரம்மாநந்தமும் வைகுண்டத்தில் பல பாகங்களில் அனுபவிக்கும் இன்பமேயாம்.

நாம்—மோக்ஷத்துக்கு முக்ய சாதனங்களெவை?

வி—ஜீவாத்துமா பிராகிருதசம்பந்தமான எல்லாப் பற்றுகளை யும் விட்டு ஒழித்தும் துஷ்கர்மம் சத்கர்மங்களை விட்டொழித்தும், சுத்தசைதன்னியமாக இருத்தலாம் மோக்ஷமென்னும் பதத்துக்கு பந்தங்களை விட்டொழித்ததென்று பொருள்.

நாம்—இந்த சாதனங்களெப்போது கிடைக்கும்?

வி—பிராகிருத லோகங்களைக் கடந்து பரமபதத்தில் சேரு வதற்கு முன்பே கிடைக்கும்.

நாம்—பிரம்மா நந்தத்தை அனுபவிக்கும் முக்தர்களுக்குள்ளே வித்தியாச முண்டா?

வி—இல்லை. பரபிரம்மத்தின் சுகத்துக்கும் முக்தர்களின் சுகத் துக்கும் கூட வித்யாசமில்லை.

பரிபக்குவ தசையைப் பெற்ற எல்லா ஜீவர்களும் மோக்ஷத்தையடையக் கூடும்.

நாம்—அந்தப் பரமபதத்துக்கு அல்லது வைகுண்டத்துக்குப் போக இந்த பிரபஞ்சத்தில் வழி யுண்டா?

வி—உண்டு. அதற்கு அர்ச்சராதிகதி திவியயான வாசக மென்றும், பிதிர்யானம் அல்லது தூமாதி மார்க்கமென்றும் இரண்டு வழிகள் சுருதிகளில் சொல்லப்பட்டிருக்கின்றன; ஒரு மனுஷன் இறந்து மோக்ஷமடைய வேண்டுமாகில், ஜீவனுனது சூக்ஷ்ம சரீரியாகி ஹிருதயத்திலிருந்து பிரம்மாந்திரத்துக்கு சம்பந்தப்பட்டிருக்கும் சுழி முனை என்னும் நரம்புவழியாகக் கபாலத்துக்குப் போய் பிரம்மாந்திரத்தைப் பிளந்து கொண்டு, சூரிய கிரகணங்களின் மூலியமாக சூரியமண்டலத்துக்குப் போய் பிறகு சூரியனிலிருக்கிற கரும்புள்ளியின் மூலியமாகப் பரமபதத்துக்குப் போகின்றது.

நாம்—ஜீவன் பரமபதத்துக்குப் போகும் இந்த வழியை விவரமாகச் சொல்லுங்கள் பார்ப்போம்.

வி—சீவனுனது யோக சாதனத்தினுல் அடையும் பரிபூரண ஞானத்தினுல் பரமபதத்துக்குட் பிரவேசிக்கின்றது. அப்படி பிரவேசிக்கும் சீவன் ஆதிவாஹிகாதிகள் என்னும் அர்ச்சி ஆகாசர், பூர்வபக்ஷர், உத்தராயணர், சம்வச்சரர், ஆதித்தியர், சந்திரர், மின்னல், வருணர், இந்திரர், பிரஜாபதி, அமானவர் விஷ்ணு என்னும் ஆதிவாஹிகாதிகளால் அழைத்துக் கொண்டு போகப்படுகின்றது. இங்குக் குறித்த அர்ச்சி ஆகாசாதிகள்—பரிசுத்த ஆத்ம ஸ்வரூபமேயன்றி சாதாரண இரவு பகல் மாச வருடாதிகளல்ல.

நாம்—மோக்ஷத்தை அடைய உபாயமென்ன?

வி—கர்மயோகம் ஞானயோகம் பக்தியோகம் பரபக்தி என்னும் நான்கு சாதனங்கள்.

நாம்—கர்மயோக மென்ருலென்ன?

வி—சுருதிகளின் மூலியமாக சித்து அசித்து ஈசுவரஞானத்தைப் பெற்றும், சுயலாபத்தைக் கருதாமல், நீதிக்கும் சமயத்துக்கும், தக்க சத்கர்மங்களைச் செய்தும் பரமாத்துமாவைப் பற்றி ஜபம் ஹோமம் யாகம் தானம், தபசுமுதலானதுகளைச்செய்தலுமேயாம்.

நாம்—ஞானயோக மென்ருலென்ன?

வி—யோக சாஸ்திரத்தில் சொல்லியபடி இயம, நியம, பிராணுயாம, பிரத்தியாஹார, தியான தாரண சமாதியாதி எட்டு அங்கங்களைத் தழுவி சீவாத்துமாவின் சுத்தசத்துவத்தை அறிவதேயாம். இதனுல் மோக்ஷஸ்திதியைப் பெற்று கைவல்லியம் அல்லது பிரம்மாநந்தத்தைப் பெறலாம்.

நாம்—பக்தியோக மென்றுலென்ன?

வி—இதற்கு உபாசனை என்று சொல்லலாம். அதாவது பரபிரம்மத்தின் பல திவ்ய குணங்களைப் பற்றி தியானித்தும், அவரை உள்ள நாள் உள்ள வரையில் அநுஷ்டித்துக் கொண்டும், தம்தம் கடமைகளைத் தக்கபடி செய்வதேயாம். இந்த பக்தியோகிகளுக்கும் மோக்ஷமுண்டாகி கைவல்லியம் பிரம்மாநந்தம் கிடைக்கும்.

நாம்—பக்தியோகத்தில் பரபிரம்மத்தைத் தியானிப்பது எப்படி?

வி—அஹம் பிரம்மாஸ்மி = நான் பிரம்மம். எனது ஆத்துமா பிரம்மம். அதாவது பரபிரம்மத்துக்கு இருக்கும் பல லக்ஷணங்களைப் போல எனது ஜீவன் பரபிரம்மத்துக்கு சரீரியாக இருக்கின்றது என்று தெரிந்து கொள்ளுதல்.

நாம்—பக்தி யோகத்தில் வேறு விதங்களுண்டோ?

வி—வேதாந்தத்தில், தகரவித்யா, அந்தராதித்யவித்யா, பிராணவித்யா, புருஷவித்யா, மதுவித்யா முதலிய முப்பத்திரண்டு வித்தைகள் உண்டு.

நாம்—இந்த வித்தைகளில் வித்தியாசமுண்டோ?

வி—பரபிரம்மத்தை தியானம் செய்யும் விஷயத்தில் வித்தியாசம்மில்லை. பரபிரமத்தினுடைய குண லக்ஷணங்களை பற்றி த்யானம் செய்வதில் மாத்திரமே பேதமுண்டு.

நாம்—ப்ரபத்தி யென்றுலென்ன?

வி—மோட்சமடைவதற்கு ஹேதுக்களான முன் சொன்ன மூன்று சாதனங்களை அநுஷ்டிக்கச் சக்தியற்றவர்கள், ஈசுவரனுடைய திவ்ய குணலக்ஷணங்களையே சதா தியானித்தும், அவர் திருவுளப் பாங்கின்படியே நடந்து கொண்டு உள்ள நாள் உள்ள வரையும் அந்த ஜகத்ரக்ஷகனிடம் பக்தி செய்யும் மார்க்கமேயாம்.

நாம்—இதில் தியானிக்கும் ஈசுவர லக்ஷணங்க ளெவை?

வி—ஈசுவரனுடைய ஞானம், சக்தி, பலம், ஐசுவரியம், வீரியம், தேஜசு, ஆனந்தம், தயை, வாத்ஸல்யம், சவுலப்யம், சவுசீலியம் முதலானவைகளும் அசித்து சித்து பிரபஞ்சம் சரீரமாயிருக்கையும் தனது இச்சையின்படி லக்ஷுமி ஸமேதனுக தேவாவதார மெடுக்கும் விலக்ஷணங்களேயாம்.

நாம்—இந்த நான்குவித மோக்ஷசாதனங்கள் எல்லாரும் அநுஷ்டிக்கத்தக்கவையா?

வி—கல்வி கேள்வி ஞானத்திஞல் சிறந்தவர்களே கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம், என்னும் மூன்று வித சாதனங்களால் மோக்ஷமடையக் கூடும். மஞேதத்துவம் ஞானதத்துவம் அறிய சக்தியற்றவர்கள் மோக்ஷத்தை ப்ரபத்தியினுல் அடையலாம். இந்த ப்ரபத்தி சாதனையை எந்த ஜாதியாரும் எந்த மதத்தாரும் ஆசாரியன் மூலியமாக ஞானம் பெற்ற எந்தச் சண்டாளரும் மிலேச்சரும் யாதொரு வித்தியாசமுமின்றி அநுஷ்டிக்கலாம்.

நாம்—இந்தப்படி மோக்ஷம் பெற விரும்புவோருக்கு எப்படிப் பட்ட யோக்கியதைகளிருக்க வேண்டும்?

வி—ஆசாரியனுடைய போதனையால் (1) அசித்து சித்து ஈசுவர ஞானமும் (2) இப்படிப்பட்ட ஆசாரியனிடம் அன்பும்; (3) சுருதிஸ் மிருதிகளில் நம்பிக்கையும்; (4) மோக்ஷ விருப்பமும் (5) உலக ஆசா பாசங்களை விட்டொழிக்க வைராக்கியமும் (6) தருமத்தில் கருத் தும் (7) வேதவேதாந்த கிரந்த காலக்ஷேபமும்; (8) சுயலாபத்தை விட்டொழித்துச் சாது சங்கத்தில் பிரவேசித்திருத்தலேயாம்.

நாம்—இவைகளில் கர்மபந்தத்தை விட்டொழிக்கக் கூடுமா?

வி—இவைகளால் துஷ்கர்மம், சத்கர்மங்களை விட்டொழிக் கலாம்.

நாம்—கர்மங்களெத்தனை வகைப்படும்?

வி—(1) சஞ்சிதம் (2) பிராரப்தம் (3) ஆகாரமியம் என மூன்று வகைப்படும்.

(1) இவைகளில் சஞ்சிதமென்ருல்=வேறு கர்மபலத்திஞல் தடுக்கப்பட்டு இன்னும் தன் பலன்களைக் காட்ட ஆரம்பிக்காதிருக் கும் கருமமாம்.

(2) பிராரப்தகர்ம மென்ருல்=பலனையுண்டாக்க முன்னமே ஆரம்பித்த கருமமாம்.

(3) ஆகாமிய மென்ருல்=இனிமேல் நடக்கும் கருமமேயாம்.

ஸ்தானங்களிஞல் சஞ்சித கர்மத்தை நசிக்கச் செய்யலாம். ப்ராரப்தகர்மம் தன் பலனைக் கொடுத்து நசித்துப் போகின்றது. ஆகாமிய கருமம் இவைகளால் யாதொரு பலனையும் கொடாதபடி தடுத்து விடலாம்.

நாம்—ஒருவனைப் பல ஜன்மங்களில் பிரவேசிக்கச் செய்யும் பிராரப்தகருமத்தின் ஸ்திதிக்குத் தக்கபடியாகும், பிராரப்த கருமம் நசித்த போதே மோக்ஷத்தை அடையலாம். அது ஒரே ஜன்மத்திலாகிலும் பல ஜன்மாந்தரங்களிலாகிலும் முடிவு பெற லாம். ஆனால் எவன் ப்ரபத்தியினால் எல்லா கருமங்களையும் முடிக் கிறானோ அப்போது அவனுக்கு மோக்ஷம் கிடைக்கத் தடை இல்லை. ஒருவன், மோக்ஷத்தை அடையத்தக்கவனாகும் போது சஞ்சிதம் விட்டொழிகிறது. ஆகாமியம் அசக்தியைப் பெற பிராரப்தம், பாழ்த்துப் போகின்றது. ஆகவே, பிராகிருத பந்தமாகிய கர்மம் இந்த நான்கு உபாயங்களால் நசித்துப் போகிறது.

இந்த சாதனங்களைக் கொண்டு ஹிரணியகர்பர் மஹாதேவர், முதலான மற்ற தேவர்களையும் காளி முதலான தேவதைகளையும் தியானம் செய்யும் விஷயத்தில் உபயோகப்படுத்தி மோக்ஷத்தை அடையக் கூடுமா?

வி—கூடாது. ஏனெனில் அத்தேவர்களெல்லோரும் பரமாத் துமா அல்லது ஈசுவரன் அல்லது பரா பரவஸ்து வல்ல, அத்தேவர் களெல்லோரும் தம் தம் சத்கர்மங்களினால் சில சுதந்தரங்களைப் பெற்றுப் பரபிரம்மத்துக்கு அடியார்களாக இருப்பவர்கள். மோக்ஷத்தைக் கொடுக்கும் சக்தியையுடைய பரமாத்துமாவுக்கு இருக்கும் படியான குணலக்ஷணங்கள் இச்சில்லரை தேவர்க ளுக்கும் வேறு தேவதைகளுக்கும் கிடையா; இத்தேவர் களுக்கும் ப்ராகிருத கர்ம பந்தங்களிருப்பதால் சீவர்களைப் பந்தித்திருக்கிற கர்மங்களைப் போக்கடிக்கப் போதுமான சத்தி சன்மார்த்தியங்கள் கிடையா. மேலும் சீவாத்துமாக்களுக்கும் பரமசுகத்தைக் கொடுக்கவும் சக்திகிடையா, ஆகவே, சதாலக்ஷ்மி சமேதனாக விருக்கிறவனெவனோ! அவனே விஷ்ணு, வாசுதேவன் நாராயணன் என்றுதிகிரந்தப் பெயர்களைப் பெற்றுப் பிரகாசிப்பவ. னெவனோ! சர்வசக்தி சர்வவியாபகம் சர்வாந்தரியாமியாக இருந்து அண்டபிண்ட சராசரங்களைச் சிருஷ்டித்து ஆதரித்துவரும் அப் பிரமேயன் எவனோ! எவனால் ஜீவாத்மாக்கள் சகல கஷ்டங்களையும் விட்டொழித்து மோக்ஷசாம்ராஜ்யத்தைப் பெறுகின்றனவோ! அவனே பரமாத்துமா. அவனே பராபர வஸ்து. அவனே சர்வ சக்தன். ஒப்பும் உவமையும் அற்ற உத்தமோத்தமன். அவன் ஒரு வனை அடைவோருக்கே அனந்தகாலம் ஆனந்த பதவி கிடைக்கும். இதுவே விசிஷ்டாத்துவைத சித்தாந்தத்தின் தாத்பரியம்,

இந்த சித்தாந்தத்தை விவரமாக அறிய விரும்புவோர் இரங்க ராமாநுஜ பாஷ்யம், தத்வத்ரயம், தத்துவசேகரம் ஆச்சாரிய ஹிருதயம், தமிழ் தேசிகப் பிரபந்தம், முதலான கிரந்தங்களைப் பார்க்கக் கடவர்.

## (மத்துவாசாரியர்)

மத்துவாச்சாரியார் கி.பி. 1119 வருஷம் ஆகஸ்டு மாதத்துக்குச் சரியான கலியுகாப்தம் 4120-க்கு சாலிவாஹன 1040 விளம்பி வருஷம் ஆஷாடபஹுளம் 4 ஆம் தேதியன்று துளுவ நாட்டில் உடுப்பிக்கருகில் அநந்தேசுவர கிராமத்தில் (பாஜக க்ஷேத்திரத்தில்) ஜனித்தவர். முக்கிய பிராண தேவனென்ற வாயுவே இராமவதாரத்தில் ஆஞ்சனேயராகவும், கிருஷ்ணுவதாரத்தில் பீமனுகவும், கலியுகத்தில் மத்துவாசாரியாகவும் அவதரித்தாரென்று சொல்லுவாருமுண்டு. இவர் தந்தையார் மத்திய கேகபத்தர். இவருக்கு உபநயனமானதும் உடனே விவாகம் செய்ய யோசித்தார். இவரோ சந்நியாச ஆச்சிரமத்தில் சேர்ந்து ஜனேபகாரமாக உழைக்க பிரவர்த்தித்தார். இவருக்கு முதலில் வாசுதேவாச் சாரியார், ஆநந்த தீர்த்தாச் சாரியார் என்ற பெயர்களுமுண்டு-தமது ஒன்பதாவது வயதிலேயே அச்சுதப் பிரகாச ஸ்வாமிகளாகிய ஆசாரியருக்குச் சீடராகி கங்காயாத்திரை செய்ய ஆரம்பித்தார்; ஆனுல் ஆசாரியருடைய அனுக்கிரகத்தினுல் கங்கையே அந்த இடத்துக்குவர அதில் அனைவரும் குளித்து அக மகிழ்ந்தனர். அது இன்றளவும் "மரத்துவ ஸரோவரம்" என்னும் பேர் பெற்றிருக்கிறது. இவரது 17வது வயதில் ஆசாரியர் இறந்து போக, இவர் பத்திரிகாச்சிரமத்துக்குப் போய் வியாச பகவானைத் தரிசித்தார். பின்னர் அவர் தத்துவஞானம் பெற்று, எட்டு சாலக்கிராமங்களுடன் உடுப்பிக்கு வந்தார்; அவைகளுக்கு எட்டு மடங்களை ஸ்தாபித்தார்; வழியில் கோபி சந்தனத் திலகப்பட்ட ஒரு கிருஷ்ண விக்கிரகத்தைக் கொண்டு வந்து உடுப்பியில் ஒரு கிருஷ்ணன் கோயிலையும் கட்டி வைத்தார். இவர் ரிக்பாஷ்யம், தசோநிஷத் பாஷ்யம், கீதாபாஷ்யம், பிரம்ம சூத்திரபாஷ்யம், பாரத தாத்பரிய நிர்ணயம், பாகவத தாத்பரிய நிர்ணயம், கிருஷ்ணு மிருதம ஹார்ணவம், தந்திரசாரம், அணு வேதாந்தம், முதலான முப்பத்தேழு பெரிய கிரந்தங்களை இயற்றித் தமது 79வது வயதாகிய கி பி. 1198ம் வருஷம் பிப்பரவரி மாதத்துக்கு சரியான சாலிவாகன 1120வது வருஷம், பிங்கள வருஷம் மாகமாதம் மறுபடியும் பத்திரி

காச்சிரமத்துக்குப் புறப்பட்டு போனூர். அப்படிப் போனவர் இது வரையிலும் திரும்பி வராமையால் அவரிப்போதும் அந்த ஆச்சிரமத்திலேயே ஸ்ரீ வியாசபகவானிடம் இருப்பதாக இம்மதஸ்தர்கள் சொல்லுகிறுர்கள்.

## துளவத சித்தாந்த ஸார விஞவிடை

நாம்—(ஓர் துவைத சித்தாந்தியைப் பார்த்து) துவைத சித்தாந்தமென்றுலென்ன?

துவைதி—துவி=என்றுல் இரண்டு, அதாவது பரமாத்துமாவும் பிரபஞ்சமும் வேறு வேறுன இரண்டு வஸ்துக்கள் உண்டென்னும் சித்தாந்தம். அல்லது பரமாத்துமா ஒரு தனி வஸ்து, மற்றதுகள் அதில் சேராத வேறு வஸ்துக்கள் என்னும் சித்தாந்தமேயாம்.

நாம்—இந்த சித்தாந்தம் ஸ்ரீமத்துவாசாரியரே ஸ்தாபித்ததா? அல்லது இவருக்கு முன் இதை யநுஷ்டித்தவர்களுமுண்டோ?

து—இது புராதனமான சித்தாந்தம், பரமாத்துமாவின் ஆதி ஹம்ஸத்தினிடம் சதுர்முக பிரம்மாவும், அவரிடமிருந்து சனகாதி தேவர்களும், துர்வாசரிஷியும், ஆதியில் அநுஷ்டித்து வரவும்; அவர் சந்ததிகளாகிய ஸ்ரீஞான நித, கருடவாஹனர், கைவல்லிய தீர்த்தர், ஞானேசதீர்த்தர், வரதீர்த்தர், சத்தியபிராகியர், அச்சுதப் பிரகாசர் முதலான மஹான்கள் அநுஷ்டித்துவர; இந்த அச்சுதப்பிரகாசரிடம் ஸ்ரீமத்துவாசாரியர் கற்றுத் தெளிந்து இந்த சித்தாந்தத்தைப் பிரபலப்படுத்திஞர்.

நாம்—இந்த துவைத சித்தாந்தத்தின் ஸாரமென்ன?

து—விஷ்ணு பரமாத்துமா சர்வ சக்தராயும், சர்வாந்தரியாமியாயும் சர்வலோக சரண்யராயும் இருக்கிறுர். இந்தப் பிரபஞ்சத்தைச் சார்ந்த ஜடப்பிரகிருதி, உபாதான காரணம், விஷ்ணு பரமாத்துமா, ஜீவாத்துமா, ஜடபிரகிருதி ஆகியவை எவராலும் சிருஷ்டிக்கப்படாமல் முடிவற்று என்றுமுள்ள நித்திய வஸ்துக்களாம். இம்மூன்றும், ஒன்றுக்கொன்று சம்பந்த மற்றுத் தனித்தனியான வஸ்துக்களாக இருப்பினும்; பிரகிருதியும், ஜீவனும், விஷ்ணு பரமாத்துமாவுக்குக் கீழ்ப்பட்டவைகளாம். ஜீவாத்துமா பிரகிருதி சம்பந்தமான நன்மை தீமை, மத்திமகுணங்களால் பீடிக்கப்படுவதனுல் அநேக கர்மங்களில் சிக்கிக் தவிக்கின்றது. இப்படித் தவிக்கும் ஜீவாத்துமா கர்மக்ஷயத்திஞல்

ஜனன மரணாதி பந்தங்களை, விட்டொழித்தால் முக்தியையடை யும். இந்த முக்தியடைவதற்கு முக்யசாதனம் பக்தி; பக்தி என்றால் மஹாவிஷ்ணு பரமாத்துமாவின் கருணா கடாக்ஷமாகிய பிரசா தத்தை யடைதலாம். இப்படி விஷ்ணுபரமாத்துமாவின் கருணா கடாக்ஷமாகிய பிரசாதத்தையடைந்த விடத்து முக்தி கிடைப்பது நிச்சயம். ஆகவே ஒவ்வொரு ஜீவாத்துமாவும் தக்க முயற்சி செய்து மோக்ஷசாம்ராஜ்யத்தை அடைய வேண்டியது.

நாம்—இந்தச் சித்தாந்தத்துக்கு ஆதாரமென்ன?

து—சுருதி ஸ்மிருதி, பாஞ்ச ராத்திரம் மூலராமாயணம், மஹாபாரதம் முதலானவைகளும், ஆதாரங்களாக இருப்பதன்றி யில் பிரத்தியக்ஷம், அநுமானம், சுருதியாகிய மூன்று தருக்க சாஸ்திர பிரமாணங்களும் விசேஷ ஆதாரங்களாம்.

நாம்—துவைத மத சித்தாந்தத்தின் தாத்பரியத்தைச் சொன் னீர். அதில் சில விசேஷங்களைப் பற்றித் தெரிந்து கொள்ள விருப்ப மிருக்கிறது. ஆகவே, இந்த சித்தாந்தத்தார் எத்தனை தேவர்களை அங்கீகரிக்கிறார்கள்?

து—விஷ்ணுபரமாத்துமா ஒருவரே பரபிரம்மம், ஆனால், பிர பஞ்சாதிகளை சிருஷ்டிக்கவும், காக்கவும், காலத்துக்குக் காலம் பல அவதாரங்கங்களை எடுக்கிறார்.

நாம் — அப்படியானால் புத்தரும் ஒரு அவதாரம் தானே. அவர் நாஸ்திகத்தைப் போதித்ததாகச் சொல்லுகிறார்களே அது எப்படி சாத்தியமாகும்?

து—பவுத்தரும் விஷ்ணுவின் ஓர் அவதாரமே, அவர் இந்த கலியுகத்தில் அவதரித்து அநேக ஜீவ ஹிம்சை முதலான அக் கிரமங்களைக் கண்டித்து மோக்ஷசாதனமாகிய பவுத்தாகமத்தை ஸ்தாபித்தார். அவர் கருத்தை அறியாத மூடர்கள் நாஸ்திகர் என்று சொல்லுகிறார்கள்.

நாம் :—விஷ்ணுவை விட வேறு தேவர்கள் சிலர் உண்டென்று நீங்கள் நம்புகிறீர்களா?

வி—ஆம். உலக பரிபாலனார்த்தம் அநேக சில்லரைத் தேவர் களுண்டு. அவர்களெல்லாரும் விஷ்ணு பரமாத்துமாவுக்குக் கீழ்ப் பட்டவர்களே.

நாம்—சில ஸ்திரீ தேவதைகளு முண்டென்று நம்புகிறீர் களல்லவா?

து—ஆம். லக்ஷ்மிமுதலானவர்கள், இவர்களில் லக்ஷ்மிதேவி யானவள் கேவலம் பிரகிருதியின் சக்தியே.

நாம்—அப்படியா? விஷ்ணு பரமாத்துமாவின் குணலக்ஷணங் களை சற்றுச் சொல்லும்?

து—அவர் அத்துவிதியராயும், அநந்தமாயும் இருக்கிறார். அவர் அத்துவிதியராய் இருப்பதனால் அனைத்துக்கும் மேலானவரா யும், ஒப்பும் உவமையு மற்றவராயும் இருப்பதன்றியில், தன் இச் சையின்படி அநேக அவதாரங்களை எடுத்து அநந்தமாயும் இருக் கிறார். அவர் ஸத்தியஸ்வரூபி, ஞானஸ்வரூபி, அநந்தஸ்வரூபி, நித்யஸ்வரூபி, ஜனன மரணமற்ற நிரந்தரர். காலம் இடம் முத லானவைகளுக்கு மேலானவர்: முடிவற்ற குணபூஷணர்,

நாம்—அவர் அஸத்தரல்லவா?

து—ஆம். அவர் அவியக்தமாக இருப்பதனால்.

நாம்—அவருக்குப் பெயருமில்லையல்லவா?

து—அவருக்கு பிரகிருத சம்பந்தமானதும் மானவஜாதி யாருக்கு இருக்கும்படியானதுமான குணங்கள் இல்லையேயொழிய நித்தியப் பொருளுக்குள்ள அநந்ததிவ்ய குணங்களெல்லாமுண்டு.

நாம்—பரமாத்துமாவுக்கு பிரகிருத சம்பந்தமான குணங் களில்லாவிடில் அவர் பிரபஞ்சத்தையும் பிரஜைகளையும் சிருஷ்டிப்ப. தெப்படி?

து—சிருஷ்டியென்பதனால் சூனியத்திலிருந்து ஜகத்தையும் ஜனங்களையும் உண்டுபண்ணுகிறதென்று அர்த்தமல்ல. சூனியத்தி லிருந்து யாதொன்றையும் சிருஷ்டிப்பது அசம்பவம். அநாதியாக விருந்த மூலப்பிரகிருதியிலிருந்து மண்ணுலகத்தையும் மனுஷரை யும் தோன்றச் செய்தார். இது தான் சிருஷ்டிக்கு அருத்தம்.

நாம்—அவருக்கு ரூபமும் வருணமுமில்லையல்லவா?

து—அவருக்கு எவ்வித ரூபமும் வருணமில்லை.

நாம்—அப்படியானால் பரமாத்துமாவோடு வேறு வஸ்துக் களும் அநாதியாக இருக்கிறதென்றல்லவா ஏற்படுகிறது?

து—ஜடமாகிற பிரகிருதியும், ஜீவனென்னும் மானுஷ ஆத்மா வும் வேறு—சிலவும் பரமாத்துமா போலவே அநாதியாக இருக் கின்றன. ஆனால், அவைகள் யாவும் பரமாத்துமாவுக்குத் தாழ்ந் தவைகள்.

நாம்—அப்படியானல் பரமாத்துமா பிரபஞ்சத்துக்கு காரண ரென்று எப்படிச் சொல்லலாம்?

து—இதைப்பற்றி சற்று விவரமாகச் சொல்லுகிறேம் கேளும். சாதாரண காரணம் இரண்டு வகைப்படும். எப்படியெனில், தட்டான் பொன்னினுல் ஒரு பதக்கத்தைப் பண்ணினதாக வைத்துக்கொள்ளுவோம்; இவ்விடம் பதக்கம் காரியம்; பொன்னும் தட்டானும் இரண்டுவித காரணமாம். பதக்கம் செய்வதற்கு முக்கிய காரணமாக இருந்த பொன் உபாதான காரணம்; தட்டான் பொன்னைத் திரட்டிச்செய்ய, கருவியாக இருப்பதால் கருவிகாரணம் அல்லது நிமித்த காரணனுகிருன். இதைப்போல் இந்த உலக சிருஷ்டியைப்பற்றி பரிக்ஷிப்போமாகில் இருகாரணங் களிருக்கின்றன. அதாவது பிரபஞ்சத்துக்கு ஜடப்பிரகிருதி முக்கிய மாகிய பதார்த்தத்தைத் தருவதனுல் உபதானகாரணமாயிருக் கிறது. இந்த ஜடப்பிரகிருதிக்குள் பரமாத்துமா புருஷரூபமாக கோஷபாகியாம்சமாகத் தூண்டியதனுல் கருவிகாரணம் அல்லது நிமித்தகாரணராகிருர்; ஜடப்பிரகிருதி பரமாத்துமாவின் சக்தியும் தூண்டுதலுமின்றிப் பிரபஞ்சமாக மாறும் வல்லமையற்றதாகை யால் பரமாத்துமாவே பிரபஞ்சத்துக்குப் பரமகாரணமென்று சொல்லப்பட்டனர்.

நாம்—அப்படியா, இந்தப் பிரபஞ்சத்திலிருந்து எடுத்து எப்படியெப்படித் தோன்றியது?

து—படைப்பு பத்துவகை, முதலில் தோன்றியது மஹத்து (புத்தி) இரண்டாவது அஹங்காரம்; இதில் வெகாரிக, தைஜஸ பூதாதி என்ற மூன்று உட்பிரிவுகளுண்டு (3 வது) இதிலிருந்து ஆகாசம், வாயு, தேஜசு அப்பு பிருதிவி. ஆகிய தன்மாத்திரைகள் பிறந்தன. (4வது) பஞ்சேந்திரியங்களும் கர்மேந்திரியங்களும் பிறந்தன. (5வது) தேவதைகள் பிறந்தன. (6வது) தாமச, மோஹ, மஹா மோஹ தாமச மிச்ர, அந்தர மிச்ரமென்னும் அக்ஞானம், அல்லது அவித்தைகள் பிறந்தன. இவ்வாறு ம் பிரகிருதி சாரகமென்று சொல்லப்படும் (7 வது) ஸ்தாவரம்; (8வது) திரிய சுரோதமென்னும் பிராணிகள் பிறந்தன; (9வது) ஆர்வசா வைகிருத சாரகமென்று சொல்லப்படும் (10வது) இந்த ஒன்பது வித சிருஷ்டிகளைப் பாதுகாக்க பரமாத்துமாவே பல அவதாரங் களாகத் தோன்றினுர்.

நாம்—இப்படிப்பட்ட சிருஷ்டி எப்போதுண்டாகிறது?

து—முட்டைக்குள் கருமுதலானவைகள் அடங்கி இருப்பது போல் ஜடப்பிரகிருதியில் அடங்கி இருந்த இவையனைத்தும் ஒவ்வொரு பிரம்ம கல்பகாலத்தில் தோன்றும். இப்படிப்பட்ட பிரம்மகல்பங்கள் அநேகம் ஆயின. இன்னும் அநேகமாகும் இந்தக் காலச்சக்கரத்தின் அற்புதத்தை அறிய யாராலாகும்.

தோழர்களே! துவைதசித்தாந்தசாரம் பற்றி இன்னும் பல விவரங்கள் எழுதலாம். ஆனால் அவைகளை விசிஷ்டாத்துவைத சித்தாந்தத்தில் எழுதி விட்டேன். ஆகையினால், துவைத் சித்தாந்தத்தை சங்கரஹமாக நிறுத்திவிட்டேன். ஏதேனும் பிழைகள் இருப்பின் பெரியோர்கள் மன்னித்து ஆசீர்வதிக்கும்படி வேண்டுகின்றேன்.

## குறிப்பு

முன் எடுத்துக்காட்டிய அத்துவைதம், விசிஷ்டாத்துவைதம், துவைதம்என்னும் மூன்று சித்தாந்தங்கள் பூதத்துவவாதிகளுடைய கருத்தை(அதாவது ஜடபதார்த்தங்கள் தவிர ஜீவ பதார்த்தங்கள் இல்லை என்னும் சித்தாந்தத்தைக் கண்டித்து ஜீவாத்மாக்களின் இருப்பை ஸ்தாபிக்கின்றன. சிலர் அத்துவைத சித்தாந்தத்தில் ஜகத் ஜீவபரம் ஒன்றே என்று ஸ்தாபித்ததாகச் சாதிக்கக்கூடும்: அதற்குச் சமாதானம் இதனடியிற் காணலாம்:—

பரமாத்துமாவானவர் எங்கும், எல்லாவற்றிலும் எப்போதும் ஏகமாக இருக்கிறார் என்னும் சித்தாந்தத்தைப் புத்திமான்களான எக்காலத்தாரும் எம்மதஸ்தரும் அங்கீகரிக்கிறபடியால், அவர் இல்லாத இடமும் பொருளும்,காலமும் இல்லை என்பது திண்ணம். இதுவே அத்துவைத சித்தாந்தத்தின் அந்தரங்கக்கருத்து. அப்படிக் கிருக்கச் சிலர் எங்கும் எப்போதும் யாவற்றிலும் இருக்கும் பரமாத்துமா ஜடஜகத்திலும், ஜீவாத்துமாவிலும் இருப்பதால் இந்த ஜடஜகத்தும் ஜீவாத்துமாவும், பரமாத்துமாவே யொழிய வேறல்லவென்றும் இதுவே அத்துவைத சித்தாந்த மென்றும் பிதற்றிக் கொண்டிருக்கிறார்கள்; இப்படிக்கொள்ளும் கருத்து சுருதி யுக்தி அனுபவத்துக்கு விரோதமானதென்று காட்டுவதற்கே விசிஷ்டாத்துவைதாதி சித்தாந்தங்கள் வெளிவந்தன: பரமாத்துமா எப்போதும் எல்லாவற்றிலும் ஏகமாய் நிறைந்திருப்பது உண்மை என்று இவ்விரு சித்தாந்திகளும் சம்மதித்துக் கொண்டாலும் பரமாத்துமா, சர்வாந்திரியாமியாய் இருக்கிறஹேதுவைப்

பற்றியே ஜடமும் அஜடமும் ஒன்றே என்றும் சுகமும் துக்கமும் ஒன்றே என்றும், இரவும் பகலும் ஒன்றே என்றும் தித்திப்பும் கசப்பும் ஒன்றே என்றும், நன்மையும் தீமையும் ஒன்றே என்றும் ஞானமும் அக்ஞானமும் ஒன்றே என்றும் மாதாவும் மனைவியும் ஒன்றே என்றும் ஜீவனும் பரமனும் ஒன்றே என்றும், சாதிக்கும் சில ஸ்வரூப அத்துவைதிகளுடைய குத்ஸித சித்தாந்தத்தைக் கண்டித்து ஜடம் அசேதனமானதென்றும்: ஜீவாத்துமா பரதந்தரமும் அபரிபூரணமுமானதென்றும், இவைகளுக்கு நாயகமாகப் பூரணமும் சுவதந்திரமும், அநந்தகலியாண குணங்களுமுடைய பரமாத்துமா ஒருவர் இருக்கிறார் என்றும் அவரை அடைந்தவருக்கே இகபரசுகம் கிடைக்கும் என்றும் ஸ்தாபிக்கின்றனர். ஆகவே, அந்த பரம்பொருளின் அநந்த கலியாண குணங்களைப் பற்றியும்,அவரை அடையும் மார்க்கத்தைப் பற்றியும் விசாரிப்பது நலம்.

முற்றிற்று

## ஸமஸ்த லோகா ஸுகினோ பவந்து

இந்த ஆத்மராக்ஷாம்ருதரஹஸ்யமென்னும் நூல் இயற்றிய அடியேனுக்கு பேருதவியாக இருந்து வாக்யங்களைத்திருத்திதந்த நல்லாசிரியர் சுப்பையனார் தமிழ் வித்வான் திருநின்றவூர் R. S. அன்னவருக்கும் இந்தநூலதனைப் பிழையின்றி அழகான முறையில் அச்சிட்டு தந்த சென்னை இராயப்பேட்டை நாவல் ஆர்ட் பிரிண்டர்ஸ் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி.

சுபம்! சுபம்! சுபம்!

இப்படிக்கு
லங்குபல்லி சின்ன சாமிநாயுடு

ஸ்ரீராமஜெயம்

# கண்ணன் துதிப் பாடல்கள்

## நூன்முகம்

நமது பாரத தேசத்தில் ப்ராசின இராமாயணம் பாரதம் முதலியவற்றை சமஸ்கிருத பாஷையில் எழுதியுள்ளார்கள். ஆனால் வனமில்லை என்றால் பாரதம் இராமாயணம் இரண்டும் நமக்குக் கிடைத்திருக்க வழியில்லை. வனமும் மனமும் ஒன்றே ஆகும். நமது இதிஹாசங்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்பவை களைத் திறம்பட விரித்துப் பழங்காலக் கதைகளுடன் சேர்த்து அறிவிக்கும். இந் நூல்கள் பாரம்பரியமான கதைகளில் அமைந் திருத்தலால் இதிஹாசம் எனப்பட்டன. இதி ஹ ஆஸ இதிஹாச இது அப்படி இருந்தது என்பது பொருள். பிருகு முனிவர் மரபில் வந்த பிரசேத முனிவருடைய குமாரர் வால்மீகி முனிவர். அவர் நாரதர் வாயிலாக இராமாயணக்கதைக் கேட்டு உணர்ந்திருந் தாராயினும் அதனைத் தாமாகப் பாடுமாறு தலைப்பட்டிலர். ஒரு நாள் தமசை ஆற்றின் கரையில் வேடனொருவன் மரத்தில் உட்கார்ந்திருந்த இரண்டு பக்ஷிகளில் ஒன்றைக் கொன்றான். அது ஆண்பக்ஷியாகும். பெண்பக்ஷி ஆண்பக்ஷியை இழந்ததால் துயர் கொண்டிருந்தது. அதை வால்மீகி முனிவர் கண்ணுற்று வேடனை நோக்கிக் கூறிய வாக்கியத்தை ஒரு ஸ்லோகமாகப் பாடி முடித்தார். பின்னர் அதனை ஆராய்ந்த பிறகு அது இராமாயணக் கதையாகத் தோன்றியது.

அதுபோல் அடியேனும் இறையவன் மீது பல பாக்கள் பாட ஆவலுற்றேன், ஆனால்,தானாகப் பாடவில்லை.ஒருநாள் அமைதியாக உட்கார்ந்திருந்த போது வாயில் கண்ணமுதே என்னமுதே என்று பாடினேன். அதை ஆராய்ச்சி செய்தபோது இறைவன் பாடலாகத் தோன்றியது. அது இறைவன் அருளாலேயும் எங்கள் குலம் சிறக்க வாழ்ந்த என் அன்னை சின்னம்மாளும் தந்தை நாராயணசாமி நாயுடு அவர்களும் செய்த நற்றவத்தால்பிறந்த நான் முற்பிறவி யில் செய்த நல்வினையாலும் நல்லவர் மற்றும் நல்லறிஞர் சேர்க்கை யினாலும் இப்பிறவியில் என்எண்ணமெலாம் எம். நாயகன் ஸ்ரீயப் பதியாகிய நாராயணன்பால் ஈர்த்துச் செல்கின்றது. அப்படிப்பட்ட ஈடுபாட்டில் என்உள்ளத்து உதித்த கருத்துக் களையெல்லாம் திரட்டி

ஸ்ரீமன் கண்ணன் துதிப்பாடல் என்று நாராயணன் பேரிலேயே நூற்றறுபத்தோரு பாக்களைப் பாடினேன். இதைச் சிறியவன் படைப்பாக எண்ணாது இறைவனோடு இணையும் எண்ணத்தோடு படித்துய்யுமாறு கோருகிறேன். தம்மை நாடியவரை ஆட்கொள்ள இறைவன் தம்மிரு கரங்களை ஏந்தியவண்ணம் வைத்திருக்கிறார். அதற்குச் சான்றாக நம் இதிகாசங்களில் பிரஹலாதன், அர்ச்சுனன், திரௌபதி, கஜேந்திரன் போன்றோர் வழிகாட்டிகளாக இருக்கிறார்கள்.



# கண்ணன் துதிப் பாடல்கள்

## பாசுர நடை

இயற்றியவர்

## லங்குபல்லி சின்னசாமி நாயுடு

எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

கண்ணமுதே! என்னமுதே! கடல்கடைந்த தேவமுதே!
கண்டோர்க்கும் கேட்போர்க்கும் களிப்பருளும் தெள்ளமுதே!
வண்டுண்ணும் தேனமுதே! வளமிகுந்த பெண்ணமுதே!
வானவரும் தானவரும் வழக்காடும் மதியமுதே!
பண்டொருநாள் பாரளந்த பரமாஎன் பாலமுதே1
பாதகம லம்சுவைத்துப் பருகியதோர் விரலமுதே!
கண்டொருநாள் யசோதைத்தாய் கனகமுலை உண்டமுதே!
கண்ணா வெனவழைத்தேன் கண்டுநிகர் வாயமுதே! 1

முனிவடிவே! முக்கனியே! மூதண்ட முன்னவனே!
மூவுருவும் ஒருருவாய் முன்னின்ற சோதியனே!
தனிப்பட்ட தானவரை தகர்த்தேமுன் தவவேடம்
தரித்தோனே! மாவலியைத் தாழ்த்தியதோர் குறளுருவே
பனிக்கடலை விட்டென்றன் பருவுடலில் புக்கவனே!
பரமனே! பார்புகழும் பண்புடையாய் மாயவனே!
இனிக்கின்ற பாதவிரல் இன்னமுதம் உண்டவனே,
இறைவா! உனைநினைப்போர் இன்பத்துள் மூழ்குவரே! 2

இறையவனே! என்னுள்ளத் துள்ளிருக்கும் மாயவனே!
இனியவனே! நின்னுமம் இகழ்ந்திட நீ செய்யாதே
மறையவனே! நின்நாமம் மறவேனே ஒருபோதும்
மற்றொன்றை மனத்தாலும் மாதவனே! நினைந்தறியேன்.
இறைப்பொழுதும் அகலேன்நின் இருப்பிடமும் யானறியேன்
இகபரம்யான் பெற்றிடவே இனியோனே உனையடைந்தேன்
இறையவனே நின்னடியேன் என்னபிழை செய்திடினும்
எங்கோவே நீபொறுத்தே யெனக்கருள வேண்டுகின்றேன். 3

கானகம் சென்றே கைவிர லடக்கி
கண்ணன் வழங்கிய கானம் கேட்ட
கானக் குழுவினர் கட்டுட லர்ம்பையர்
கவினுர் திலோத்தமை ஊர்வசி மாதர்கள்
மேனகை யோடவண் மேவிய யாவரும்
மெல்லவே ஆடலொடு பாடல் துறந்தனர்
தானத்துக் கையனை தாமரைக் கண்ணனைத்
தூமணி வண்ணனைத் துதித்திட வேண்டுமே. 4

கன்றுருவாய் வந்திட்ட அசுரன்தன் கால்பற்றிக்
கனியுதிரக் குணிலெறிந்த கண்ணபுரத் தெம்மானே!
குன்றெடுத்தே கோவலர்தம் குறைதீர்த்த கோமானே:
குழலூதிக் கோபியரைக் கவர்ந்திட்ட கோவிந்தா!
நின்றவூர்ப் பெருமானே! நின்னடியை மிகவணங்கி
நிற்கின்றேன் உன்னடியேன் நீர்வண்ணப் பெருமானே!
குன்றுநிகர் பாவமெலாம் குறைக்கின்ற கொற்றவனே!
கோவலனே! தென்றிசையோன் கொடுமைக்கே
அஞ்சுகின்றேன். 5

இமைகொட்டா தென்கண் ணிணைகள் விழிக்குமே
இருநிலம் ஈரடியால் இனிதளந்த செல்வனே!
இமய மலையளவும் எளியேன்யான் ஓடிடினும்
இறைவாநின் னிருப்பிடந்தான் யாதென்று நானறியேன்
அமைந்த எனதுள்ளம் ஆண்டகையே நினதாகும்
அன்புடனே இன்பமெலாம் அங்கிருந்து தேன்சுரக்கும்
எமைப்புரக்கும் மாதவனே இனியபாற் கடல்விடுத்து
என்றன் மனக்கடலில் எங்கோவே நீபுறங்காய். 6

கார்வண்ணா! நீர்வண்ணா! கமல மலர்க்கண்ணா!
காயாம்பூ மேனியனே! கற்பகம்போல் நிற்பவனே!
பார்மன்னர் மாய்ந்தொழியப் பாரதப்போர் நாளினிலே
பார்த்தனுக்குச் சாரதியாய்த் தேரூர்ந்த பண்புடையாய்
பார்த்தோர் மனந்திகைக்கப் பாஞ்சாலிக் கருள் செய்தே
பாண்டவர்க்குத் துணைபுரிந்த பார்மகள்தன் நாயகனே!
சீர்சான்ற சக்கரத்தைச் செருமுனையில் ஏந்தியவா
சிறியேன் உனைத்தேடிச் சென்றிட்டேன் வேங்கடமே! 7

இறைவனே! என்னுள்ளத் தினிக்கும் பெருமானே!
இனியனே! எங்கோவே! எம்மானே! நின்பெருமை
இறைப்பொழுதும் உரைக்காமல் இருக்கின்றேன் நின்னாமம்
என்னுளத்தில் நீங்கா திருக்கவருள் செய்திடுவாய்
குறைவறுநற் கோவிந்தா! கோகுலத்தின் நாயகனே!
குறைவுடைய என்றனுக்கும் கொடுப்பாயோ நின்பதத்தை
மறைக்காமல் நின்வடிவம் மனத்தகத்தே நிற்பதற்கே
மாமாயா நின்னருளை மன்றாடி வேண்டிடுவேன்.

தனிக்கரியின் முரண்தீரத் தன்னிகரில் பெருமானே!
தாவிக் கருடன்மேல் தயைபுரிந்தாய் அன்றொருநாள்
கனிமொழியாள் திரௌபதையும் கருங்குழலைத் தான்முடிக்க
கௌரவர்தம் செருக்கொழித்தாய் கார்முகில் வண்ணா நீ
தனித்ததொரு பூதனையின் தடித்த முலைதன்னைத்
தாவிப் பிடித்தன்று ஆவிதனைப் போக்கினைமுன்
முனியேயென் முக்கனியே மூவுலக முண்டவனே!
முத்திதரும் வேங்கடமே முதல்வாநான் வந்தடைந்தேன் 9

முதலையிடம் போரிட்டு முடிசாய்ந்த வேழந்தான்
முதல்வா வெனவழைக்க முன்னோடி வந்தவனே!
விதமறியேன் உன்னடியை வித்தகனே யான்பிடித்தேன்
விதியெனக் குனையன்றி வேறில்லை பெருமானே!
உதவா உறவெல்லா முதறியே தள்ளிவிட்டேன்
உற்ற உறவென்று உன்றனையே எண்ணுகின்றேன்
இதமான இன்பமெலாம் இனிதாய்ப் பெருகிவர
இன்றே அருள்புரிவாய் எங்கள் பெருந்தகையே! 10

கொண்டல் நிறவண்ணு! கோமளமே! மாமணியே!
கோல்கையில் கொண்டருளும் கோவலர்தம் பெருமானே!
மண்ணுளே யாவினத் துடனேகி மாதவனே
மாத ருடன்பாடி ஆடினதும் மறவோமே!
தண்ணளிசால் தண்டா மரையின் முகத்தானே
தங்க நிறமேனி தான்மறக்க வல்லோமோ?
அண்ணலே நின்நிலேயை அறிந்தயசோ தைத்தாயும்
அழகா எனவுன்னை அழைத்தே மகிழ்ந்தனளே! 11

செங்கமலக் கண்ணழகா! சிவந்த முகத்தழகா!
சேர்ந்த நினதெழிலேச் சிறுவன்யான் கண்டிட்டேன்.
மங்கை உதித்திட்ட மரைமலரும் பூந்துளவும்
மருவோடு மல்லிகையும் மாதவனே யான் கொணர்ந்தேன்
வங்கக் கடலமுதை வானோர்க்குத் தானளித்தாய்
வயலதனில் நெற்பயிர்கள் வளர்ந்தோங்கி நின்றிடவே
திங்கள்மும் மாரியது பெய்யத் திருமாலே!
தீபமும் நீ ராஞ்சனமும் தேவா உனக்களித்தேன். 12

பற்றேது மில்லாத கௌரவர்கள் பாண்டவர்பால்
பாரில் பிணக்கிட்டுப் பட்டொழிந்தார் முன்னொருநாள்
செற்றமிலா ராகவனே! சீற்றமுற வேண்டாம்நீ
சிறுவன் உளங்கலங்கச் செய்யாதே என்னிறைவா!
நற்பாலன விரும்பி நானுன்றன் தாள்பணிந்தேன்
நரகக் குழியதனில் நலிவடையச் செய்வாயோ?
குற்றமெலாம் செய்யாமல் கோவே எனேவிலக்கி
கோவிந்தா என்னுளத்தில் கொலுவிருக்க வாராயோ? 13

வாத மாமகன் தூத ஞகியே
வாரி நீரின் வரம்பினைத் தாண்டினன்
கோதண்ட ராமனே கொடிய வரக்கர்கள்
குலமும் லங்கையும் கொன்றிடச் சென்றனை
பாதகர் குலத்தில்நின் பதமே வணங்கிய
பண்புடை வீடணன் பதவியும் பெற்றனன்
வேதமும் கற்றிலேன் விளக்கமும் பெற்றிலேன்
வேறிட மின்றிநின் விரைகழல் பற்றினேன் 14

வெவ்வாயா லுரைகேட்டு வைதேகி பின்தொடர
உம்பி யுடநீயும் ஒளிர்கானம் சென்றனைமுன்
எவ்வகையில் கானகத்தில் ஏகினையோ யானறியேன்
இராகவனே! துன்பமெலாம் எவ்வாறு நீ பொறுத்தாய்?
செவ்வாழை போன்றிட்ட குறங்கிணையும் நின்னுடலும்
செங்கமலப் பதயுகமும் சிவந்தங்கு நொந்தனவோ?
இவ்வுலகும் வானுலகும் எவ்வுலகும் நைந்தனவோ?
எவ்வுள் கிடந்தானே என்மனமும் வாடிடுமே! 15

குற்றமது செய்திடுவோர் என்போ லெவருமிலை
குற்ற மதுபொறுப்பார் கோவுனைப்போல் யாருமிலை
மற்று மொருதெய்வம் ஏதெனக்கு மாற்றுரை
மறந்தும் தொழுதறியேன் மனமொன்றை நாடாது
கற்றதுநின் திருநாமம் என்றே அதையடியேன்
காலமெலாம் எண்ணிக் களித்து மகிழ்கின்றேன்
பற்றினேன் பாரளந்த பரமாநின் தாளிணைகள்
பாராய் எனைக்கண்ணால் பைமுகில்சேர் வேங்கடவா! 16

மாயப்பே யானவள் மார்போ டணைக்கவே
மாதவா முலையதனில் வாய்வைத்துச் சுவைப்பதுபோல்
தீயவள்தன் கருத்ததனைப் பழிப்பித்த தேவன் நீ
திக்கற்ற மாந்தருக்கோர் தெய்வமதாய் நிற்பவன் நீ
மாயம் நிறைகள்வர் கஞ்சனுக்கு முன்னிணங்கி
மாதவா உன்னிடத்தில் மாண்டனர்காண் போரிட்டு
நேயனே வேங்கடவா அகலகில்லேன் இறைப்பொழுதும்
நின்னடியே தஞ்சமென நிற்கின்றேன் மாதவனே! 17

கவிபாடும் திறன்தந்த காயாம்பூ மேனியனே!
காளமே கம்நிகர்க்கும் கருத்தவடி வானவனே!
நவநீதம் உண்டவனே! நலமளிக்கும் நாயகனே!
நாவால் உனைப்பாட நல்லதமிழ் தாராயோ?
தேவரெலாம் போற்றுகின்ற தேடறிய மாமாயா!
தவமுனிவர் உனைக்காணத் தவித்தேங்கி நிற்கின்றார்
தேவா அடியேற்குத் தெய்வம்நீ தந்தையும்நீ
தாயும்நீ என்றனுக்குத் தாராயோ குற்றேவல்? 18

எழில்மலராள் ஏமத் துயில்பயிலும் வளமார்பா!
ஏழுமரா மரம்துளைத்த ஏற்றமிகு சிலைராமா!
பொழில்தன்னில் விளையாடும் பூவையர் தம்மிடையில்
பொழிந்த குழலிசையால் புவிபுகழ நின்றவனே!
அழிவற்ற கோவலர்தம் ஆனிரைகள் காத்தவனே!
அடியவர் தம்மையெலாம் ஆட்கொண்ட பேரருளே!
இழிவுடைய நாயடியேன் எம்மானே உன்றனுக்கு
என்றும் அடிபணிவேன் எனைக்காக்க வேண்டும்நீ 19

உனக்கெனவோ ரிடமிலையே உத்தமனே! இவ்வுலகில்
உயிரினங்க ளத்தனையும் உன்னுடைய நல்லிடமாம்
எனதுமனக் கடலென்னும் இடமுண்டு உன்றனுக்கே
என்றும் அதிலிருப்பாய் எவ்விடத்தும் செல்லாதே
உனதனை நாகமுமோர் இடமாகும் என்றிடினும்
உனக்கெனவே என்னுடலை ஒப்புவித்தேன் நின்னடியேன்
உனக்கும் எனக்கும் உறவுண்டு என்பதனை
உணரேன் தவிக்கின்றேன் உத்தமனே என்செய்வேன்? 20

தலசயனப் பெருமானே! தனயனெனைக் காவாயோ?
தாமதம் செய் யாமல்நீ தயைசெய்தா மோதரனே!
அலைகடல் வெள்ளத் திடையினில் துயின்ற
அன்பனே! அழகார் மலருனக் களிக்க
நிலைகட்டல் நீரை முனிவரும் இறைக்க
நீயவர்க் குதவியே நிறைமலர் கொண்டாய்
நிலையிலா வாழ்க்கையேன் நின்றவூர்ப் பக்தனும்
நின்னடி பணிந்தேன் நீள்கடல் வண்ணா! 21

வாலிதம் பியின்முரண் தீரவோர் கணையால்
வாலியை மறைந்தே வதைத்தொழித்தோனே!
காலனாய் அவள்முனர்க் காட்சியும் தந்தனை
கனிவுடன் சுக்ரீவற் கரசினை ஈந்தனை
ஞாலமும் அரசுமேற்று நலம்பெற்றே அவனுமுய்ந்தான்
ஞானியர் புகழநீயும் நானிலத் தவதரித்தாய்
காலமெலாம் நின்னடியைக் கருத்துடனே தேடுகின்றேன்
தாகுத்தா! ராகவனே! கருணைசெய வாராயோ? 22

இருளகற்றும் கதிரொளிகள் இமைக்கும் நெற்றி
இணையற்ற தோள் களுடன் இலங்கும் உச்சி
திருவுருவின் திருவழகும் திகழக் கண்டேன்
திருவணைசேர் பெருநீரின் திரள்கள் பொங்கும்
திருவரங்கம் உன்னிடமே பெரிய கோயில்
திசைவிளக்காய் அரங்கமதில் திகழும் என்றும்
திருமகளின் நாயகனே! திசையனைத்தும் தொழுமிறைவா?
திருமாலே நின்னுடைய திருவடியைக் காண்பேனே! 23

இரவும் பகலும் இணைகின்ற போதினிலே
இரணியன்றன் உடலதனை இருபிளவாய்ச் செய்தவனே!
நரசிங்க மாயுதித்த நல்லுருவே நாயகனே!
நமனுகத் தானவரை நலிந்திட்ட ராகவனே!
சிரமொன்றே டொன்பதுவும் சிந்தச் சிலையதனல்
செய்தனைமுன் வானேரும் செயசெயவென் ரூர்ப்பரித்தார்.
சரமழைதான் பெய்வித்த சாரங்கக் கையினனே!
சற்றே உனைக்காணச் சார்கின்றேன் வாராயோ? 24

பாலைப் பருகியெங்கள் பாண்டமுடைத் தானெனவே
பாவை ஒருத்தி பழிசொன்ன போதினிலே
ஆலைக் கரும்பெனவே அன்புமொழி பேசியங்கே
ஆவலுடன் அன்னையிடம் அம்மமுண வந்தவனே!
காலையிலே தயிர்வெண்ணெய் கலந்தங்கு உண்டவனே
கலையெல்லாம் கற்றுணர்ந்த கண்மணியும் நீயன்றே?
வேலைக் கடலுருவும் வெண்மதியும் போன்றொளிரும்
வேங்கடவா! வித்தகனே! காண்பதற்கே விரைகின்றேன் 25

பொன்னிறம் காண்பதற்கே புதியவுரை கல்லெடுத்துப்
பொற்கொல்லர் அதன்கண்ணே பொன்தரத்தைக்
காண்பது போல்
உன்னிறம் காண்பதற்கோர் உரைகல்லைத் தேடினேன்
உலகெல்லாம் தேடிடினும் ஓர்கல்லும் காண்கிலேன்
நின்னறம் என்பொல்லா நாவிடத்தே தோன்றிடவும்
நிறமதனைக் கண்டிடவும் உரைத்திட்டேன் உன்னடியேன்
என்னப்பா தரமல்லாக் கல்லினிலே இழைத்திட்டேன்
எம்மானே உன்னிறத்தை எவ்விடத்தும் காணேனே! 26

சூதுடனே வாதனைத்தும் சூழ்ந்துள்ள என்னெஞ்சம்
சொல்லால் வணங்குதற்குச் சோர்வுற்றே நாணிடுமே
ஏதொன்றும் யானறியேன் என்கண்ணா நலிந்திட்டேன்
ஏந்திடாய் எம்மானே ஏழை அடியேனை
பாதுகையைத் தம்பி பரதனுக்கே தந்தவனே
பாற்கடலில் கண்துயின்ற பரந்தாமா நாயகனே
தூதுவனாய்ப் பாண்டவர்க்குத் துணைநின்ற கண்ணாஎம்
துயரங்கள் தீர்த்தவனே தூயவனே தொழுகின்றேன். 27

எங்கும் அலைக்கழித்த இரணியன்றன் மார்புடனே
எட்டிச் சிரம்பிடித்து இருவிழிகள் தீச்சொரிய
அங்கமே மானிடமாய் அரியின் தலையுடனே
அவுணன்றன் மார்பதனை அன்றொருநாள் நீபிளந்தாய்
செங்கமலக் கண்களுடன் சீர்சான்ற நின்முடியை
சிறுவன்தான் கண்டிடவே சேவை யளித்தோனே!
எங்கும் உனதடியேன் ஏக்கமுடன் தேடிடினும்
இறைவாநீ என்முன்னர் ஏனின்னும் வந்திலைநீ 28

இல்லறம் நல்லறம் என்றிடும் சொற்களே
இம்மையும் மறுமையும் எய்திடச் செய்வன
நல்லவர் உள்ளமே நாதனின் ஆலயம்
நாரணர் புரமென நானிலம் கூறிடும்
இல்லமும் உள்ளமும் எண்ணிடும் போதினில்
இறைவனுக் கவ்விடம் இடமதாய்த் தோன்றுமே
எல்லாம் உன்னருள் என்பன்யான் ஐயனே
எளியனேன் செய்வதும் என்னவென் றறிகிலேன். 29

கலைகற்ற சிற்சிலர் காசினில் குறியராய்
கண்டவ ரிடத்தினில் கழறுவர் பற்பல
நிலையற்ற வாழ்க்கையென நினையாமல் உள்ளமதில்
நீசர்போல் கூசாமல் நினைத்ததைச் செய்குவர்
கலைமகள்பு லம்புவள் கண்கள்நீர் சிந்திடக்
கலைதனை விற்றிடும் கயவரென எண்ணுவள்
அலைமகள் வருந்தியே அவர்தமை ஏசுவள்
அன்னவரை எண்ணியே அடியனும் வருந்தினேன். 30

கண்ணின் மணியனையாய் என்கமலக் கண்ணுநீ
கருவில் உருவாகிக் காரணனாய் நின்றிடுவாய்
கண்களுடன்மனமும் கண்டிடவே கொண்டுள்ளாய்
கட்டிப் பிடிப்பதற்கே கரதலமும் உண்டுனக்கே
மண்ணளந்த மாமாயா மாதவனே! வைகுந்தா!
மாணிக் குறளுருவாய் மாவலியை மாய்த்தவனே!
விண்ணோர்க் கரசனுக்கும் வேண்டும் வரமளித்தாய்
வேத முதல் வாவுனைநான் வேண்டிப் பணிந்திடுவேன் 31

நினைத்தும் நயந்துநின் நீள்கழல்கள் யான்பணிந்தேன்
நீங்கா திருகண்ணும் நீர்பெருக நிற்கின்றேன்
மனையாள் வலமார்பில் மாதவனே உறைகின்றாள்
மனத்தாலும் வாயாலும் மறவாமல் துதிக்கின்றேன்
வினையகற்றும் மாமாயா வேங்கடவா நின்கோயில்
விரைந்து வலம்வந்தே வேண்டிப் பணிகின்றேன்
நினையேன் பலதெய்வம் நின்மலனே வேண்டுகிலேன்
நெஞ்சக் குடிலதனுள் நீயிருந்து காவாயோ? 32

நீயும்என்னுடன் நிற்றல் காண்பனேல்
நெருங்கான் நமனும் நெடிதகன் றிடுவான்
பாயுநீர்ப் பொன்னரங்கம் பரவுகின்ற புனலரங்கம்
பக்தர்களின் திருவரங்கம் பழமைமிகு தென்னரங்கம்
தீயுமென் னுடலினைத் தின்னத் துடிக்குமே
தேடினேன் நின்துணை தேமலர்க் கண்ணனே
வாயுமோர் ஐம்புலம் வாட்டிடக் கூவினேன்
வாராய் நேராய் வரந்தனைத் தாராய் 33

மாயம்செய் யாதென்னை மாதவனே காவாயேல்
மலராள்மேல் ஆணையிட்டேன் மறித்துன்னைப் போக
வொட்டேன்
தாயரைத் தான்விடுத்தே தன்மாமன் மாய்ந்தொழிய
தஞ்சமென நீபுகுந்தாய் தனிநந்த கோபனிடம்
தாயெனச் சொல்லியே தன்மார்பில் சேர்த்தணைத்த
தாயல்லாத் தீயவளின் தன்னுவி கவர்ந்தோனே
வாயினுல் பாடினேன் மனத்தினுல் சிந்தித்தேன்
வாராமல் நீயென்னை வாட்டுவதும் நன்றுமோ? 34

எத்திசையில் திரிந்தாலும் ஏதவத்தைப் பட்டாலும்
என்றனுக்கோர் மரமில்லை எந்நிழலும் காணவில்லை
அத்தனே உன்னிழலை அண்டிப் பிழைத்திடவே
அந்தோநின் பாதமதை அடைந்திட்டேன் என்செய்வேன்
சித்தனே பாண்டவர்க்குச் சிறந்ததுணை யாகிமுனர்
சிறப்புறுநல் பார்த்தனுக்கே செய்திட்டாய் பேருதவி
பத்தினிப்பாஞ் சாலியுன்னால் படர்கூந்தல் தான்முடித்தாள்
பாராளும் பேறதனைப் பாண்டவரும் பெற்றுயர்ந்தார் 35

அறிவைத் தருமவன் அரியெனவே கூறுவர்
அடியார் அழைத்தவுடன் அம்மானே! நீவருவாய்.
அடியார் குறுக்கோடு நெடுக்குமாய்ச் சின்னமிட்டே
அண்ணலே! உனைக்காணூர் அறிவிலாப் பெருமூடர்
அறிவினால் மாமாயா அனுதினமும் யானுரைக்க
ஐயா ஒருதருணம் அளிப்பாயா என்பதனை
அறிந்திலேன் மூரிநிமிர்ந்தோனே ஆரமுதே!
அப்பனே உன்னைஇவ் வடியேனும் காண்பேனோ? 36

எத்திசையில் நோக்கிடினும் எழிலத்தி கிரிவரதா
எண்ணற்ற பக்தருனை ஏத்திப் பணிந்திடுவார்
சித்தருடன் முக்தர்களும் சீர்சான்ற பக்தர்களும்
சிரமேல் கரங்குவித்துச் செப்பிடுவர் நின்னுமம்
பத்தி யுடனுன்னைப் பரந்தாமா என்றழைத்தால்
பறவை தனில்வந்தே பாவமதை நீக்கிடுவாய்
முத்தாரமும் வளையும் முடியும் திருப்புயமும்
முகத்தழகும் யான்கண்டே முத்திபெறும் நாளெதுவோ? 37

நீர்வண்ணப் பெருமானே! நின்றவூர் நின்மலனே!
நீல நிறவுடலும் நின்முகமும் கண்டிட்டேன்
நீர்மலையில் நிற்கின்ற தேவனே நின்னடியேன்
நீள்நாக நஞ்சினுக்கே நின்னடியேன் அஞ்சினின்றேன்
கார்உருவாய் நீர்உருவாய் காயா மலர்உருவாய்
காண்டவத்தில் கார்முகிலால் கனமழைபெய் வித்தவனே
தேர்உலவும் வீதியில்நின் திருக்கோல முங்கண்டேன்
தீராத துன்பமெலாம் தீர்க்கும் அருமருந்தே! 38

அழகு மிகுதூணில் அரியுருவாய் வந்தவனே
அரக்கன் றனையடித்தே அன்பனைமுன் காத்தவனே!
குழலி னிசைபரப்பிக் கோகணங்கள் மேய்த்திடுங்கால்
குன்று இசையதனுல் கோவலர்தாம் மயங்கினரே
மழலைக் கண்களும் மைக்குழல் நிறமும்
மையார் புருவமும் மகிழ்வுடன் அழைக்க
யாழிசை பாடிடும் வண்டின மயங்குமே
எளியனும் வேண்டினேன் இன்னருள் தந்திடாய். 39

அல்லல் படுத்துமனம் ஆக்கடிது நாடுமே!
அல்வழக் குப்பேசி அவத்தங்கள் கூறுமே!
தொல்லை கொடுத்திடும் துயர்தரும் ஐம்புலன்
தொன்மைசால் தென்னவன் தொல்நர களிப்பனே!
எல்லை குறுக்கிடும் எழிலுடல் மாய்ந்திடும்
எம்மான்றன் நாமமதை என்மனமும் தான்மறக்கும்
செல்வமும் வேண்டினேன் சேவடி நாடினேன்
செங்கமலக் கண்ணுயான் செய்வ தறிகிலனே! 40

கோகுல மன்றத்தின் குலத்தின் தலைமுறையார்
குற்றேவல் செய்துனக்கே குறைவின்றி வாழ்ந்திட்டார்
மாக்கவலை நீங்கினராய் மாதவனைக் கைதொழுதார்
மாக்கடல்வண் ணுவெனவே மாயவனைப் பற்றினர்முன்
போக்கிய தேவனே புண்ணியர்க்கு நல்லமுதே
புன்கவி பாடியவென் பொல்லா வினையகற்றுய்
வாக்குப் படிந்திடவே வளமாரும் வேங்கடவா
வணங்கித் தொழுகின்றேன் வந்தருளாய் எம்மானே! 41

கோழிகள் கூவிடும் முன்னமே கோபியர்
கூட்டமாய்க் கங்கையில் குளித்துனை வாழ்த்தினர்
ஆழிகைக் கொண்டவா அழகுறு பொய்கையில்
ஆயர்கள் மூழ்கியே அடிமலர் தொழுதனர்
தோழிகளோ டாயர்குலச் சிறுமியர்தம் கூறைகளை
தூய யமுனைக்கரையில் தூரத்தே வைத்தனர்முன்
பாழியந் தோளுடைய பத்மநா பாவெடுத்துப்
பருத்தகுருந் தேறினவா பாலகன்யான் கைதொழுதேன். 42

குன்றமொன் றேந்தியே கோகணம் காத்தவா
குழல்தனை ஊதிடும் கோபிகள் நாயகா!
கன்றுகள் ஓசையைக் காதினுல் கேட்டிடின்
கண்ணனே நின்முகம் காணவே தேடிடும்
அன்றுநல் லாயரும் அன்பனே என்றனர்
ஆடலொடு பாடலால் ஆனந்த மெய்தினர்
என்புல னடக்கியான் ஏத்தினேன் உன்னையே
எந்தையே வந்திவண் ஏற்றருள் புரிகுவாய். 43

அமலனே அரவப் பகையூர்ந்தே அன்றொருநாள்
ஆதியே என்றழைத்த அக்கரியைக் காத்தவனே
விமலனே! வெங்கலுழன் வீற்றிருக்கும் வெண்கொடியாய்
விண்ணூர் மதியெனவே விளங்கும் திருமுகத்தாய்
கமலநிகர் கண்ணழகா கையினிற்சக் கரமேந்தி
கண்ணமங் கையதனில் காட்சிதரும் பெருமானே
அமரர்க் கதிபதியே அவனிமகள் தான்தழுவும்
அரங்கத்தின் நாயகனே! அன்பனே! வந்துற்றேன். 44

ஆனந்த மென்பது அண்ணலே வேறில்லை
ஐயனே உன்னடி அடைந்தவர்க் கென்றுமே
ஆனந்த வடிவமே அன்புற்ற உருவமே
அறிகிலேன் உன்றன் அலகிலா ஒளியே
ஆனந்த னேவானோர்க் குகந்தநற் பதியே
அந்தோ எனக்குன்னழைப்பையும்தருகிலை
வானவர் வந்துனது வடிவழகு காணவே
வருந்திடு மாப்போலே வாடினேன் வேங்கடவா! 45

காதலுற் றுள்அந்தக் காமுகன் தங்கையும்
காதுடன் நாசியும் கடிந்திடப் பெற்றனள்
வேதனை கொண்டவள் வாய்விட் டலறினள்
வண்ண முகமும் வளர்நறும் குழலும்
கோதண்ட மேந்தும் கரத்தினையும் தான்புகழ்ந்தாள்
கொண்டல் வண்ணனே கோவிந்தா! அடியேற்குப்
பாதகம் செய்யாதே பாதகியும் யானல்லேன்
பாதமே போற்றினேன் பரமநின் னடியனேன். 46

கருநிறக் கண்ணனே கார்முடி அழகுடன்
காயா மேனியும்ம் கவினுர் தோள்களும்
அருக்கனே எனஒளிர் அருங்கலன் அணிந்த
அழகார் மார்புடன் அருங்கான மேகிளை
தருவுடன் செடிகொடி தாழ்ந்தே பணிந்தன
தாரையாய் மதுரமும் தரையினில் ஒழுகவே
திருவடி தொழுது நின்திகமொளி கண்டனன்
திகைத்தனன் இன்பமும் தெய்வமே வேண்டினேன். 47

பத்தர்களும் முத்தர்களும் பழமறைசொல் மாதவரும்
பண்ணிசையே மிகப்பாடும் பாவலரும் நாவலரும்
சித்தர்களும் யோகியரும் சேர்ந்தொன்ருய்க் கரங்குவித்து
சிந்தை மிகஉருகிச் செய்குவரே அஞ்சலியும்
பத்தினிக் காதலர் பாண்டவர் நின்னுடைப்
பாதமே பற்றினர் பகைதனை வென்றனர்
சித்தமதை உனக்கடிமை செய்துவிட்டேன்
சிக்கெனவே வந்தென்னை ஆட்கொள் வாயே. 48

கொல்லைப் புறம்நாவற் பழக்கூடை தான் கொணர்ந்து
கோவிந்தா அங்கொருத்தி விற்றனளே கோபாலா
நல்லன நாவற் பழமென விரும்பியே
நங்கைதன் தங்க வளைகொடுத் தவனே
நல்லதோர் பண்டம் உனக்கென எதனை
நாரணு நான்கொணர்ந் திடுவேன் அடியேன்
சொல்லுவேன் ஓமெனும் மந்திர மதனைச்
சொல்லினுக் கினிமையும் உண்டென உணர்ந்தேன். 48

முலைப்பாலும் வேண்டாம்கா தணியும்வேண் டாமெனவே
முகங்கடுத் தோடி ஒளிந்திட்ட முன்னவனே
மலையொன் றெடுத்தே கனமழை தடுத்த
மாதவா ஆனிரை மகிழ்வுடன் காத்தனை
சிலைதனையொடித்திட்ட சீதரா சீதையைச்
சீருடன் மணந்த செல்வநா யகனே
அலைந்திடச்செய் யாதே அன்பனே உனது
அடியிணை பணிந்தேன் அரங்கநா யகனே. 50

கள்ளழகர் வீற்றிருக்கும் மலையதனைக் கண்டவர்கள்
கள்ளர்ந்த மாலிருஞ் சோலையெனக் கட்டுரைப்பர்
நள்ளிரவில் கள்வர்களும் நாதா உனைவணங்கி
நல்லதொரு ஆணையிட்டுப் போய்வருவ துண்டன்றோ
கள்ளரும் பின்வணங்கிக் களவுப் பொருளதனைக்
கணக்காகப் பங்கிட்டே கைகூப்பி நின்றிடுவர்
கள்ளனும் யானல்லேன் காயாம்பூ மேனியனே!
கள்ளப் பொருளுமில்லை கண்ணா தருவதற்கே. 51

திசைமுகன் நின்மொழி தெளிவுறக் கற்றனன்
தேவரும் முனிவரும் தெரிந்திடச் சொற்றனன்
விசையனுக் காகப்போர்க் களத்தினில் நின்றனை
விசுவமு கம்விழித் திடவேகாண் பித்தனை
திசைகள் அனைத்தும் திகைத்திடச் செய்தனை
தேனைநிகர்க்கும்நின் திருநாமம் கற்கவே
நசையுற்றேன் உன்னிடம் நாதனே அடியனேன்
நானென்றும் வேற்றுரை நாடி அறிகிலேன். 52

அரியுருவ மானாய்முன் அவுணர் குலச்சிறுவன்
ஆகுலம் தீர்ப்பதற்கோர் அணித்தூணில் தோன்றினவா
விரிகூந்தல் பாஞ்சாலி விரும்பிக் குழல்முடிக்க
விசயன்றன் தேர்த்துரகம் வீரமுடன் ஓட்டினைமுன்
புரியாத மன்னரெலாம் புறமுதுகிட் டோடிவே
புகழப் பெருஞ்செயல்கள் புரிந்திட்ட மாதவனே
விரிமார்பில் நிலமங்கை வீற்றிருக்கும் காட்சிதனை
விந்தைமிகு திருவல்லிக் கேணிதனில் கண்டேனே! 53

பேசுவர் கட்டுரை பெரிதுணர்ந் தவர்கள் போல்
பிதற்றியே திரிகுவர் பிழைதனை ஓர்ந்திடார்
காசினைத் தேடவே கடல்கடந் தேகுவர்
கடைப்பிடி தன்னையே கண்டிடார் காணினும்
தூசுடன் நிதிவேண்டித் தொல்லையும் தருவரே
தாசனாய் வேடமும் தாங்கிநின் றிடுவரே
கூசுதே என்மனம் குறைவெலா மிருப்பினும்
கோவுனைக் காணவே குறுகினேன் வேங்கடம். 54

செழிநீர் புரண்டே சூழ்தென் னரங்கம்
சீர்பெருங் காவிரி நடுவினில் திகழும்
வழிந்தே பாய்ந்திடும் வளமார் நீர்த்திரள்
வரம்பிலா தோடியே வயல்களில் சேர்ந்திடும்
பழித்திடும் பாவமும் பறந்திடக் காவிரி
பக்தர்கள் உய்ந்திடப் பரவுமே எங்கணும்
விழித்தேன் பின்னுனை வினமாய்த் துதித்தேன்
வேதனை நீங்கவே விரைகுவாய் ஐயனே! 55

சிறந்தார்க்குத் துணைசெய்யும் சீதரனே என்றனக்காய்
சிறப்புடன் புள்ளூர்ந்து சிறியேனைக் காவாயோ?
திறம்பெறா தென்னெஞ்சைத் தேவா உனக்களித்தேன்
திருமாலே நினைக்காணத் திருமலைக்கே யான் வந்தேன்
பிறந்திறந்து கணக்கற்ற பிறவிகளை யானெடுத்தேன்
பிரமனுக்கு முன்னவனே பேர்பெற்ற விக்கிரமா
அறமுணர்ந்து நின்னடியை அடியேன் பணிந்தேத்த
ஆவலுடன் வருமென்னை அரவணைத்துக் கொள்ளாயோ? 56

வானக் கருமுகில்கள் வந்தார்க்கும் எங்கும் நின்
வண்ணத் திருவுருவம் வந்தசையும் என்னுளத்தில்
கானத்துக் கோணங்கள் கண்ணன் திருமுகத்தைக்
காணத் திரண்டிடுமே கன்றுகளும் பின்தொடர
தானென்று ஆனிரைகள் தம்துயரம் நீங்கிடவே
தளராமல் கல்மாரி தடுத்தவனும் நீயன்றோ?
வானரசன் இந்திரனும் வெட்கிடவே ஆய்மகளிர்
வளைகுலுங்க நின்றுன்னை வாழ்த்தினரே மாதவனே! 57

கடிகைப் பொழுதினில் களைந்திட வரக்கனைக்
கண்ணிமை கொட்டுமுன் கற்றூணிற் றோன்றியவா!
தடித்த அரக்கியைத் தன்கணையால் மாய்த்திடவே
தவமுனிவன் பின்சென்ற தன்னிகரில் மாதவனே!
வடிவார் மதிமுகமும் வாடாக் கதிரொளியும்
வேழ நடையழகும் விற்பெருந்தோ ளும் மிளிர
இடிமுழக்கம் போன்றொலிக்க இணையற்ற வில்லொடித்தாய்
எம்மானே ராகவனே எளியேனைக் காவாயோ? 58

மின்னொத்த மேனியுடன் மேகநிகர் கைக்குழலும்
மயிலிறகின் மாமுடியும் மாண்பார் திருத்தோளும்
கன்னியர்பால் முன்னடித்த சானக் குரவையுடன்
காட்சி அனைத்தும் என் கண்ணிணைமுன் வந்தசையும்.
இன்னிசைப் பாடலும் இனியதோர் ஓசையும்
இணையற்ற நாதமும் என்செவிக் கினிக்குமே
பன்னக நாயகன் பாற்கடல் துயின்றவன்
பரமனைப் பாவியேன் பார்ப்பதென் னாளிலோ? 59

மகிழ்ந்தேன் சிந்தையில் மனத்துயர் அகன்றதால்
மனத்துள்ள மாயவனே! மலர்மகள்தம் நாயகனே
முகில்கள் பரவிடும் மலைமீது ஓடினேன்
மூர்க்கரும் மீண்டரும் முந்திடும் நாட்டினில்
முகில்வண்ணா உனதடி மூடர்கள் மறந்தனர்.
மூதறிவுடையவர் வணங்கியே நின்றனர்
துகில்பறித் தன்று தோகையர்க் கருளிய
தூயவனே! மாமணியே தொடர்கின்றேன் வேங்கடமே! 60

உனக்கடிமை யான்பட்டேன் உள்ளத்துள் ளுறைபவனே
ஊர்ந்தே இளைத்திட்டேன் உணர்வற்ற வாழ்க்கைதனில்
மனத்தகத்தே உன்னையான் மறவேனே உள்ளளவும்
மாயவனே! மாலேயென் மாதவனே! கோமானே!
உனதடியைக் காணுமல் உழல்கின்றேன் நின்னடியேன்
உடனெனக்குக் காட்சிர ஓடோடி வாராயோ?
மனத்துள்ள வேங்கடவா மாமலையில் நிற்பவனே!
மன்னவனே உன்னடியேன் மயங்கிடுதல் நன்றுமோ? 61

இன்றுமுதல் உன்நாமம் என்றென்றும் யான்மறவாது
இருக்கும் வழியறியேன் எவ்வகையும் நானறியேன்
இன்னமுதம் தந்தையான் இன்புற்று வாழ்வதற்கு
எனக்கும் அருள்புரிய ஈசாயான் வேண்டுகிறேன்
மின்னொளிரும் மாமுகில்போல் மேவுநிறக் கண்ணாவென்
மென்மைமிகு மார்வம் நீ மிகவிரும்பும் ஆலயமாம்
என்னுளத்தில் நிறைந்திருக்கும் இருளகற்றி அப்பாநீ
என்குறைகள் நீங்கிடவே ஏந்தியெனைக் காவாயோ? 62

எங்கள் பெருமானே எழுபிறப்பு உண்டவற்றில்
எப்பிறவி எடுத்திடினும் யானுன்றன் பணிவிடுத்து
அங்கிங்கும் ஓடுகிலேன் அன்பருளத் துள்ளானே
அலுப்புடனே சோர்வதனை அடைந்தேயான் நிற்கின்றேன்
எங்கெங்கு சென்றிடினும் எம்மானே உனையன்றி
எனக்குத் துணையாக இருப்பதனைக் காண்கில்லேன்
செங்கேழ் விரலழகும் சீர்சால் முகவழகும்
சிதரனே கண்டதற்பின் செல்வேனோ வேறிடமே. 63

தனிவளர்தா மோதரனே! தர்மத்தின் நாயகனே!
தானவர்தம் குலநாசா தர்க்கமதைச் செய்யாதே
தனித்தேன் களைத்திட்டேன் தாள்பணிந்தேன் திளைக்கின்றேன்
தாளாளப் பெருமானே தாந்தொழுதால் பழியுண்டோ
கனிநெஞ்ச முள்ளவர்கள் கண்ணாவுன் னருள் பெறுவார்
கற்பகமே உனையுளத்தில் கண்டறிந்தே உய்ந்திடுவார்
முனியேயென் முக்கனியே! முகுந்தா உனைத்தொழுதேன்
முன்னவனே வேங்கடவா முன்வந் தருளாயோ? 64

அவனைக்கா ணுநெஞ்சே அருள்கின்ற பெருமானை
அறிந்திட் டவன்கழலை அனுதினமும் நாடிடுவாய்
அவரிவரென் றெண்ணாமல் அறிவதனால் ஆழியான்
அவனருள் தேடிடுமே அண்ணல் முகம் கண்டிடவே
எவரெவர் நாடிடினும் என்னென்ன வேண்டிடினும்
எம்மானே தந்திடுவான் எங்கருணா மூர்த்தியவன்
தவத்துள்ளான் என்றனது மனத்துள்ளான் தந்திட்ட
தனத்துள்ளான் தாமோதரனைப் பணிந்தேனே! 65

முதல்வனே! வித்தகனே! முனிகணங்கள் துதித்தேத்தும்
மின்னும் சுடர்க்கொடியே! மேவுகின்ற நல்லொளியே
மதகரியைக் காத்தவனே! மனமதனில் போற்றுகின்றேன்
மாசற்ற உள்ளமதை மாமாயா தந்திடுவாய்
விதவிதமாய்ப் பாடுகின்ற வித்தைகளை யானறியேன்
விண்வம்பு பேசிடுவார் வீற்றிருக்கும் நாட்டினிலே
சதகோடி முறைநாமம் சாற்றினேன் கேசவனே
சற்றுமெனைத் துன்பங்கள் சார்ந்திடுமோ சிதரனே! 66

திராக்கா தல்கொண்டேன் திருவரங்கத் தெம்மானே
 திண்மை யுடனுக்கம் தருபவனும் நீயன்றோ
காரார்ந்த முகில்வண்ணா கன்னியரைக் கவர்ந்தோனே!
 கருடப் பறவைதனில் கடுகிவரும் பெருமானே!
ஏராரும் பெருஞ்செல்வம் ஏதெனக்குத் தருவாயோ?
 ஏற்றிச் சிலையதனை இற்றெயடிச் செய்தவனே
கோராமல் என்பிறவிக் கூறொடிக்கும் கோவலனே!
 கார்முகில் வண்ணாஉன் கழலிணைகள் காண்பேனோ? 67

நாவினுள் ளேநின்றுன் திருப்பதிகம் நான்பாட
 நாராய ணாவந்தென் நன்னெஞ்சில் நிற்பாயோ?
ஓவியம் போல்வரைய உத்தமனும் மறந்தனனோ
 ஓம்நமோ நாராய ணாவென்னும் மந்திரமே
தூவினேன் பாக்களையே தூமலர்கள் போலேயான்
 துளபமுடன் மணக்கும் தூபமும்யான் வைத்திட்டேன்
பாவியேன் நமனுக்குப் பரமனே அஞ்சினேன்
 பதியென்னும் வேங்கடமே பணிந்தேன் மிதிட்டேன். 68

மந்திபாய் வேங்கட மலைதனைக் காணவே
 மண்ணவரும் விண்ணவரும் மயங்கியவண் நிற்கின்றார்
வந்தபூ தனையுனக்கே வஞ்சகமாய்ப் பால்கொடுத்தே
 வாய்விட் டலறியவள் வாடியுயிர் விட்டனளே
தந்தைதாய் துயர்களையத் தன்னுளத்தே எண்ணிமுனர்
 தாய்மாமன் மாண்டொழியத் தஞ்சம் புகுந்தவனே
நந்தகோ பன்மகனாய் நள்ளிரவி லுதித்தவனே
 நமனுக்கும் ஓர்பணியை நாயகனே தந்தனைமுன். 69

வறியவன் அறிகிலேன் வலம்புரிக் கையனே
 வருத்தமுறச் செய்யற்க வாசுதேவா யெனை நீ
அறியேன் எதுவொன்றும் அண்ணல்யான் என்செய்வேன்
 அழுதேன் தொழுதிட்டேன் ஆறாய்க்கண்ணீர் விடுத்தேன்
தறிகெட்ட மனத்துடனே தளர்ந்தே மயங்குகின்றேன்
 தன்னிலை மறந்தவனாய்த் தாளிணைகள் பற்றுகின்றேன்
சிறப்புற்ற நின்நாமம் செப்பினேன் பல்காலும்
 சிறியேன் பிதற்றலினைச் சீர்திருத்திக் கொள்ளாயோ? 70

தாசரதி யேஇலங்கை தசக்ரீவனையழிக்க
தாயின் உரையதனல் தாள்நோக நீநடந்தாய்
காசயாடைக் கள்ளரக்கன் காமுற்று முகம்காட்டிக்
கையேந்திப் பிச்சைக்காய் கால்நோக நின்றவனாய்
மாசற்ற சனகன்றம் மகளெனமா யாசீதையை
மகிழ்வுடன் எடுத்தே சென்றனன் இலங்கைத்
தேசமும் மன்னனின் தியமன மும்மழியத்
தம்பியும் முடிசூடத் தாமோதரனே செய்தனையே! 71

பற்றேது மனமே உனக்கினிப் பற்றுகப்
பரமனை நாடுவாய் பணிவுடன் தேடுவாய்
உற்றார் பெற்றார்மற் றுறவென்று ஒன்றுமிலை
உண்மையை அடியேன் உணர்கின்ற போதின்று
கற்றதும் உற்றதும் கடுகளவு நிற்குமோ
கடைவரை நிற்பதுன் கமலப் பதங்களே!
உற்றபோ துன்பதம் உணர்ந்தே தெளிந்தனன்
உந்தியில் பிரமன் உதிக்கநின் றவனே! 72

நானேதும் அறிந்திலேன் நாரணனின் திருநாமம்
நவிந்திட்டேன் இன்றேயான் நானறிந்தேன் நின்பெருமை
வானேய்வா னவரீசா வரமருளும் வைகுந்தா
வனமதனில் ஆனிரையை வரச்செய்தாய் வேய்ங்குழலால்
கோனே! கரியவனே! கொடுப்பாயோ நற்கதியை
கோபாலா பஞ்சவர்தம் குறைதீர் தயாபரனே!
நானே உனையடைந்தேன் நன்மலர்த்தாள் கைதொழவே
நாணத்தால் சோர்வுற்றேன் நாயகனே! காவாயோ? 73

இனிமைதரும் எம்மானே இம்மைக்கும் மறுமைக்கும்
ஈசனெனஉணர்ந்தேன் யதுகுலத்தின் கோமகனே
இனியறிவேன் எம்மிறைவா எங்கள்குல தெய்வமென
இவ்வுலகும் எவ்வுலகும் நின்னடியால் உய்ந்திடுமே
பனிவரையின் பாரணனே பணிந்தேன் அனுதினமே
பத்தரும் முத்தருடன் பரமனையே நாடிடுவர்
இனியாரை நாடிடுவேன் இறைவா நினையன்றி
இருகரங்கள் கூப்பியுனை ஈசா தொழுகின்றேன். 74

அறுசீர்

பாற்கடல் பொங்கும் வெள்ளப் பாம்பணைப் பள்ளி யானே
கார்முகில் கடல்வண்ணு காகுத்தனே! கள்ளவிழி நித்திரை
செய்தோனே
பார்மகளும் நீர்மகளும் நாமகளும் பரவிய நாடெல்லாம்
உனதடிமை
நீர்த்தனே தெளிவை மாரளிக்கும் தெரியல்போ லேபாக்கள்
பாடுகின்றேன் 75

எள்ளினுள் எண்ணெய் போன்ற என்னுளே இருக்கும் மாயா!
உள்மனம் உன்றன் தானம் உணர்ந்திடில் பிரிவும் ஏது
தேள்ளெனத் தெரிந்தேன் உன்னைத் தேனுண்ணும் வண்டதானேன்
கள்நிறை சோலை நின்ருேய் கடையனுன் தாச ளுனேன். 76

அத்திமீது உலாவு மரசும் அண்ணலே எனக்கினி வேண்டகிலேன்
வித்தகனே கதிரொளியும் மதியுமாகி வீசிடவே விளங்குபவன்
நீயுமன்ருே?
அத்தனே நித்யனே! நிர்மலனே! அனுதினமும் சேவையும்
கிடைத்திடுமோ?
சித்தனே சிறியனை விட்டிடாதே சேர்வன் நான் வேங்கட
மாமலையே! 77

இன்றுனை எனக்கொன் றேது இறைவாகண் கண்ட தேவா
என்றேன்
முன்தவ மிலனுய் முத்தேன் முளரியின் கண்ணு என்றேன்
நன்னலம் பெறவேண் டிட்டேன் நாரணுகா ரணனே எங்கள்
நின்றமுர்ப் பத்தராவி நின்னடி பணிகின் றேன்யான் 78

பூவாரும் கழலெம் மானே பொன்மகள் கணவா யானும்
நாவார நின்றன் நாமம் நவில்வேன் நாரணனே எங்கள்
தேவாதி தேவன் நித்யன் தீர்த்தன்வோ ணத்தான் என்பர்
நீவாவென் றழைக்கின் றேன்யான் நிலமகள் தலைவா வாராய் 79

உள்ளமோர் கோயில் என்றே உணர்கிலேன் உண்மை காணேன்
வெள்ளத்தின் மேலே என்றும் விரிநாகப் பள்ளி யானே
தள்ளிடப் போமோ உன்னைத் தயாபரப் பொருளே மைந்தன்
நள்ளவே செய்வேன் எங்கள் நாயகா உன்றன் பாதம். 80

தனக்கென இடமொன் றில்லை தன்னிடம் உயிர்க ளாகும்
உனக்குப்பல் லிடங்க ளுண்டு ஒன்றெனக் குறிக்கப் போமோ?
உனதனை நாகம் தானும் ஓரிடம் உணரா தென்றும்
எனக்கொரு வழியும் சொல்லாய் ஏழையேன் உய்யு மாறே. 81

வஞ்சக் கருத்தரசர் வழக்கிட்டார் வாதிட்டார் வம்பும் செய்தார்
பஞ்சவர்க் குரிய நாட்டைப் பகிர்ந்திட மாட்டோ மென்றார்
நஞ்சமே அனைய சூதில் நாயகி தன்னை வென்றார்
கெஞ்சிய பாஞ்சா லிக்கும் கிருபைநீ செய்தாய் அன்றே! 82

திருப்பதிப் படிகள் தம்மில் தேவரும் போற்றிச் செல்வர்
பருமுத்து வேயில் சிந்திப் பரவியே கிடக்கும் குன்றம்
திருக்கோயில் கொண்டே நித்தம் திருவிழாக் காண்பாய் நல்ல
சுரும்புகள் சூழும் சோலை சொரிந்தலர் தூவும் என்றும். 83

முனியே! முதல்வனே என்னப்பனே முனிகணம் போற்றும் பரமனே
பனிக்கடல் பொங்கும் தனிக்கடலே! பாற்கடல் இருப்பிடம்
நீர்க்கடலே!
இனியவென் மனக்கடல் பள்ளியானே! இறைவா என்மனத்
தகலாதே
இனித்திடும் கமலப் பதமெனக்கு இறைவா தருவாய் என
நின்றேன். 84

பூவார் கழலானே நாரணனே! பூமங்கை நாயகனே புண்ணியனே!
நாவாரப் பாடினேன் நாமங்கள் நாகத் தணையில் துயில்பவனே!
தேவாதி தேவனே! நித்தியனே! தீர்த்தனே தேக்கம் செய்யாதே
நீவா தொண்டனைக் காத்திடவே நின்மலா நம்பினேன்
நின்னடியேன். 85

உள்ளமோர் கோயில் என்றேன் உணர்கிலேன் உண்மை
அறிந்திலனே
வெள்ளை வெள்ளத் தணையாக விரித்த நாகப் பள்ளியனே!
உள்ளத் துறையும் உள்ளபோ தெல்லாம் உணர்கில்லேன்
நள்ளேன் பிறரை ஒருநாளும் நமனுக்கும் அஞ்சேன் வேங்கடவா 86

என்ன இதுமாயம்! உன்மத்தன் என்னப்பன் றன்னையே மாற்றுதே
உன்மாய மறிந்திலன் அடிமூன்றால் உலகைக்கவரேல் எனமுன்னர்
உன்னிடம் பகைமை கொண்டவனாய் உனதடி அளந்திட
மறுத்திட்டான்!
பின்னர் விக்ரமம் அறிந்தவனாய்ப் பெருநிலை நமுசி பெற்றனனே 87

தாயிடம் அமுதம் இருந்திடினும் தளர்நடை நடந்தே சென்றநீ
பேய்முலை பருகிப்பாலெனவே பின்னவள் கருத்தை அழித்தனையே
தாய்மறைந் திருக்கவே யசோதையும் தாமோ தரனே தாயானாள்
மேய்புலம் திரிந்த மணிவண்ணா மறவேன் தேவகி நந்தனனே! 88

மண்ணுண்ட கண்ணன் வாயிடத்தே மாதர்க் கரசி என் கண்டாள்
மண்ணும் விண்ணும் மூவுலகும் மற்ற அனைத்தும் கண்டனளே!
வண்ண வனாயர்புத் திரனல்லன் வற்றாக் கடலணைப் பள்ளியனே
கண்ணும் மனத்தும் கலந்துறையும் காரண னெனவும்
கண்டனளே! 89

உன்னைப் பாரைப் பெற்றிடவே உள்ளத் தெண்ணிய ஆயர்குலக்
கன்னியர்தம் கருத்தனை கண்ணா நீயும் பழிப்பித்தாய்
உன்றன் வாயின் அமுதமதை உண்ண விருப்பம் உந்தலினால்
என்றன் உள்ளம் உருகிடுமே எம்மானேவுன் னருள்தருவாய். 90

மங்கையர் குழல்வட் டமும்தோடும் மார்புச் கச்சையும் பாடகமும்!
செங்கண் முகமும் பெண்ணழகும் சேர்ந்த மலராள் நாயகனே!
அங்கம் துடித்துப் பொங்கிடுமே அன்பும் அழகும் நிறைந்தவனே
வங்கக் கடலைக் கடைந்தவனே! வணங்கும் என்சிரம்
அனுதினமே. 91

அறியேன் மற்றென் றெனக்கில்லை அருளும் பரமா கடல்வண்ணா!
அறிவி லேனுக் கறிவுறைக்க அற்றனேநீ இருக்கின்றாய்.
அறியாச் சிறுவன் பிழைசெய்தேன் அண்ணால் நீயும் அறிவாயே!
வறியனாகி உழல்கின்றேன் வணங்கிட வந்தேன் உனைநாடி. 92

அவனருள் என்றும் இருந்திடுமே அல்லலும் அலுப்பும் ஏதெனக்கு
அவத்தங்கள் விளைத்தலும் அழித்தலும்அறிந்தவனை என்மனதில்
பதியவைத்தேன்
அவரவர் விதிகளை அடைந்திடவே அருளினன் அனைத்து
உயிர்களுக்கும்
அவனடி வணங்கித் தேடிடுவேன் அடியேன் வேங்கடமாமலையே 93

உற்றார் எனக்கில்லை இங்கிறைவா உறவும் உலகினர் எனவறிந்தேன்
உற்றார் உணவுக் குறவாவார் உற்றிடும் போதவர் உதவாரே.
மற்றவர் காட்டிற்குப் போமளவும் மாதவா வேண்டும்நின்னுறவே
கற்றவர் புகழும் பெருமானே! கடையனேன் புகலிடம்
நீயன்றோ? 94

உயிர்களும் உலகும் நின்னடிக்கீழ் உய்யவரும்வினை தாமகற்ற
பயின்றிடும் உனது திருநாமம் பன்முறை கூறுவரடியார்கள்
வயிற்றினில் அனைத்தும் கொண்டு வைத்திருந்துமிழ்ந்திட்டோனே!
கயிற்றினில் கட்டுண்டோனே கடையனேற் கருள்வாய்கண்ணா! 95

மயக்கம் கொண்டென் மதியும் மயங்கிட நினைவற்றேன்
மருத்துவனே!
துயரமும் துன்பமும் பறந்தேகும் தூமணி வண்ணா வந்துற்றேன்
மயக்கியே மாவலி செருக்கடக்க மண்புகழ் உருவம் கொண்டவனே
மையல் செய்திடும் மைக்கண்ணா மறந்தும் புறம்யான் தொழு
வேனோ? 96

நாள்தோறும் துதிப்பாடல் பாடுகின்றேன் நாதனே
இனியெனக்குத் தோற்றமில்லை
தாள்பணிந்த நின்னடியார் வாழ்வரென்றே தாரணியோர்
கூறிடுவர் ஐயமில்லை
நீள்வடிவின் திருவடியே பற்றுகின்றேன் நின்னாமம் நாவதனால்
செப்புகின்றேன்
நாள்களைக் கடத்தும் நாயேன் நாடிவேங் கடமே வந்தேன். 97

ஆய்க்குலப் பொருளாய் வந்தோன் அசோதையின் அன்பார்
செல்வன்
தாய்மாமன் தன்னை வீழ்த்தி தாய்தந்தை உய்யக் கொண்டான்
தாய்சொன்ன கடமை செய்தோன் தானவர் நமனுய் நின்றோன்
வாய்விட்டுப் பாடும் அன்பர் வானுல கடைவர் தாமே! 98

கண்ணன் மணிவண்ணன் மைக்கண்ணன் காரொளி முகில்வண்ண
னெம்பிரான்
மண்ணுடையாள் நாயகனே கோமானே மலர்மகள்மார்
வத்தோனே மாதவனே!
எண்ணினேன் எண்ணற்ற திருநாமம் என்னை நமனும்பற்றகில்லான்
புண்ணியனேநின்னடியைவந்தடைந்தேன்புறந்தள்ளாதேற்றருளே

சொல்லும் திறமை யறிந்தில்லேன் சொல்லவே நல்லருள்
தருவாயே!
இல்லதும் உள்ளதும் நீயன்றே இறைவா வேறெதும் எனக்கில்லை.
செல்வா மினமும் எனக்கில்லை செருவா ரில்லை செருக்கில்லை
நல்லாய் சிற்றம் கொள்ளாதே நண்ணினேன் சீர்மிகு
வேங்கடமே! 100

மகனென்ற சொந்தமும் மறந்தாயோ மைதிலி நீரின்றி
நாவறண்டேன்
அகமும் புறமும் அன்புற்ற அன்னையே ஆர்வம் உனக்குண்டு
மகனின் இனிய சொற்களையே மாதர் செவியில் கேட்குங்கால்
முகத்தின் அருளும் முலைப்பாலும் முன்னர் சுரக்கக்
காண்கில்லேன் 101

வட்ட நடுவின் மாமணியே வாய்ந்த ஒற்றை எழுத்தோனே!
கட்டுண்ட பெருமானே கன்றின்பின் கானகம் சென்றுகளித்தவன்நீ
பட்டாடை மண்ணில் புரண்டாட பல்லில் முறுவல் தவழ்ந்தாடும்.
எட்டாத உறியின் மேல்வெண்ணெய் ஏறி உண்ட பெருமானே!

அன்றுஆ நிரைகள் காத்தாய் அன்பனே குன்றைத் தூக்கி
நின்றுல குண்ட மாயா நின்னடி யாரை ஏற்பாய்
கன்றுடைக் காலைப் பற்றிக் கனியினை வீழ்த்திக் கொன்றாய்
இன்றுனக் கடிமை யானேன் யெனக்கினி நீயே தஞ்சம் 103

துப்புடையாய் உனையடைந்தேன் ஏதெனக்குத் துன்பமது மணி
வண்ணா தூய கண்ணா!
அப்பனே! ஒப்பற்ற தெய்வமே! அனங்க தேவா அன்புற்ற நேயா!
செப்பினேன் நின்றன் திருநாமம் செவிக்குள் அவை தான்
புகுந்தனவோ?
எப்பிறவி எடுத்திடினும் குற்றேவல் எம்மானே நின்னடியேன்
வேண்டுகின்றேன் 104

நின்றபெருமான் பத்தராவியே நின் திருவடி பற்றினேன் நிமலனே!
நின்றவூ ராளென்றே கூறினேன் நித்யனே நீல மேகவண்ணா!
சென்னிமேல் திருவடி தரித்துளேன் என்றென்றும் திருநாமம்
மறந்திடேன்
உன்னையே காணக் கமலாசனன் ஊழிதோ றூழிதவம்
செய்தனனே! 105

என்றனது தாயாக நீயிருக்க எங்கும் நிறை கரங்கள் உனக்கிருக்க
நின்றவூர்க் கனவல்லி நின்னருளால் நிகரற்ற நல்வாழ்வு வாழ
வேண்டும்
நின்றவூரில் தொண்டரேத்தும் பத்தராவி நித்தருடன் முத்தருமே
பாடிநிற்க
என்னப்பா நின்முகத்தைக் காண்பதற்கே ஏழையேன் உனை
வணங்கிப் பாடுகின்றேன் 106

நாகணைமேல் பள்ளிகொளும் எம்மான்றன் நாயகியே நாண்மலர்ப்
பூம் முகத்தினளே!
மேகவண்ணன் இன்புறுதற் கினியதேவி மென்மை மிகுமலரில்
வந்ததேவி!
ஏகமும் போகமும் உனதன்றோ எனைப்பெற்ற தாயாக நீயிருக்க
தாகமது எனக்கேது என்தாயே! தரிசனம்நீ தந்தருளும்
போதினிலே 107

அங்குமிங்கும் தேடினேன் ஓடினேன்யான் அல்லலுற்றேன் உள்ளத்
திருப்பவனே!
பொங்குநீர் வழிந்தோடும் புனலரங்கம் பொலிவுறுமே பசுமை
யுடன் நதியினோரம்
பங்கயக் கமலக் கண்ணா பைம்பொழில் கோயில் கண்டேன்
ஏங்கணும் நிறையும் மாயா ஏழையுன் பக்கல் வந்தேன் 108

அறியாமல் நின்நாமம் இருப்பனேல்யான் அந்நாளே யான்பிறவா
நாளதாகும்
உறியினிலே வெண்ணெய் உண்டபோது உன்னருளால் கோபாலர்
தாமுமுய்ந்தார்
சிறியவன் என்றே உணர்ந்தார் சீர்மல்கும் ஆயர் சிறுமியரும்
அறியதோர் குழவியே குலதெய்வமே! அனைத்தும் காக்கும்
காரணனே! 109

திருவேநறுமணக்கூந்தலினாய்! திருமால்தான்நாயகியேயெனை யீன்ற
திருவே மலரில் திகழ்பவளே! திலகமாய் உலகினில் நின்றவளே!
விரும்பினேன் உன்முகம் காணவே விரைவாய்ச் சரமேந்திட
வேண்டினேன்
பெருமையும் அடையப் பெருந்தேவி பேரின்பம் கிடைக்கும் 110
நாளேதோ?

விண்ணோர்க்கும் மண்ணோர்க்கும் செல்வமே வெண்கதிர் ஒளி
மின்னும் மங்கையே!
திண்ணத் திருமேனி மாதவன்றன் வலமார்பில் வீற்றிருக்கும்
பார்மகளே!
தன்னுலகோர் ஒளிவிளக்கேநாரணன் தன்னோடிணைந்ததிருமகளே
வண்ணமலர்த் திருமுகத்தாய் என்மனத்தே வருந்தி வணங்கித்
துதிக்கின்றேன். 111

எனக்கே தினிபெறும் செல்வம் என்றுனையே நம்பினேன் அன்னாய்;
கனகவல்லித் தாயாரே நின்கணவன் கனகமணித் தொட்டிலிலே
உறங்கினனே.
தனயனுக்குத் தாய்தந்தை துணையதாவர் தன்குழந்தை துயர்
போக்கிக் கருணைசெய்வர்
தனமென்னும் தாமரைவாழ் நாயகியே! தனித்துன்னை
வணங்கிடுவேன் மனத்தகத்தே! 112

வந்தென்னைக் காத்தருள்வாய் விமலனே! வானோர்க்கு நாயகனே!
பெருமானே!
உந்தியிலே வந்திட்ட பிரமன் உனக்கடிமைப் பட்டவனாய்
வழியறிந்தான்
வத்துன்றன் அடியடைந்த வீடணனும் வரம்பெற்றான் லங்கைக்கு
மன்னனானான்.
அந்தோநின் குற்றேவல் புரிவதற்கு அடியேனும் நின்னருளைப்
பெறுவதென்றோ? 113

குற்றமெல்லாம் குணமாகக் கொண்டிடுவாய் குறைவற்ற
செல்வமெலாம் தந்திடுவாய்
வற்றாத அருளதனை வானவர்க்கே வள்ளலே வழங்கினைமுன்
ராகவனே!
பற்றுக்குறை ஏதெனக்குப் பரந்தாமனே பாபமும் கடந்து பறந்திடு
கற்றேன்நின் திருநாமம் கற்றவனைக் காலனும் தொடுதற்
கஞ்சுவனே. 114

திருக்கண்டேன் அப்பனே செருக்கிளரும் திண்தோளும் திருமார்பும்
கண்டேன்
திருவடி திருமேனி கண்டுணர்ந்தேன் திருவோணத் தான்பெருமை
கண்டறிந்தேன்
திருக்கையும் சக்கரமும்கண்டேன் திருச்சங்கும் கதையும் கண்டேன்
திருவருளும் சரமும் கண்டேன் திருமாலே கண்டுகொண்டேன்
நின்னடியேன். 115

திருமங்கை மன்னவனும் மல்லைநின்றே தொத்தாரும் சோலை
யெனப் புகழ்ந்துபாடி
திருக்கண்ண மங்கைதனில் பத்தராவித் திருமாலே நின்றவூர்
என்றுபாட
திருவென்னும் எனைப்பெற்ற மச்சவத்ரி திருமார்பில் குடியிருக்கக்
கண்டேன்
பெருமையும் சிறுமையும் சமமதென்றே பேதையேன்
அடைந்திட்டேன் நின்னருளே! 116

கண்ணால் முகமடவார் மயக்கினர் கண்ணா உனைமறந்திடச்
செய்தனரே
எண்ணாத எண்ணங்கள் எண்ணி எண்ணி இளைத்துக் களைத்தேன்
பெண்ணென்ற பேயென்னைப் பற்றினள் பிடிபட்டுப் பித்தனானேன்
பேதையேன்
கண்ணா கட்டுண்டேன் பக்தராவி கட்டினைக் களைவாய்
கண்ணியனே! 117

ஆவியே! ஆருயிரே! என்னமுதே! ஆனந்த தேவா அன்புடையாய்!
தூவினேன் தூமலர் மணிவண்ணா தாவினேன் தாளினை
மரைக்கண்ணா!
பாவியேன் உணர்கிலேன் பாதமும் பற்றிலேன் பாவமேபுரிந்துளேன்
ஆவியைக் காப்பவ ரில்லையே ஆரா அமுதனே அலுப்பிடாய். 118

கண்ணன் மாமாயன் மாதவன் கருணையால் பாற்கடல் கடந்தவன்
வெண்மை அமுதம்பொங்கிடவே வெள்வரை தாங்கியே நின்றவன்
தண்டக வனத்தில் தானவரை தகர்த்த தசரத புத்திரனே!
கண்டரை மிண்டரை கானகத்தில் கடிந்தேஅபயம் தந்தவனே! 119

நினைக்கிலேன் எம்மானே! என்செய்கேன் நினைப்பின் வகையும் அறியேனே!
வினையே பிடித்த தென்றனையே விலக வழியும் செய்யாயோ?
அனைத்தும் நீயே வேறில்லை அத்தா என்றும் நித்தியனே!
முனைவன் நீயே அனைத்திற்கும் முதல்வா உனையே வந்தடைந்தேன். 120

மாதவா உன்னை மறந்திட்டேன் மாய வலையில் அகப்பட்டேன்
நாதா நலிந்தேன் தெளிவில்லேன் நன்மை அறியேன் நாரணனே
வேதக் கோனே ஸ்ரீதரனே வினதை வாகனம் ஊர்ந்தவனே
சேத மொழிக்கும் கேசவனே கெடவே என்னை விடுவாயோ? 121

எந்தன் பிறவிக் கடல்கடக்க இறையே உன்றன் அடியிணைக்கே
வந்தேன் கடக்கும் வழிகூறுய் வள்ளல் உனையே நம்பியுளேன்
எந்தை எம்மான் எளியேன்யான் என்னை ஆளும் பெருமானே!
அந்தோ வேறோர் துணையுண்டோ அறியேன் ஒன்றும் தெரிகிலனே! 122

மண்ணுக்கும் விண்ணுக்கும் ஒளிதருவாய் மதியாய்க் கதிராய் மிளிர்ந்திடுவாய்
சண்பகமே! மலர்ப்பதமே நற்பதமே! சக்கரத் தடக்கையா பத்மலோசனு
கண்ணனே கன்றுகள் பசிதீரக் கழல்நோகக் கானகம் சென்றவனே!
வண்ண வடிவம் வாடிடவே வழியில் நடந்த உனைக்கண்டேன். 123

பொன்னெுத்த மதில்களும் சூழ்ந்திடும் புனலரங்கம் பார்புகழ் தென்னரங்கம்
என்னப்பன் வீற்றிருக்கும் பெரியகோயில் எழிலும் தெளிநீர் பொங்கொலியும்
பன்னகமாம் மெல்லணைமேல் துயின்றவனே புனத்துழாய் நறுமலர் அணிந்தவனே!
என்னப்பா உன்னடி பணிகின்றேன் எளியேன் எனையே மறவாதே! 124

தெரியேன் பிழைசெய்தேன் சிறியேன் தென்னரங்கம் மேவும்
திருமாலே!
உறியார் நறுவெண்ணெய் புசித்தவனே! உவந்திட்ட தேவகிதன்
மைந்தனே
திரியும் களிறுடை மாமலையில் தினமும் அடியார்க் கருள்பவனே!
சிரிமங்கை மார்பினனே பேதைச் சிறியேன் உனதடி.
பணிந்திட்டேன். 125

தவமுனிவன் பின்சென்று அரக்கி தாடகையின் உயிர்மாய்த்த
வீரனே!
தவமுனி பத்தினிக்கருளிய தளிரடிகள் தம்மைக் கண்டு
கொண்டேன்
சிவதனுசை வளைப்பித்து அம்பேற்றி சீதையை மணம்புரிந்த
மணவாளா!
தவமுனிவன் பரசுராமன் வழிமறித்துத் தானளித்த வில்லதனை
முறித்தவனே! 126

வந்தென் மனம்புகுந்தாய் வேங்கடவா வழியறியேன்
வகையறியேன் வேறறியேன்
வந்தவனை யாரென்றும் நானறியேன் வானொத்த மேனியனே
பொற்கனியே
எந்தாய்நின் திருநாமம் அறிந்தபின் ஏக்கமுற்றேன் காணவே
ஆவலுற்றேன்.
நந்தகோபன் திருமகனே சிறியேன்யான் நாடினேன் நலிந்திடச்
செய்யாதே! 127

### எண்சீர் விருத்தம்

அப்பப்பா என்னப்பா ஆதரிப்பா ராரப்பா
அல்லலும் அலுப்பும் அடைந்தேன் பாரினில்
செப்பினேன் நின்நாமம் செய்யவளும் துணையாவாள்
சீதரா எந்நாளும் நின்னடியே சேர்ந்திடுவேன்
எப்பிறவி எடுத்தாலும் ஏதவத்தைப் பட்டாலும்
எந்தாய் நீகுற்றேவல் எனக்களிக்க வேண்டுகிறேன்
சொப்பனமே சொல்கின்றேன் சோத்தம் பிரானே
சோதனைகள் தந்தெம்மைச் சோர்வுறநீ செய்வாயோ? 128

மானேர் விழிகளார் மங்கையர் மொழிகளில்
மயக்கம் கொண்டே மாயவலைப்பட்டேன்
நானேதும் மறிந்திலேன் நாரணனைப் பாடிலேன்
நல்லவரோ டொருபோதும் கூடினவ னல்லேன்
வானேயும் வானவர்க்கு ஈசனே நின்நாமம்
வாயினால் பாடி மனத்திலே நினைந்திலேன்
நானே சிறுவன் வந்தடைந்தேன் தேவா!
நாயகனே! நலிந்திடச் செய்யாதே நாரணனே! 129

விமலனே நின்மலனே நீள்விசும்பும் அளந்தோனே!
வாமனனே! நெடுமாலே! திருமாலே! பெருமானே!
அமலனே அலர்மகள் நாதனே! செங்கண்ணா!
அருக்கனின் ஒளிமுகமே அழகிய நிலவொளியே!
அமருலகம் நிலவுலகம் அனைத்திற்கும் வித்தகனே
அச்சுதனே நிச்சலனே அழகுருவாம் நெடியோனே
அமரர்க்கு முதல்வனே அருள்பெற விரும்பினேன்
ஆராவமுதே உனதடி அடியனேன் தொழுகின்றேன். 130

குன்று குடையானே! கோகுலத் திடையருடன்
குழலை மாடுகின்ற கோபாலா மணிவண்ணா
அன்றொருநாள் பார்த்தனுக்குப் போர்ப்பணி புரிந்தவனே
அமர்ந்தங்கு சாரதியாய் அழகுறவே நின்றவனே
அன்பில்லா அந்தகன் கூட்டமாம் நூற்றுவர்
அடிமாண்டு போயொழியச் செய்தவனே என்கண்ணா
இன்று இந்திரன் சிறுவனுடன் பாகனை
எளியேன் திருவல்லிக் கேணிதனில் கண்டேனே! 131

சின்னதோர் மறியும் சீதைமுன் னேக
சிறியமான் மாயமான் எனவறி யாமல்
அன்னையும் மறிதனைப் பிடித்துத் தாவென
அருமை நாயகன் அடிபணிந் திட்டனள்
அன்னை அன்புக்கு அண்ணல் சிலைகொண்டு
அம்மான் பின்னர் அருங்கான் சென்றனன்
என்னப்பன் பொன்னப்பன் எய்த்தல் அடைந்து
எரியம்பு மறிமீது எய்திட்டான் ராகவனே! 132

ஏசுவள் மனைவி ஈசிப்போ வென்பாள்
என்னுடல் இளைப்பின் எட்டியே நிற்பாள்
கூசிடும் உடலும் குறைசேர் முகமும்
கோழையும் நீரும் பிணியும் கண்டேன்
வாசவர் குழலாள் வந்தே நெருங்காள்
வருந்திடப் பேசுவள் வெளியில் விரட்டுவள்
கேசம் வெளுத்திடும் முன்னமே அடியேன்
கரிவண்டு மதுவுண்ணும் வதரி வணங்குவேன். 133

கன்னியர்பால் விளையாட கண்ணா அன்று
காலிகள் பின்னடந்து கானம் சென்றாய்;
இன்னமுதிற் குறியேறி இடையர் வீட்டில்
இளைஞருடன் வெண்ணெய்தனை எடுத்தே உண்டாய்
இன்றெனக்கு இவ்வுலக இன்பம் வாய்ப்பும்
இறைவா என்றென்றும் வேண்டுகிலேன் அப்பா!
உன்னடிக்கே குற்றேவல் வேண்டினேன் சிறிதளவு
உலகளந்த பெருமானே! ஒன்றுக்கும் பற்றாதேன். 134

இளைத்த மனத்தனாய் இடையருத் துன்பம்
இழைத்ததோர் கஞ்சனை ஒழித்திட வந்தனை
வளைவினைக் கொண்ட வில்லினை எளிதாய்
வளைத்தே மைதிலி வண்கரம் பற்றினை
இளையாத திண்தோள் இணைந்தவிக் ரமனே!
இனத்தவர் வனத்தவர் யாவரும் துதித்தனர்
இளையவன் சிறியவன் எம்மான் கழலிணை
இதுவரை அறியா தின்றே பற்றினேன். 135

கோதை கொடுத்த மாலையை அரங்கனே!
கோமானே உனக்கு அணிவிக்க நினைந்தனன்
வேதனை அடைந்தனள் விரும்பியே மணந்திட
விடலை வடிவினைக் கொண்டே மயக்கினை
பாத மலரிணைப் பார்புகழ் கண்ணனே
பாவியேன் மறந்தேன் பண்பிலேன் இன்றே
நாதனே காதல் உற்றேன் உனையே
நாடினேன் வாடினேன் நலமருளாயோ? 136

அரவத் தணையாய் அன்ெருரு வேழம்
    ஆதி மூலமே என்றும் அழைத்திட
அரவிந்த லோசனு அண்டர்கள் மகிழும்
    அன்பனே அதற்கும் அபயம் அளித்தனே
பரமனே முதலையைப் பகிர்ந்தே கொன்றனே
    பாவ நாசனே! பார்புகழ் நேசனே
பரமேட்டி சிறியேன் பைங்கழல் தொழுதேன்
    பற்றும் ஒழிந்தே பரம்சேர்வ தென்ருே? 137

காயும் கனியும் துறந்துகால் நுகர்ந்து
    கடுந்தவம் புரிதல் வேண்டாம் மனமே
தீயும் வளர்த்துத் தேகம் தளர்ந்தே
    தெளிவிலாப் புலன்கள் தினம்தினம் நோக
வாயும் முணுமுணு வென்றே மந்திரம்
    வறிதே ஓதின் வருமோ நலமே
ஆயும் முதல்வன் அமர்ந்திட நெஞ்சில்
    அன்பால் வணங்கின் அவனருள் தருவனே. 138

தென்கலையும் வடகலையும் உணராத பித்தர்தாம்
    தேவர் பிரானைத் தெளிவின்றிப் பேசிடுவர்
உன்மத்தர் என்பேன் உணராத மிண்டரை
    உண்மை அறியா உலுத்தர் என மொழிவேன்
சின்னமாய்ப் பாதம் சேர்நாமம் இட்டவரை
    சிறுவர் பாதமற்ருேர் சிலரும் வழக்கிடுவர்
சின்னவன் உண்மை தெளிந்தே செப்பினேன்
    சீர்மிகும் உண்மை செகத்தீர் தெளிமின் 139

அம்புலி ரவிநிகர்க்கும் அணிமுகமும் மலர்க்கண்ணும்
    அகன்ற திருமார்பும் ஆற்றல்சேர் திண்தோளும்
செம்மலர் மேனியும் சீர்சான்ற பொன்முடியும்
    சாந்தமும் சற்குணமும் அமைந்தோனே! அப்பனே!
நம்பனே அடியார்க்கும் நாடும் முனிவர்க்கும்
    நன்னிலம் நலமுடன் அளித்தஎன் நாதனே
எம்மானே அடியேன் எப்பிறவி எடுத்திடினும்
    என்றும் நின்நாமம் ஏத்த அருள்புரிவாய்! 140

பொருந்த நமுசி திருவடி பற்றினன்
புவியை அளந்திட மறுத்தனன் வாமன
உருவாய் நின்றள வென்றே தடுத்தனன்
உரிமை உனக்கில்லை என்றே மொழிந்து
வருந்து மவனை வானத் துயர்த்தியே
வாழ்வளித்திட்ட வரதனே உன்றன்
திருவுடை நாமம் தெளிந்தே சொன்னேன்
திருவேங் கடமும் தேடியே வந்தேன். 141

மந்திகள் பாயும் மாமலை செல்லினும்
மனமுன் மாயம் அறிந்திடப் போமோ?
அந்திப் பொழுதில் அவுணன் உரத்தை
அரியாய் வந்தே அழித்தஎம் ஐயனே?
தந்தைக் கிணங்காத் தனயனுக்குதவிடத்
தடித்தவோர் தூணைத் தகர்த்தே தோன்றினை
எந்தாய் வந்தாய் என்னுளம் புகுந்தாய்
என்னைவிட்டெங்கும் ஏகிடு வாயோ? 142

சாதியும் மதமும் சாற்றுகின்ற மானிடரே
சாதிமத பேதமில்லை என்பதையும் கேளீரோ?
வேதியர் குலமென்று வேதங்கள் சொன்னதில்லை
வாய்மொழியில் தீங்கில்லார் வேதியரே வாய்மையினால்
பதிகங்கள் பாடினால் பார்ப்பனரேஎப்பொழுதும்
பாரெல்லாம் பழுதின்றி வாழ்த்துபவர் பார்ப்பனரே
விதித்தனர் பேதங்கள் வீணாக இவ்வுலகில்
விளங்கி அடியேனும் வேதனையுமடைந்தேனே! 143

தாய்இனம் மறந்து தரமற்ற மானிடர்
தாழ்வான நெறியினில் தருக்குடன் செல்கிறார்
நாய்க்கொரு கவளம் இட்டே கள்வர்கள்
நாட்டினிற் களவிடச் செல்குவர் அன்னவர்
பேய்க்குணம் மேலிட்டுப் பிறநெறி செல்பவர்
பேருலகதனில் பெரும்பா தகரே
தாய்க்குலம் மறவேன் தாழ்வினை செய்யேன்
தாமோ தரனின் தாளிணை பணிவேன் 144

அறுசீர் விருத்தம்

குற்றமும் பாவமும் செய்திட்டேன் குதிரும் காலமும் அறிகில்லேன்
அற்றேன் ஒழுக்கம் அண்ணலே அடியிணைபணிந்தேதொழுகின்றேன்
பற்றேன் பாரளந்த பாதமும் பரனே கருட வாகனனே
சிற்றுதே என்றென்றும் சேவகனை சிறியேன் குற்றேவல்
வேண்டினேனே! 145

எவ்வுளும் இருப்பனே என்னப்பன் எல்லாம் நிறைந்த
ஏர்முகத்தோன்
அவ்விடம் தீர்த்தமும் கோயிலுடன் அவ்வியக்த மூர்த்தியும்
அமர்ந்துளனே
திவ்விய ரூபன் திருமாலின் திருத்தல மகிமை அறியேனே
இவ்வுல் குண்ட பெருமானின் இருப்பிடம் நினைந்தே
தொழுகின்றேன் 146

புண்ணிய துவாரகை வாழ்கண்ணன் பூரணன் மதுரா புரிமன்னன்
வெண்ணெய் உண்ட மாமாயன் வருணன் செருக்கை அடக்கியவன்
வண்தோள் விரிமார் புடையவனே வணங்கற்குரிய பெருமானே!
விண்ணோர்க் குகந்த நெடியோனே விரைந்தே உன்னைத்
தொழுகின்றேன், 147

பிறப்பும் இறப்பும் விதியாக பெருவர மளித்த பெரியோனே!
பிறவா மருந்தும் தருகின்ற பேதா பேதம் அற்றவனே!
குறளாய் விசும்பை அளந்தோனே! குவலயம் உய்யக்
கொண்டவனே
கறவை இனங்கள் காத்தவனே காணவே வந்தேன்காரணனே! 148

கோதையெனும் குணவதியை மணந்திடக் கோவிந்தனே
கைத்தலம் பற்றினையே
வேதம் விரித்த வில்லிநகர் விளக்காய் நின்ற வள்ளலே
மாதவனே ஆயர்க்கு நாயகனே! மாந்தளிர் மேனி மாயவனே!
சீதரனே உனக்கே அடிமை செய்திட சிறியேன் விழைகின்றேன்.149

கன்னியர் வாழும் தென்னரங்கம் காவிரி சூழும் புனலரங்கம்
மன்னிய மதில்கள் சூழ்கின்ற மலரார் சோலை வாழ்திருவை
மன்னன் விடணன் தொழுதனனே மானிடர் புகழும் இடமதனில்
சின்னஞ் சிறியேன் வந்துற்றேன் சிறப்பினைக் கண்டே
தொழுகின்றேன் 150

எல்லேவிட்டு ஆவியும் பிரிந்திடும் எமனுக்குக்கட்டுண்டும்இருக்குமே
தொல்லேதான் அடையும் ஜீவன் தொடர்ந்து பிறப்பினும்
எம்மானே!
அல்லல் படாவண்ணம் காத்திடாய் அரங்கத்தம்மானேஅமலனே!
எல்லாம் உன்க்கடிமை செய்திட்டேன் எனக்கோர் பிறவி இனி
வேண்டேன் 151

விட்டது ஆவியென்று உடலே வெளிப்புறம் கிடத்துவர்
பிணமென்றே
கட்டுவர் கடத்துவர் என்னேயும் காட்டினுக் கெடுத்தே செல்லுவர்
கட்டை எருமுட்டை தேடுவார் கோடிமூடி கோவிந்தாஎன்பார்கள்
சுட்டெரிப்பதன் முன்னமே இறைவாநான் சொல்ல நினேத்ததைச்
சொல்கின்றேன் 152

செத்த பிணத்தைத் தீட்டெனச் சுற்றிலும் நின்றே பார்த்திடுவர்
கத்துவர் அப்பப்பா என்னப்பா கடந்து போனீரோ ஏதேனும்
வைத்த இடமும் சொல்லெனவே வளர்த்த பிள்ளேகள் அழுதிடுவர்
செத்தே மடிவதன் முன்னமே சிறியேன் சொன்னேன் உன்னிடமே

துதிகள் பாடினேன் வேங்கடம் தொடர்ந்தேவந்தேன் உன்னிடமே
கதிர்மிளிரும் மதிமிளிரும் இடமே காணத் தேடினேன்நாடினேன்
மதிமயக்கம் கொண்டு சோர்வடைந்தேன் மலேமீது நின்றவனே
எனக்கினிக்
கதியேது பதியேது நாதனே! கணமேனும் உனேவிட்ட கன்றிடேன்.

அரியென்றும் அரனென்றும் வழக்கிடுவோர் அறிவிலிகள் அவர்
தாமும் மூடராவர்
சிறியவன் சொல்கின்றேன் மானிடரே! சிறுவன் அரியெனக்
கூறிடவே
அறியவன் தூணிடைத் தோன்று அருளினன் அச்சேவை போலே
தெரிந்து நானும் தேடாமல் தெளிந்தேன் வணங்கி நின்றேனே 155

வச்சமெனில் வாச்சல்யம் அன்பாகும் வச்சமது முலேமுட்டிப்
பாலருந்த
பச்சிளம் கன்றேடி நிற்குமே பசுவும் அதனே விரும்புமே
உச்சியும் முகரும் நாவதனுல் உடலேத் தடவிப் பால்சொரியும்
இச்சை உடனே அழைக்கின்றேன் எனக்கும் அருட்பால்தாராயோ?

செம்மலர் முகமதைக் காணவே சேயிழை யார்கள் நின்றனர்
எம்மான் எனக்குள் இருக்கின்ற என்மன இருளும் அகலாதோ
கைமா ஒழித்தே கஞ்சன்றன் கருத்தைப் பழித்த கார்வண்ணு
அம்மா துயரம் துடைத்தோனே அடியேன் கவலை தீராயோ?

பொய்யான வாழ்க்கையை மெய்யென் றுணர்ந்தோர்
புத்திரர் பட்டம் பெற்றிடச் செய்குவர்
பொய்யார் நாட்டினில் புகுந்திடும் மருகியும்
பொல்வாங்கு பேசுவள் பொய்க்கோள் கூறுவள்
அய்யனே வீட்டினில் ஆரையும் சேர்த்திடாள்
அஞ்சா நெஞ்சுடன் அதட்டியே பேசுவாள்
மெய்யனே,ஈதென்ன வாழ்க்கை சிறியேன்
மாதவனடி சேர்ந்தேன் மற்றவை மறந்தேன் 158

நாற்சீர் விருத்தம்

கண்ணு உனது திருமுகம் கண்டேன்
கண்ணு உனது திருக்கரமும் கண்டேன்
கண்ணு உனது திருத்தாளும் கண்டேன்
கண்ணு உனது சங்குசக்கரம் கண்டேன் 159

சின்னசாமிக் கெல்லை குறுகிட நமன்றமர்
சிதரா பற்றிடத் தொடர்வர் என்னையே
சின்னசாமிக் குறக்கம் சேர்ந்திடும் போது
சிரமும் கரமும் சாய்ந்தே போய்விடும்
சின்னசாமி உணரேன் தவிப்பேன் எனது
சித்தமும் சிதறும் நினைக்கமாட்டேன்
சின்னசாமி நமனுல் சேர்ந்திடும் முன்னமே
சிறிதே வருகெனச் சிதரா துதித்தேன் 160

சுந்தரத் தெலுங்கனுயினும் சுவைசே ரின்பத் தண்தமிழ்மொழியில்
எந்தையை தந்தையை என்னுளம் கவர்ந்த பிறவியரும் மருந்தினை
இன்னிசைப்பாக்களில் சின்னசாமிதந்திட்டஒருநூற்றறுபதினையும்
இன்புறப் பாடியே இன்னருள் பெற்றுப் பெரும்பயன் எய்துவீரே.

ஆழ்வார் திருவடிகளே சரணம்
ஸமஸ்தா லோகா சுகினோ பவந்து
சுபம்! சுபம்! சுபம்!

லங்குபல்லி சின்னசாமி நாயுடு
லக்ஷ்மிபுரம்
திருநின்றவூர் R. S.

இப்புத்தகம் கிடைக்கும் இடங்கள் :

Dr. C. Srinivasan B.A., M.B.B.S.
Srinivas Nursing Home
No 96 Akkyya Naidu Street
Tiruthani
Chengalpet Dist

N. Dananjai
Block AC-82
Anna Nagar
Madras-40

N. Perumal
No 23—11th East Cross Street
Gandhi Nagar
Vellore 6
N. A. Dist.

B. T. Alwar Naidu
18 East Club Road
Shenoy Nagar
Madras-30

